ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபை வெளியீடு—3

॥ ब्रह्मविदाप्नोतिपरम् ॥

ஸ்ரீ பாஸ்கரராயரால் இயற்றப்பட்ட

# ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யம்

மூலமும்

பிரஹ்மஸ்ரீ, அருட்கவி, ந. சுப்ரமண்ய அய்யர்

அவர்களால் இயற்றப்பட்ட

## "தீபிகை"

என்னும்

## தமிழ் விருத்தியுரையும்



ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபை

சென்னை

சபை வெளியீடு—3

श्रीरस्तु

श्रीभास्कररायप्रणीत

# श्रीवरिवस्यारहस्यम्



# ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யம்

## மூலமும்

ஸ்ரீ பிரஹ்மவித்யா விமர்சினீ ஸபையின்
அக்ராஸனரும் ஸ்தாபகருமாகிய

பிரஹ்மஸ்ரீ, அருட்கவி, ந. சுப்ரமணிய அய்யர்

அவர்களால் இயற்றப்பட்ட

## "தீபிகை"

என்னும்

## தமிழ் விருத்தியுரையும்

ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபையாரால்
வெளியிடப்பட்டது.

சென்னை

1938



[ விலை ரூ. 1.

श्री

ललिता महात्रिपुरसुन्दर्यै नमः




॥ ब्रह्मविदाप्नोतिपरम् ॥

चतुर्भुजे चन्द्रकलावतंसे कुचोन्नते कुङ्कुमरागशोणे ।
पुण्ड्रेक्षु पाशाङ्कुशपुष्पबाणहस्ते नमस्ते जगदेकमातः ॥

# ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபை.

## சென்னை.

### நோக்கங்கள்



1. மேற்படி ஸபையைச் சார்ந்த அங்கத்தினர்களுக்குப் பிரஹ்மவித்தை யென்னும் ஸ்ரீவித்தையின் விமர்சத்தில் உபந்யாஸங்களின் மூலமாய் ஊக்கத்தை உண்டாக்குதல்.

2. இச் சபையின் ஸ்தாபகரும் அக்ராஸனருமாகிய, பிரஹ்மஸ்ரீ ந. சுப்ரமணிய அய்யர் அவர்களாலும், அவரால் ஒப்புக்கொள்ளப்பட்ட இதர ஆசிரியர்களாலும் இயற்றப்பட்ட பிரஹ்மவித்யா ஸம்பந்தமான கிரந்தங்களை வெளியிடுதல்.

3. அங்கத்தினர்களுக்கு, ஸ்வஸ்வரூப அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டு அத்தியந்த ரஹஸ்ய விஷயங்களைப் போதித்து உதவி புரிதல்.

ஷை ஸபையைப்பற்றிய இதர விஷயங்களுக்கு அடியில் கண்ட விலாஸத்திற்கு எழுதி தெரிந்துகொள்ளலாம்.

மானேஜர்,

ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ சபை,

178, லாயிட்ஸ் ரோட்

ராயப்பேட்டை, சென்னை.

# விஷய ஸூசிகை

விஷயம் பக்கம்

முன்னுரை



முதலாவது அம்சம் :—

இரண்டாவது அம்சம் :—

# பிழை திருத்தங்கள்.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 6 | नादः ॥ | नाथः ॥ |
| xiv | 3 | नित्य | नित्यं |
| 2 | 21 | विबुध | विबुध |
| ,, | ,, | पदाने | पदानेऽ |
| 4 | 15 | सर्बे | सर्वे |
| 6 | 9 | तायां: | तायाः |
| 7 | 21 | பேதத்தின் | பிரபஞ்சத்தின் |
| 10 | 18 | व्यवहारः | व्यवहारः |
| 17 | 25 | स्फृशति | स्पृशति |
| 20 | 25 | विन्दु | बिन्दु |
| 22 | 8 | பிந்து வோடு | பிந்துவோடு |
| 24 | 18 | 17½-18 | 17-18 |
| 30 | 2 | அவஸ்வதா | அவஸ்தா |
| 31 | 24 | पञ्जके | पञ्चके |
| 34 | 16 | அகிக | அதிக |
| 36 | 21 | पोक्तं | प्रोक्तं |
| 37 | 11 | मूलधारे | मूलाधारे |
| ,, | ,, | द्रयु | द्रयु |
| ,, | 12 | ऐव | एव |
| ,, | 15 | एकाभावना | एकभावना |
| 38 | 2 | விஷூவம் | விஷுவம் |
| 40 | 12 | चन्द्रकं | चन्द्रकं ॥ |
| 47 | 10 | श्रेष्टं | श्रेष्ठं |
| 51 | 5 | परमात्म | परमात्मा |

| | | | |
|---|---|---|---|
| 66 | 20 | द्वये | द्वये |
| 75 | 10 | भेंदाभावा | भेंदाभावा |
| 76 | 12 | पीढ | पीठ |
| 77 | 21 | काष्टा | काष्ठा |
| 79 | 3 | निष्टां | निष्ठां |
| ” | 10 | स्वाधिष्टाना | स्वाधिष्ठाना |
| ,, | 12 | प्रतिष्टा | प्रतिष्ठा |
| 80 | 15 | निष्टां | निष्ठां |
| 84 | 10 | गृह | गृहे |
| ,, | 11 | च्छी | च्छ्री |
| 86 | 3 | चके | चक्रे |
| 87 | 21 | संमवम् | संभवम् |
| 90 | 17 | *கின்றனர்* | *கின்றன.* |



श्रीभासुरानन्दापरनामधेय श्रीभास्कररायमखी

ओं - ह्रीं

# முன்னுரை

सतुजयतुमहात्मा योऽदर्याश्रमस्थः ।
सकलभुवन कर्त्र्याप्रेरितस्सन्नियत्या ।
श्रुतिविहितसुबोधंदत्तवान् मे त्रिवेण्यां ।
गळितनिखिलमोहः **श्रीगुहानन्दनादः ॥**

## 1. நூலின் மஹிமை

"ஸ்ரீவரிவஸ்யாரஹஸ்ய" மென்னும் இச்சிறந்த நூலானது ஸ்ரீ பாஸ்கரராயமகி என்னும் ஸ்ரீ பாஸுராநந்தநாதரால் இயற்றப்பட்டதாகும். வரிவஸ்யை ஶுஶ்ரூஷை, பரிசர்யை, உபாஸனை யென்பன ஒருபொருட் பதங்களாகும். ஆகவே வரிவஸ்யா ரஹஸ்யமென்பது உபாஸனையின் ரஹஸ்யம் என்னும் அர்த்தமுடையதாகின்றது.

उपासनं नाम यथा शास्त्रमुपास्यस्यार्थस्य विषयी करणेन सामीप्यमुपगम्य तैलधारावत् समान प्रत्ययप्रवाहेन दीर्घकालं यदासनं तदुपासनमाचक्षते-गीता 12-3-शं-भाष्यं ।

உபாஸனம் என்பது, குருசாஸ்திர ஸம்பிரதாயத்தை யநுசரித்து ஶ்ரோத்ரம், சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களைச் சப்தம், ரூபம் முதலிய விஷயங்களிலிருந்தும் திருப்பி மனத்தில் சேர்த்து அந்தமனத்தைப் புத்தியில் ஐக்கியப்படுத்தி அந்தப் புத்தி விருத்தியை ஶ்ருதி ஸ்ம்ருதிகள் போதிக்கும் வண்ணமாய் உபாஸிக்கத்தக்க சித்சக்தியில் பொருத்தி, இடையிடையே வேறு எண்ணங்களின்றி, நெடுநாள், நிரந்தரமாய் ஆதரவோடு உபாஸ்யப் பொருளைப் புத்தி விருத்தியில் நிலை

பெறச் செய்தலாகும். "நான் மனுஷ்யன்" என்னும் எண்ணம் நம்மனோர் யாவர்க்கும் இயல்பாய் இருப்பதுபோன்று, உபாஸிக்கப்படும் "சித்சக்தியே நான்" என்னும் திடமான எண்ணம் ஏற்படும் வரை உபாஸனை செய்தல் அவசியம் என்பது உபநிஷத் சித்தாந்தமாம்.

இத்தகைய உபாஸனையின் ரஹஸ்யத்தைக் கரதலாமலகம்போல் கூறும் பெருமையையுடையதிந்நூலாகும். சித்சக்தியின் உபாஸனையின் ரஹஸ்யம், வேதம், வேதாந்தம், ஆகமங்கள், புராணேதிஹாஸங்கள் முதலியவற்றில் நன்கு பிரதிபாதிக்கப்பட்டுள்ளது. மேற்கூறிய சாஸ்திரங்களின் படி பிரஹ்மாபின்ன சித்சக்தியுபாஸனை இருவகைத்தாகும்; அவை பாஹ்யம் ஆந்தரம் என்பனவாம். பாஹ்ய உபாஸனையில் சக்ரங்கள், பிரதிமைகள் ஸாளக்ராம பாணலிங்கங்கள், உதகும்பம், சந்த்ரபிம்பம் முதலியவைகளும் கந்த, புஷ்ப, தூப, தீப, நைவேத்யாதி உபசாரங்களும் வேண்டப்படுவனவாகும். ஆந்தர உபாஸனைக்கோவெனின், லிங்கங்களும் உபசாரங்களும் அவசியமில்லை; மற்றோ வாக்கினால் துதித்து மந்த்ரத்தை ஜபித்து, மனத்தினால் தியேய ரூபத்தைச் சாஸ்திரங்கள் கூறும் வண்ணம் தியானித்தலாகும். இந்த ஆந்தர உபாஸனையும் மூன்றுவகைப்படும். முதலது ஸ்தூலம்; இரண்டாவது ஸூக்ஷ்மம்; மூன்றாவது பரம் (சிரேஷ்டம்).

1. ஸ்தூல ஆந்தர உபாஸனை:—இது உபாஸ்யத்தின் ஸகுண ஸாகார ரூபத்யானமாகும்: இது சாஸ்திர ப்ரதிபாத்யமானது. கரசரணாதி அவயவங்களோடு கூடியது. இது மந்த்ர ஸித்தியை யுடையவர்களுக்குப் பிரத்யக்ஷமாகும்.

2. ஸூக்ஷ்ம ஆந்தர உபாஸனை:— இது உபாஸ்ய தேவதையின் மந்த்ராத்மகமான எழுத்துக்களின் ஸ்வரூபமே

யாகும். அ (अ) காரம்முதல், க்ஷ (क्ष) காரம் இறுதியாயுள்ள ஐம்பத்தோரக்ஷரங்களும் ஸர்வமந்த்ராத்மக வடிவமாகும். இது ஸ்ரோத்திரேந்திரியத்திற்கு விஷயமாவதாம். இத்தகைய ஸூக்ஷ்மரூபமானது மந்த்ர த்ரஷ்டாக்களாகும் ரிஷிகளுக்குப் பிரத்தியக்ஷமாகுமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

3. பராரூப ஆந்தர உபாஸனை:—இது நிர்விகல்ப ஞான ரூப சைதன்ய மாத்திரத்தை அறியும் சுத்த ஸத்வ ப்ரதான மனோ விருத்தியோடு கூடியதாகும். மேற்கூறிய ஸ்தூல, ஸூக்ஷ்ம,பராரூப மூன்றுவித ஆந்தர உபாஸ்திகளுக்கும் அப்பாற்பட்டது, மனோவாசாமகோசர, அத்விதீய பிரஹ்மாபின்ன ஆத்ம ஸ்வரூப சித்சக்தியாகு மென்பது சிந்தையாத ஸித்தாந்தமாம். "आत्मलाभान्नपरं विद्यते" என்னும் பிரமாணப் படி ஆத்ம ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டே ஸகல சாஸ்திரங்களும் பரமேஶ்வரனால் கூறப்பட்டனவாகும். பிரஹ்மாபின்ன ஆத்மஸாக்ஷாத்கார ஸாதனங்களாகும் பதினுன்கு வித்தைகள் கடலைப்போல் அதிக விஸ்தாரமாயும் கம்பீரமாயும் இருப்பதனுல், அவற்றினின்றும் ஸர்வ சாஸ்திர ஸாரபூதமாயும், பிரஹ்மாபின்ன ஆத்ம ஸாக்ஷாத்கார ஸாக்ஷாத் ஸாதனமாயுமுள்ள காயத்ரீ உபாஸனையானது கூறப்பட்டுள்ளது. இந்த காயத்ரீ உபாஸனையும், "த்ரிபதா—சதுஷ்பதா" என்னும் பாகுபாட்டால் ஸ்பஷ்ட ரூபமாயும், அஸ்பஷ்ட ரூபமாயும் உள்ளது. ஸ்பஷ்டாஸ்பஷ்ட ரூபமான முப்பத்திரண்டு அக்ஷரவடிவ நான்கு பாதங்களோடுள்ள பூர்ணகாயத்ரியே, பஞ்சதசீ மந்த்ராத்மக சித்சக்தி வடிவமென்று ஸங்கேத(கூட)மாயும், ரஹஸ்யமாயும் வேத வேதாந்தங்கள் கூறுகின்றன. இத்தகைய பஞ்சதசாக்ஷரியே ஸ்ரீ வித்தை அல்லது பிரஹ்ம வித்தை யென்று கூறப்படுவதாகும். இந்த வித்தை, ஸர்வா னர்த்த நிவர்த்தி, பரமானந்தப்ராப்திவடிவ மோக்ஷத்தின்

பொருட்டு, "कर्णात्कर्णोपदेशेन संप्राप्तमवनीतलम्" என்னும் பிரமாணத்தின்படி, குருசிஷ்ய ஸம்ப்ரதாயத்தில் உபதேசிக்கப்பட்டு வருகின்றது. பதினைந்து அக்ஷர வடிவ பிரஹ்மவித்தையிலுள்ள ஒவ்வோரக்ஷரத்திற்கும் அத்யாத்ம, அதிபூத, அதிதைவத ஸ்வரூபங்களும், அததற்குரிய அர்த்தமும் உபநிஷத்துக்களிலும், வித்யா தந்த்ரங்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. ஆந்தரவரிவஸ்யையில், ஸ்தூல ரூபத்யானத்தின் தத்வமும், ஸூக்ஷ்ம ரூபமந்த்ரத்தின் அர்த்தமும், பராரூப சைதன்ய ஸ்வரூபமும் கூறப்படல் வேண்டுமல்லவா? ஆதலின் இந்நூலில் த்யான மந்த்ர, சைதன்ய பாவரூப ரூப தத்வமானது நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.

இச்சிறந்த கிரந்தத்தின் கர்த்தாவாகும் ஸ்ரீ பாஸுரானந்தநாதர் பத (வியாகரணம்), வாக்கிய (பூர்வோத்தர மீமாம்ஸைகள்) பிரமாண (நியாய வைசேஷிக) பாரங்கத (கரை கண்டவ)ராதலின், ஸகலவேத வேதாங்க, உபநிஷத் புராண இதிஹாஸ தர்ம சாஸ்திர ஆகமங்களின் ஸாரமாய் இதை யியற்றியுள்ளார்.

இதில், பஞ்சதசீ மந்த்ரோத்தாரம், வர்ணங்களின் ஸ்வரூபம், உச்சாரணையின் பிரகாரம், சப்தங்களின் பிறப்பிடம், பிரயத்தினங்கள், உச்சாரணையின் காலநிஷ்கர்ஷை முதலியனவும் ஜபம் செய்யும்போது பாவிக்கத்தக்க சூன்ய ஷட்கம், அவஸ்தா பஞ்சகம், விஷுவத்ஸப்தகம் முதலியவைகளும் விளக்கமாய்க் கூறப்பட்டிருக்கின்றன. அன்றியும், திரிபுராதாபினீ உபநிஷத்தில் ப்ரதிபாதித்துள்ளபடி காயத்ரீயோடு ஸ்ரீவித்தைக்குள்ள ஐக்கியமும், அர்த்தக்ஞானத்தின் அத்தியாவசியகத் தன்மையும், காயத்ரீ அர்த்தம், பாவார்த்தம் முதலிய பதினைந்து விதமான அர்த்தங்களும் ப்ரதிபாதிக்கப்பட்டுள்ளன. இந்த நூல் இரண்டு அம்சங்களோடு

கூடியதாகும். முதலம்சத்தில் 53 ஶ்லோகங்களும் இரண்டாவதில் 114 ஶ்லோகங்களும் உள்ளன. இந்நூல் அளவாற் சிறியதாயிருப்பினும் "தத்வமஸி" யென்னும் மஹாவாக்யத்தின் அகண்டதாத்பர்யமாகும் பிரஹ்மாத்மைக்கிய ரூப மஹத்தாகிய பயனைத்தருதலின், மஹிமையாற்பெரிதாயுள்ளதாகும்.

ஆந்தர உபாஸனையின் உட்கருத்தை யறியாமல் ஆடம்பரத்தோடு பாஹ்ய பூஜையைச் செய்யும் மந்தபுத்தியையுடைய உபாஸக ஆபாஸர்களை, இந்நூலாசிரியர் வெறுப்பது கவனிக்கத்தக்க விஷயமாகும். இதற்கு, நூலாசிரியராலேயே "பிரகாசம்" என்னும் பெயரிய ஒரு சிற்றுரை இயற்றப்பட்டுள்ளது.

ஸ்ரீ பாஸ்கரராயர், தாம் இயற்றியுள்ள ஸ்ரீ வித்யா சாஸ்திரங்களில் அடிக்கடி இந்நூலைப்பற்றிக் கூறுவதாலும், இந்நூலில் தாமியற்றியுள்ள இதரக் கிரந்தங்களைப்பற்றிப் பிரஸ்தாபிக்காததாலும், இதுவே இவரால் இயற்றப்பட்ட ஸ்ரீ வித்யா சாஸ்திரங்களில் முதலாவதாயிருக்கவேண்டுமென ஊகிக்கத்தகும்.

## 2 பாஸ்கரராயரின் ஜீவியகாலம்

இவ்வாசிரியர் தம்மால் இயற்றப்பட்ட "ஸௌபாக்ய பாஸ்கர" மென்னும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் இறுதியில் மேற்படி பாஷ்யமானது விக்ரமாப்தம் (मोदच्छायामितायाम्) 1785-க்குச் சரியான கி. பி. 1729ஶு காளயுக்தி, சரத்ருது, ஆஶ்வீஜ சுக்ல நவமியன்று முடிவு பெற்றதாகவும், ஸேதுபந்தமென்னும் வியாக்யானம் (शकेशर्मचापे) சகம் 1655-க்குச் சரியான கி. பி. 1733ஶு சிவராத்ரி புண்ய காலத்தன்று பூர்த்தி செய்யப்பட்டதென்றும் கூறியிருக்கின்றனர். ஆதலின், பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பாதி

பாஸ்கரராயரின் வியாபகமான காலமாயிருக்கலாமெனயூகித்தல் வேண்டும். ஆகவே, இவரதுகாலம், பதினேழாம் நூற்றூண்டின் கடைசியிலிருந்து பதினெட்டாம் நூற்றூண்டின் மத்யகாலம் வரையில் இருக்கலாமென்று பல ஆராய்ச்சிகளின் மூலமாய்த் துணிந்து கூறலாம். உமாநந்த நாதரென்னும் ஜகன்னாத பண்டிதர் பாஸ்கரராயரது சிஷ்யர். இவர் நித்யோத்ஸவமென்னும் ஒரு பத்ததியை (பூஜாகல்பத்தை) யியற்றித் தனது குருவாகிய பாஸ்கரராயரது அநுமோதத்தையும் பெற்றிருந்தார். அந்த பத்ததி க்ரந்தம், கலியாதி (रसार्णवकरिवेदमितेषु) 4876 வருஷங்களுக்குச் சரியான கி. பி. 1775ஞல் முடிவுபெற்றதாகத் தெரிகிறது. இதுவும், ஸ்ரீ பாஸ்கரராயரது காலத்தை ஒருவாறு தீர்மானிக்கின்றது. ஆகவே, இவரது காலம் கி.பி. 1690 முதல் கி. பி 1785 வரையில் இருக்கலாம், என்று ஒருவாறு தீர்மானிக்கக்கூடும்.

ஸ்ரீ உமாநந்த நாதரால் இயற்றப்பட்ட ஸ்ரீ பாஸ்கர *விலாஸத்திலிருந்து ஸ்ரீ பாஸ்கரராயரின் சரித்திரம் ஒருவாறு ஊஹிக்கத்தக்கதாய் இருக்கின்றது. இதை அநுஸரித்தும், சென்னை அடையாறு வஸந்தா அச்சியந்திரசாலையில் வெளிப்படுத்தப்பட்டுள்ள ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யத்தின் முதலில், ஸ்ரீமான் R. கிருஷ்ணஸ்வாமி சாஸ்திரிகளால் எழுதப்பட்ட பாஸ்கரராயரது சரித்திரத்தை (ஆங்கிலத்திலுள்ளதை) அநுஸரித்தும், இந்நூலாசிரியரின் சரித்திரம் ஈண்டு சங்கிரகமாய்க் கூறப்படுகின்றது.

## 3 ஸ்ரீ பாஸ்கரராயரின் சரித்திரச் சுருக்கம்

இவர் மஹாராஷ்டிர தேசத்தில் பாகா என்னும் நகரத்தில் இன்றைக்குச் சுமார் 240 வருஷங்களுக்குமுன் அவதா

---

* குறிப்பு—நிர்ணயஸாகர ப்ரஸ்-பூனு.

ரம் செய்தார். இவரது பெற்றோர்கள் கம்பீரராய ரேன்பவ ரும் கோனமாம்பாவும் ஆவர். இவர் விஸ்வாமித்ர கோத்ரத் தைச் சார்ந்தவராவர். பாஸ்கரராயரின் பிதாவான கம்பீர ராயர் ஒரு சிறந்த வித்வானுவர்; நல்லொழுக்கத்தோடும் ஞான நிஷ்டையோடுங் கூடியவர். ஒருசமயம், இவரை விஜயநகரத்து அரசன், தன்சபையில் மஹாபாரதத்தைப் பிரவசனம் செய்யும்படி கேட்டுக்கொண்டார். இவரும் அர சனது வேண்டுகோளுக்கிணங்கி அதற்கு ஒத்துக்கொண்டு பிரவசனம் செய்துகொண்டுவந்தார். இவரது பிரஸங்கத் தைக்கேட்டு அரசன் மகிழ்ந்து இவருக்கு "பாரதி" என்னும் பட்டப்பெயரைப் பரம்பரை யுரிமையோடு அளித்தனர்.

தனது அருமைப்புதல்வனும் பாஸ்கரராயருக்கு உபநயனத் திற்குரிய வயது வந்தவுடன், கம்பீரராயர் தனது மகனைக் காசிக்கு அழைத்துக்கொண்டுசென்று அங்கேயே உபநயனம் செய்வித்து ஸ்ரீஸரஸ்வதி மஹாமந்த்ரத்தையும் உபதேசித்து ஸ்ரீ நரஸிம்ஹாத்வரி யினிடத்தில் அத்யயனம் செய்யுமாறு விட்டனர். நரஸிம்ஹாத்வரியும் பாஸ்கரராயருக்கு அஷ்டா தச மஹாவித்தைகளையும் கற்பித்துக்கொடுத்தனர். பாஸ்கர ராயரும், ஸ்ரீஸரஸ்வதீ தேவியின் அருளால் ஸகல கலைகளி லும் ஸர்வக்ஞத்தன்மையை, அதிபால்யத்திலேயே யடைந் தனர். பின்னர், பாஸ்கரராயர் ஸ்ரீ கங்காதரவாஜபேயி அவர் களிடத்தில் கௌட தர்க்கத்தை யப்பியஸித்து அதிலும் தேர்ச்சி யடைந்தனர். பிறகு பாஸ்கரர் ஆநந்தீ என்னும் நற்குலமடந்தையை மணந்து பாண்டுரேங்கன் என்னும் ஆண் மகவைப் பெற்றனர். அதர்வண வேதத்தை யத்யயனம் செய்யும் சம்ப்ரதாயம் விச்சின்னமாய்ப் போன காரணத்தால் அந்தவேதம் பிரசாரத்தில் இல்லாமையைக் கருதி மறுபடியும் அதை உத்தாரணஞ்செய்யும் பொருட்டுத்தானே அதை அத் யயனம்செய்து, எண்ணிறந்த சிஷ்யர்களுக்கும் சொல்லி

வைத்தனர். தேவீபாகவத மஹாபுராணத்திற்கும், இராமாயணத்தின் எட்டாவது காண்டமாகிய அத்புதகாண்டத்திற்கும் இவருடைய காலத்தில் இவரால்தான் பலரால் நன்கு மதிக்கப்படும் பாக்யம் ஏற்பட்டு பிராபல்யமுண்டாயிற்று. ஸ்ரீ பாஸ்கர ராயருக்கு ஸ்ரீவித்யா பூர்ணாபிஷேகம் செய்து வைத்தவர் ஸ்ரீசிவதத்த சுக்லர் என்பவராகும். சிவதத்த சுக்லரது தீக்ஷாநாமம் ஸ்ரீ பிரகாசாநந்த நாதரென்பதும், அவரது குரு ஸ்ரீ ஆநந்தாநந்த நாதரென்பதுமாகும். பாஸ்கர ராயரென்னும் பாஸுராநந்த நாதர் தன் மனைவியாகிய ஆநந்தியம்மாளுக்கு ஸ்ரீவித்யா தீக்ஷை செய்துவைத்து பத்மாவதியம்மாள் என்னும் தீக்ஷாநாமம் சூட்டினர்.

பாஸ்கரராயர் தன்மனைவியோடு சிலநாள் சித்தியோபாஸ்தி செய்துகொண்டுவந்து ஒரு ஸமயம் கூர்ஜரதேசத்திற்கு விஜயம் செய்தார். அங்கே வல்லப சம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஒரு பிரபல வித்வானை வாதத்தில் ஜெயித்து, அங்கிருந்து, விஜயயாத்திரை செய்துவரும் வழியில் மத்வ மதத்தைச்சார்ந்த ஒரு ஸந்நியாஸி, வலுவில் பாஸ்கரராயரோடு வாதத்திற்கு வந்தனர். அங்ஙனம் வாதத்திற்கு வந்த த்வைத ஸந்நியாஸியை வெகு ஸுலபமாய் வென்று அத்துறவியின் பூர்வாஶ்ரமத்தின் பந்துவாகிய ஒருவரது புத்ரியாகும் பார்வதி யென்னும் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டார். பின்னர் கூர்ஜரதேசத்திலிருந்து பாஸ்கரர் தனது இரண்டு மனைவிகளோடும் காசி க்ஷேத்ரத்திற்குச் சென்று ஒரு ஸோமயாகம் செய்தார். பிறகு சிலநாள் அங்கேயே வாசம் செய்து வந்தார்.

இவர் காசியில் வஸித்துக்கொண்டிருந்தபோது இவருடைய மஹிமையைப் புலப்படுத்தக்கூடிய பல விருத்தாந்தங்கள் கேழ்க்கப்படுகின்றன.

“இவர் வாமாசார ஸம்ப்ரதாயப்படி அம்பாளை யாரா திக்கின்றனர்” என்று நினைத்த சில பண்டிதர்கள் இவரிடத்தில் அஸூயை கொண்டு இவரை எப்படியாவது அவமானம் செய்யவேண்டுமென்று நினைத்திருந்தனர். இதையறிந்த பாஸ்கரராயர், தான் ஒரு மஹாயாகமியற்றப் போவதாயும் அப்போது தன்னுடன் வாதத்திற்கு வருபவர் வரலாம் என்றும் ஒரு அறிக்கையை வெளியிட்டனர். இவ்வறிக்கையைக் கேட்ட பண்டிதர்கள் பலரும், அச்சமயம் காசியில் வஸித்து வந்த ஸ்ரீ பரமஹம்ஸ குங்குமாநந்த நாதரை யண்டி பாஸ்கர ராயரது அறிக்கையை யவருக்குத் தெரிவித்து அவரையும் அழைத்துக்கொண்டு யாகசாலைக்கு வந்தனர். பாஸ்கரா நந்தரும் வந்த ஸந்நியாஸிக்கும் மற்றுமுள்ள பண்டிதருக்கும் நல்வரவு கூறி யுபசரித்துத் தக்க ஆஸனங்களில் இருக்கச் செய்தனர். பண்டிதர்கள் யாவரும், அங்கே நடக்கும் யாகத்தின் மஹிமையையும், பாஸ்கரராயரின் அபார தைவிக சக்தியையும், தபோபலத்தையும், தேஜஸ்ஸையும் கண்டு ஆச்சரியப்பட்டனர்; ஆயினும் அவர்கள் மனத்தில் குடி கொண்டிருந்த அஸூயை நீங்கவில்லை. ராயரை எப்படியா யினும் வாதத்தில் தோல்வியடையச் செய்யவேண்டுமென்று நினைத்து மந்த்ர சாஸ்திரத்தில் பலகேள்விகள் கேட்டனர். அக்கேள்விகளுக்கு நமது பாஸ்கரர் வெகு சுலபமாகப்பதி லளித்துவிட்டார். பிறகு அப்பண்டிதர்கள் “महाचतुष्षिष्टिकोटियोगिनीगणसेविता” என்னும் நாமத்தின்படி அறுவத்தி நான்குகோடி யோகினிகளின் நாமம், லக்ஷணம், உற்பத்தி, சரித்திரம் முதலியவைகளைப்பற்றிக் கேட்டனர். உடனே பாஸ்கரராயர் அப்பண்டிதர்களைப்பார்த்து “ஓ வித்வான்களே! நான் நீங்கள் கேட்ட விஷயத்தைச் சொல்லுகிறேன்; அவற்றை யெழுதிக்கொள்ளுங்கள்” என்று அம்பாளைத்யானித்துச் சொல்லத்தொடங்கினர். அவரது சொற்

பொழிவை யெழுதுபவர்கள் எழுதமுடியாது கைசலித்தனர். அப்பொழுது குங்குமாநந்தர் அப்பண்டிதர்களைப் பார்த்து "ஓ அந்தணர்களே! உங்களுடைய முயற்சி பயனற்றதாகும். இந்த பாஸ்கரராயரை நீங்கள் ஸாமான்யமனிதனென நினைத்திருக்கிறீர்கள். அது தவறு; இவர் அம்பாளுடைய ஸாக்ஷாத்காரம் பெற்ற மஹான். நீங்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பரதேவதையே இவரது தோளில் ஆரூடையாயிருந்து பதில் சொல்லுகின்றாள் பாருங்கள்" என்று அபிஷேக தீர்த்தத்தை யெடுத்து அப்பண்டிதர்களின் கண்களில் தெளித்துப் பார்க்கச் சொன்னார். அங்ஙனமே அவ்வித்வான்களும் பரதேவதையைத் தரிசித்து மகிழ்வெய்தி பாஸ்கரராயரது மஹிமையைப் புகழ்ந்து அவரது சரணங்களிலும், ஸ்ரீ குங்குமாநந்தரது பாதாரவிந்தங்களிலும் வீழ்ந்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர். அதுமுதல் பாஸ்கரராயரை மிகவும் பக்தியுடன் பாராட்டிவந்தனர்.

மேற்கூறிய குங்குமாநந்தஸ்வாமிகள் பரதேவதையினிடத்தில் மிக்க அன்புள்ளவர். ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்ற மஹாஞானி. இவரது சரீரத்தின்மேல் உத்தூளனம் செய்யப்படும் விபூதியெல்லாம் குங்குமமாய் மாறி விடுவதனால் இவருக்குக் குங்குமாநந்தர் என்னும் காரணப்பெயருண்டாயிற்று என்று கூறுவர். "ஸ்ரீவித்யாகுரு பரம்பரா ப்ரபாவம்" என்னும் மஹாராஷ்ட்ர நூலில், பாஸ்கரராயரது சரித்திரம் காணப்படுகின்றது. அதிலும் மேற்கூறிய விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்நூல் இன்னும் அச்சிடப்படவில்லை.

இங்ஙனம் சில நாள், பாஸ்கரராயர் காசியில் வசித்திருந்து, பிறகு தனது சிஷ்யன் சந்திரஸேனன் என்னும் ஒரு சிற்றரசனது வேண்டுகோளுக்கிரங்கிக் கிருஷ்ணா நதிக்

கரையில் கொஞ்சகாலம் தங்கியிருந்து, பின்னர், அக்காலத்தில் தஞ்சாவூரில் அரசுபுரிந்துவந்த போஸல வம்சத்து அரசனால் அழைக்கப்பட்டவராய்த் தஞ்சாவூர் ஸமஸ்தானத்தை யடைந்து அவ்வரசனால், ராயர், தமது வாஸத்திற்காக ஒரு அக்ரஹாரத்தை இனமாக அடையப்பட்டார். அந்தசமயத்தில் தனது தர்க்கசாஸ்திர குருவாகிய கங்காதரவாஜபேயிகள் காவிரிநதியின் தென்கரையிலுள்ள திருவாலங்காட்டில் வசித்திருந்தனர். இதைக் கேள்விப்பட்டுப் பாஸ்கரர் தாமும் வாஜபேயியின் வாஸஸ்தலத்திற்குச் சமீபத்திலேயே இருக்க எண்ணங்கொண்டு அவ்வூருக்கு எதிர்க்கரையில் ஒரு அக்ரஹாரத்தைப் பிரதிஷ்டை செய்து அங்கே வசித்து வந்தனர். அது தான் பாஸ்கரராஜபுரமென்று இப்பொழுது வழங்கப்படுகின்றது. பின்னர் சில நாள் கழித்துப் பாஸ்கரர் மத்யார்ஜுனம் (திருவிடைமருதூர்) என்னும் மஹாக்ஷேத்ரத்தையடைந்து அங்கேயே வசித்துவந்தனர். பாஸ்கரர் மத்யார்ஜுனத்தில் வசித்துவருங்கால் ஒரு ஆச்சர்யமானவிஷயம் நடந்தது. அதாவது.—ஸ்ரீ பாஸ்கர ராயர்அவர்கள் மத்யார்ஜுனமென்னும் திருவிடைமருதூரில் மஹாதானபுரத் தெருவில் உள்ள தனது க்ருஹத்தின் தெருத் திண்ணைமேல் மாலைவேளைகளில் சாய்ந்துகொண்டு தனது பாதங்களைத் தூணிற்கு முட்டு வைத்து உட்காருவது வழக்கமாயிருந்தது. இங்ஙனமிருக்க, அவ்வூருக்கருமையிலுள்ள வேப்பத்தூரிலிருந்து ஒரு ஸந்நியாஸி பிரதிதினம் பாஸ்கரராயரது வீட்டின்வழியாக ஸ்ரீ மஹாலிங்கஸ்வாமி கோயிலுக்குப் போவது வழக்கம். பாஸ்கரராயர் அச்சந்நியாஸி போகும்போது எழுந்து க்ருஹஸ்த தர்மத்தின்படி யதிகளுக்குச் செய்யவேண்டிய மரியாதையைச் செய்ததில்லை. இதைக் கவனித்துவந்த அத்துறவிக்குப் பாஸ்கரராயரிடத்தில் த்வேஷம் ஏற்பட்டது. இங்ஙனமிருக்கை

யில் ஒரு நாள், பிரதோஷ ஸமயத்தில் அந்த ஸந்நியாஸியும் பாஸ்கரராயரும், கோயிலில் ஸந்திக்கும்படி நேர்ந்தது. அப்போது ஸந்நியாஸி கோயிலில் கூடியிருந்த ஜனங்கள் முன்னிலையில் நமது பாஸ்கரரை இழிவாகப் பேசிக்கண்டித்தனர். பாஸ்கரராயரும் சாந்தமாகத்தான் அச்சந்நியாஸியை இல்லற தர்மத்தின்படி நமஸ்கரித்திருந்தால் அத்துறவியின் சிரம் ஆயிரம் சுக்கலாக வெடித்திருக்கும்; அவரது பிராணனைக் காப்பாற்றுதற்காகவே, தான் வணங்கவில்லையென்று அஜ் ஜனங்களுக்கு எடுத்துரைத்து அத்துறவியின் தண்டம், கமண்டலம், காஷாயவஸ்திரம் இவைகளை ஓரிடத்தில் வைத்துப் பாஸ்கரராயர் அவைகளுக்கு ஸாஷ்டாங்க வந்தனம் செய்தார். உடனே தண்ட கமண்டல காஷாயங்கள் ஆயிரம் சுக்கலாகப் போய்விட்டன. உடனே ஸந்நியாஸி நமது பாஸ்கரரின் மஹிமையை யுணர்ந்து, தான் அவரிடத்தில் த்வேஷித்ததற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர். அதுமுதல் பாஸ்கரராயர் அச்சந்நியாஸி வரும்போது தெருவில் இருப்பதில்லையாம். இது பாஸ்கரரின் மஹிமையைத் தெரிவிக்கின்றதல்லவா? இச்சம்பவத்தினால், சிலர் பாஸ்கரராயருக்கு அஹங்காரகுண முண்டென்று நினைத்தல் கூடும். இங்ஙனம் நினைப்பது பிசகு. ஸகல சராசரங்களையும் சிவஸ்வரூபமாய்ப் பார்க்கும் அபேத த்ருஷ்டியோடுகூடிய நமது பாஸ்கரராயருக்கு பேதத்தோற்றமுண்டா? பேத த்ருஷ்டியற்றவர்களுக்கு அஹங்காரமேது? தெருவில் வரும்போது அச்சந்நியாஸியை அவர் என்றும் கவனித்ததே இல்லை; தமது சிஷ்யர்களுக்குப் பாடம் சொல்வதிலேயே அவருடைய வ்ருத்தியிருந்தது. அவரிடத்தில் பேதத்ருஷ்டியைக் கற்பித்து த்வேஷங்கொண்டதனால்தான் அச்சந்நியாசிக்கு இங்ஙனம் நேர்ந்தது என்றறிதல் அத்யாவசியம். இத்தகைய மஹிமை

மஹாமேஷாடா ந்யாஸத்தினால் யாவருக்கும் ஏற்படக்கூடுமென்பது சாஸ்திர ஸித்தாந்தம். ஸ்ரீ பாஸ்கரராயர் தமது 95-வது வயதில் தமது சரீரத்தை விடுத்து பிரஹ்மாத்மைக்ய விதேஹ கைவல்ய பூமாஸ்வரூபமாயினர் என்று தெரிகின்றது.

## 4. பாஸ்கர ராயரின் மதக்கோள்கை

பாஸ்கரராயர் வைதிகமான ஸநாதன தர்மத்தை அநுஷ்டிப்பவராகும். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் ஆரம்பத்தில்

श्रीगम्भीरविपश्चितः पितुरभूद्यः कोनमाम्बोदरे ।
विद्याष्टादशकस्य मर्मभिदभू द्यः श्रीनृसिंहाद्गुरोः ।
यश्च श्री शिवदत्त शुक्लचरणैः पूर्णाभिषिक्तोऽभव
त्स त्रेता त्रिपुरा त्रयीति मनुते तामेवनाथत्रयीम् ॥

என்னும் ச்லோகத்தில், "யாருக்குக் கம்பீரராயரென்னும் மஹாபண்டிதரும் கோனமாம்பாவும் பெற்றோர்களோ, யாருக்குப் பதினெட்டு வித்தைகளின் மர்மங்களையுமறிந்த ஸ்ரீ நரஸிம்ஹாநந்தநாதர் குருவோ, யாருக்கு ஸ்ரீ சிவதத்த சுக்ல சரண ஸ்வாமிகள் பூர்ணாபிஷேகம் செய்துவைத்தனரோ (பாஸ்கர ராயராகும்) அவர், தக்ஷிணாக்னி, கார்ஹபத்தியம், ஆஹவநீயம் என்னும்முச்சுடர்களையும், ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களில் ஸ்வயம்ப்ரகாசமாய் விளங்கும் சிதக்னியாகும் த்ரிபுரஸுந்தரீ தேவியையும், ருக், யஜுஸ், ஸாமமென்னும் வேதங்களையும் பரமப்பிரமாணமாய் ஒத்துக்கொள்பவராவர்" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆதலின் பாஸ்கரராயர் ஒரு சிறந்த வைதிகர்.

மேலும், இவர் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதராலியற்றப்பட்ட, "ரத்னத்ரய பரீக்ஷை" யென்னும் கிரந்தத்தில் பிரதிபாத

னம் செய்யப்பட்ட அத்வைத ஸித்தாந்தத்தைத் தழுவின கொள்கையை யுடையவராவர்.

"नित्य निर्दोषगंधं निरतिशयसुखंब्रह्मचैतन्यमेकं
धर्मो धर्मीतिभेदद्वितयमितिपृथग्भूयमायावशेन ।"

அழிவற்றதாயும், தோஷ (அஞ்ஞான)த்தின் வாஸனையுமற்றதாயும், ஒப்பும் உயர்வுமின்றிய ஆநந்தமே ஸ்வரூபமாயுடையதுமான ஏகசைதன்யமே பிரஹ்மமாகும். அதுவே (கற்பிதமான) தனது மாயையினால் தர்மம், தர்மி என இரண்டாகத் தோன்றிற்று—என்னும் ஶ்லோகம் ரத்னத்ரய பரீக்ஷையில் உள்ளது. இதை நமது பாஸ்கரராயர் தமது பாவனோபநிஷத் பாஷ்யத்தில் பிரமாணமாக எடுத்து ஆண்டிருக்கின்றனர். ஆதலின், இவர் பிரஹ்மம் ஒன்றே உள்ளது; மற்றயாவும் கற்பிதமே என்னும் விவர்த்தவாதத்தை அநுஸரித்துள்ள சாங்கராத்வைதத்தின் கொள்கையை யுடையவரென நன்கு புலப்படுகின்றதல்லவா? அன்றியும், இவர் தம்மாலியற்றப்பட்ட குப்தவதீ யென்னும் ஸ்ரீஸப்தஶதீ வ்யாக்யானத்தில் முதலில் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகளை ஸ்தோத்திரம் செய்துள்ளார். இதனாலும் இவர் சாங்கராத்வைதியென்று ஏற்படுகின்றது. இவர் தமது கிரந்தங்களில் அடிக்கடி பஞ்சபாதிகை, வார்த்திகம், விவரணம், பாமதி, ஸம்க்ஷேபசாரீரகம், பஞ்சதசி, ஆத்மபோதம், வாக்யஸுதா முதலியவற்றினின்றும் மேற்கோள்களைக் கொடுத்திருப்பதனால், பாஸ்கரராயருக்கு விவர்த்தவாதத்திலுள்ள ப்ராமாண்யத்தன்மை நன்கு விளங்குகின்றதல்லவா?

இங்ஙனமாயின், இந்நூலில் (வரிவஸ்யை-முதலம்சம்-3-வது ஶ்லோகத்தில்) இவர் தாந்த்ரிகன்முகமாய் விவர்த்தவாதத்தைக் கண்டித்துப் பரிணாமவாதத்தைச் சித்தாந்தம் செய்தது எங்ஙனம் பொருந்துமெனின், அது பொருத்தமுடை

யதேயாகும். எங்ஙனமெனின், இதில் பாஸ்கரர் விவர்த்த வாதியாகிய வேதாந்தியையும், பரிணாமவாதியாகிய தாந்த்ரிகனையும் வேறாகவே வைத்துத் தான் மேற்கூறிய இரண்டு வாதங்களிலும் கலவாது பேசுகின்றதைக் கவனித்தல் வேண்டும். தற்காலத்தில், விவர்த்தவாத அத்வைதிகள் பலர், மித்யாவாதத்தைக் கர்மம், பக்தி, உபாஸனை, மற்ற லௌகிக வியவஹாரங்கள் முதலிய எல்லாவற்றிலும் தாராளமாய் உபயோகப்படுத்தி, சுஷ்கவேதாந்தம் பேசுகின்றாராதலின், அதைக் கண்டிப்பதற்காகவே அங்ஙனம் கூறப்பட்டதாமென்றறிக. இந்த வாதத்தில் பரிணாமவாதம் சித்தாந்தம் செய்யப்பட்டதாய்த் தோற்றினும், அது விவர்த்த வாதத்திற்கு ஸாதகமானதேயாகும். எங்ஙனமெனின், "மண், குடமாய்ப் பரிணமித்தது" என்று நிர்விகார பரிணாமிவாதிகள் கூறுவார்கள். கார்யரூப கடமென்பது வளைவு, குவிவு முதலியவற்றோடுகூடிய கழுத்து, வாய், வயிறு, அடி முதலியவற்றோடுள்ளதாகும். ம்ருத் பிண்டந்தான் வளைந்து குவிந்திருக்கவேண்டும். ம்ருத் பிண்டமோ அநேக பரமாணுக்களால் ஆக்கப்பட்டுள்ளது. ம்ருத் பிண்டத்திற்குக் காரணமான அணுக்களும் வளைந்து குவிந்திருத்தல் வேண்டுமென்பது நியாயமல்லவா ? உண்மையில், அவ்வணுக்களில் வளைவும் குவிவும் முற்றுமில்லை; இங்ஙனம் காரணமாகிய அணுக்களில், முழுமையுமில்லாமல், காரியமாகிய கடத்தில் வளைவும், குவிவும் இருப்பதாக நினைப்பது மயக்கமேயாகும். ஆகவே ம்ருத் பிண்டம் கடமாய்ப் பரிணமித்துள்ளதென்பதும் (கயிற்றில் தோன்றும் பாம்பைப்போல்) விவர்த்தவாதமே யாகுமென்பதில் என்ன ஆக்ஷேபம் ? பரிணாம வாதம் விவர்த்தவாதமேயென்பதற்கு ஸ்தாலீ புலாக நியாயமாய் ஒரு உதாரணம் விசாரிக்கப்பட்டது. மற்றவைகளையும் இங்ஙனமே விசாரித்தறியவும்.

அன்றியும், அஸ்தி-பாதி-ப்ரியம், நாமம்-ரூபம் என்னும் ஐந்து அம்சங்களோடு விளங்கும் இந்த பிரபஞ்சத்தில் அஸ்தி-பாதி-ப்ரியம் என்னும் முந்திய மூன்றும் பிரஹ்மஸ்வரூபமும் பிந்திய நாமரூபங்கள் இரண்டும் பேதஸ்வரூபமுமாகும். நாம ரூபங்களாகும் பேதம் ஒழிந்தால் எஞ்சியது பிரஹ்மஸ்வரூப ஸச்சிதாநந்தமேயாகின்றதென்று மூன்றாவது ஸ்லோகத்தின் வியாக்யானத்தில் கூறப்பட்டிருப்பதைக் கூர்ந்து நோக்குவோமானால், விவர்த்தவாதமே ஸித்திக்கின்றது. நாம ரூபாத்மக பேதம் உண்மையெனின், அது எதனாலும் நீங்காது. அது ஸச்சிதாநந்த அதிஷ்டான ஞானத்தினால் நீங்குகின்றதென்று கூறப்பட்டிருத்தலின் அத்தியாஸமே; ஆதலின் விவர்த்தமே.

ஆதலின், ஸ்ரீ பாஸ்கரராயர் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாளால் ஸித்தாந்தம் செய்யப்பட்ட அத்வைதக் கொள்கையுடையவரேயென்று நன்கு ஏற்படுகின்றது. அத்வைதத்திற்கு மாறுபட்ட கொள்கையுடையவரென்பது சற்றும் பொருத்த முடையதாகாது.

5. ஸ்ரீ பாஸ்கர ராயராலியற்றப்பட்ட நூல்களாவன :—

| | |
|---|---|
| I வேதாந்தம்:— | 1. சண்ட பாஸ்கரம். |
| | 2. நீலாசல சபேடிகா. |
| II மீமாம்ஸை:— | 3. வாத கௌதூஹலம். |
| | 4. பாட்ட சந்த்ரோதயம். |
| III வியாகரணம்:— | 5. ரஸிக ரஞ்ஜனீ. |
| IV நியாயம்:— | 6. நியாய மண்டனம். |
| V சந்தஸ்:— | 7. சந்தோ பாஸ்கரம். |
| | 8. சந்த(ஸ்) கௌஸ்துபம். |
| | 9. வ்ருத்த சந்த்ரோதயம். |

10. வார்த்திக ராஜம்.
11. சோட வ்ருத்தி.

VI காவ்யம்:— 12. சந்த்ர சாலா.
13. மதுராம்லம்.
14. பாஸ்கர ஸுபாஷிதம்.

VII வைதிகம்:— 15. வைதிக கோஶம்.

VIII ஸ்ம்ருதி:— 16. ஸ்ம்ருதி தத்வம்.
17. ஸஹஸ்ர போஜனகண்ட டீகா.
18. சங்கசக்ராங்கன ப்ராயஶ்சித்தம்.
19. ஏகாதசீ நிர்ணயம்.
20. ப்ரதோஷ நிர்ணயம்.
21. த்ருச பாஸ்கரம்.
22. குண்டபாஸ்கரம்.

IX ஸ்தோத்ரம்:—23. சிவஸ்தவம்.
24. தேவீஸ்தவம்.
25. சிவதண்டகம்.
26. சிவாஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ர வ்யாக்யானம்.

X மந்திர சாஸ்திரம்:— 27. கத்யோதம் (கணபதி ஸஹஸ்ர நாம பாஷ்யம்).
28. சந்த்ரலாம்பா மாஹாத்ம்ய டீகை.
29. நாத நவரத்ன மாலா மஞ்ஜூஷா.
30. பாவனோபநிஷத் பாஷ்யமும், ப்ரயோகமும்.
31. ஸ்ரீஸூக்த பாஷ்யம்.
32. கௌளோபநிஷத் பாஷ்யம்.
33. த்ரிபுரோபநிஷத் பாஷ்யம்.
34. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் (ஸௌபாக்ய பாஸ்கரம்).

35. ஸௌபாக்ய சந்த்ரோதயம் (ஸௌபாக்ய ரத்னாகர பாஷ்யம்.)
36. வரிவஸ்யா ரஹஸ்யம் (ப்ரகாச மென்னும் டீகையுடன்)
37. த்ரிபுரஸுந்தரீ பாஹ்ய வரிவஸ்யை (பாஹ்ய பூஜா விதானம்).
38. ஸ்ரீ ரத்னாலோகம் (பரசுராம கல்ப ஸூத்ர பாஷ்யம்).
39. குப்தவதீ (தேவீ மாஹாத்ம்ய ஸப்தஶதீ பாஷ்யம்).
40. சதஶ்லோகி.
41. மாலா மந்த்ரோத்தாரம் (கட்க மாலா சம்பந்தமானது).
42. ஸேது பந்தம். (பூர்வ சதுஶ்ஶதி உத்தர சதுஶ்ஶதியென்னும் வாமகேஶ்வர தந்த்ரத்தின் பாஷ்யம்.)

மேலே குறிப்பிட்டிருக்கும் கிரந்தங்களின் விஷயங்களையும், காம்பீர்யத்தையும் கூர்ந்து கவனிப்போமாயின் இம்மஹானுக்குத் தெரியாத வித்தை ஒன்றும் இல்லை. இவர் அப்பியஸிக்காத சாஸ்திரம் ஒன்றும் இல்லை. இவ்விஷயத்தை, உமாநந்த நாதர் ஸ்ரீ பாஸ்கரவிலாஸத்தில்,

यस्याऽदृष्टो नास्ति भूमण्डलांशो यस्याऽदासो विद्यते न क्षितीशः ।
यस्याऽसाध्या नास्ति विद्या किमन्यैर्यस्याकारः सा परा शक्तिरेव ॥

"இப்பூமண்டலத்தில், அவரால் பார்க்கப்படாத இடமேயில்லை; அவருக்குச் சிஷ்யனாகாத அரசனே யில்லை; அவருக்கு அஸாத்யமான வித்யை ஒன்றுமில்லை. ஆதலின் அவரே பராசக்தி ஸ்வரூபர்" என்று கூறியிருக்கிறார்.

இத்தகைய மஹான் தனது ஸர்வக்ஞத்தன்மையினுலும், பரதேவதையின் பூர்ண அநுக்ரஹத்தினுலும் மேற்கூறிய கிரந்தங்களையியற்றி முமுக்ஷுக்களுக்கு உபகரித்ததேயன்றிப் பல ஆலயங்களையும் நிர்மித்து அவ்வாலயங்களில் நடக்கவேண்டிய நித்திய நைமித்திக பூஜைகளுக்கும், ஆராதனை முதலியவற்றிற்கும் வேண்டிய ஏற்பாடுகளும் செய்திருப்பதாகத் தெரிகின்றது.

அவையாவன:—

1. காசியில் ஸ்ரீ சக்ரேசுவரரின் ஆலயம்.
2. மூலஹ்ரதத்தில் ஸ்ரீ பாண்டுரங்கஸ்வாமி கோயில்.
3. கோங்கண தேசத்தில் ஸ்ரீ கம்பீரநாத ஸ்வாமியின் ஆலயம்.
4. இராமேஸ்வரத்தில் ஸ்ரீ வஜ்ரேஸ்வராராலயம்.
5. ஸம்நதி என்னும் க்ஷேத்ரத்தில் பாஸ்கரராயரது குலதேவதையாகும் சந்த்ரலாம்பா தேவியினது ஆலயம். (இது ஸ்ரீசக்ரவடிவமாய்க் கட்டப்பட்டுள்ளது.)
6. சோள தேசத்தில் ஸ்ரீ கஹோளேஸ்வர ஸ்வாமியின் ஆலயம்.

மேற்கூறிய கோயில்கள் யாவும் பாஸ்கரராயரால், அவர் காலத்திலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டனவாகும்.

அவரது காலத்திற்குப்பிறகு அவரது ஜ்யேஷ்டபத்னியாகும் பத்மாவதியம்மாளால் ஸ்ரீ பாஸ்கரராஜபுரத்தில் காவிரிநதிக்கரையில் ஸ்ரீ பாஸ்கரேஸ்வரர் ஆலயம் நிர்மாணம் செய்யப்பட்டு, நாளதுவரை நித்ய பூஜைகள் நடந்து வருகின்றன.

இத்தகைய மஹானுல் இயற்றப்பட்ட இவ்வரிவஸ்யா ரஹஸ்யமென்னும் நூலை, முதல்முதல் அதாவது (கி. பி.

1901-வது வருஷத்தில்) வெளியிட்டவர் ஸ்ரீமான் R. அநந்த கிருஷ்ண சாஸ்திரிகளாவர். இவரால் வெளிப்படுத்தப்பட்ட பதிப்பை யான் சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன்பு தான் பார்க்கநேர்ந்தது. ஸ்ரீவித்யா ஸம்பந்தமாய் என்னால் பார்க்கப்பட்ட நூல்களில் இதுதான் முதலாவதாகும். இதை யூன்றி வாசிக்குங்கால், மேற்படி பதிப்பில் மூலஸ்லோகங்களிலும் வியாக்கியானத்திலும், சிற்சிலவிடங்களில், சில சில விஷயங்கள் விடப்பட்டும், சிற்சில பிழைபட்டும் இருந்தன. பின்னர், இரண்டுமூன்று வருடங்கள் கழித்து, வடக்கே, கோதாவரிஜில்லா, அமலாபுரத்திலுள்ள ஸ்ரீயுத மந்தா-லக்ஷ்மீநரஸிம்ஹம் பந்துலுகாருவால் வெளிப்படுத்தப்பட்ட தெலுங்கு எழுத்துப்பிரதி யொன்று கிடைத்தது. இந்நூலிலிருந்து சில சந்தேகங்கள் தீர்ந்தன.

பின்னர் இத்தகைய அருமைவாய்ந்த இந்நூலைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டுமென்னும் பேரவா உண்டாயிற்று. என் புத்திஸாக்ஷிணியாயுள்ள பரதேவதையின் இன்னருளால் மேற்படி நூலின் மொழிபெயர்ப்பு ஒருவாறு முடிந்தது. இம்மொழிபெயர்ப்பை யெனது நண்பர்களில் சிலர் வாசித்துப்பார்த்து, "வடமொழி பயிர்ச்சியும் சாஸ்திர ஆராய்ச்சியும் அற்ற ஸ்ரீ வித்யோபாஸகர்களுக்கு இத்தமிழ் மொழிபெயர்ப்பு மிக்க உபயோகமாயிருக்குமாதலின் இதை யச்சிட்டு வெளிப்படுத்துதல் அத்தியாவசியமான காரியமாகு" மென்று அடிக்கடி சொல்லிக்கொண்டே வந்தார்கள்.

இங்ஙனமிருக்க, கி. பி. 1934-ம் வருஷத்தில் ஸ்ரீமான் தஞ்சாவூர்-பண்டித S. சுப்பிரஹ்மண்ய சாஸ்திரிகள் அவர்கள் வெளியிட்ட வரிவஸ்யாரஹஸ்யத்தைப் பார்த்தேன். அது யாதொரு குறைவுமில்லாமல் சுத்தமான நூலாகத் தோன்றிற்று. ஆதலின், இந்நூலை வைத்துக்கொண்டு எனது மொழி

பெயர்ப்பை மறுபடியும் ஒருமுறை கூர்ந்து நோக்கி அவசியமான விடங்களில் திருத்தினேன்; முன்பதிப்பில் வியாக்கியானமில்லாமலிருந்த சில ஶ்லோகங்களுக்கும் வியாக்கியானம் மொழிபெயர்த்தேன். ஆதலின், ஸ்ரீமான் சுப்பிரஹ்மண்ய சாஸ்திரிகளின் பதிப்பு எனக்கு மிக்க ஸஹகாரியாயிருந்தது.

அன்றியும், இந்நூலில், ஸ்ரீபாஸ்கரராயர் வியாக்கியானத்தில், கூடமாய்க் கூறியுள்ள சில விஷயங்களை, இதர சாஸ்திரங்களின் பிரமாணங்களைக்கொண்டு விளக்கியுள்ளேன். அவை சூன்யஷட்க விவரணம், விஷுவபதார்த்த விசாரம், யோகினிகளின் விசேஷஸ்வரூப நிரூபணம், நவமைக தேசார்த்த விளக்கம், பிரகாராந்தரமான ஸமஸ்தார்த்தம் முதலியனவாகும். இவைகள் மூலக்கிரந்தத்தில் விளக்கமாய்க் கூறப்படவில்லையாயினும், சந்தர்ப்பத்தை நோக்கியும், விஷய போதகத்தன்மையைக் கருதியும், ஸ்ரீ பாஸ்கரராயரது ஸஹஸ்ரநாம பாஷ்யம், ஸேதுபந்தம் முதலிய இதர கிரந்தங்களிலிருந்தும், மற்றும் பல பிரமாண சாஸ்திரங்களிலிருந்தும் அவசியமானவற்றை யெடுத்துக்கொண்டு விளக்கப்பட்டுள்ளன.

இஃதன்றியும், இந்நூல் முதலம்சம், தத்துவ விஷுவங் கூறுமிடத்தில் (49, 50, 51 ஶ்லோகங்களின் வியாக்கியானத்தில்) ஸ்ரீவித்யையின் மூன்று கூடங்களையும் 3½ நிமிஷம் 317 த்ருடிகாலத்தில் உச்சரிக்கவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது. இந்த காலத்தை ஆங்கில காலநிர்ணயத்தின் படி கணக்கிடின், (10817 த்ருடிகாலமானது) 8·85-செகண்டுகளாகின்றது. கண்ணிமைப் போதாகும் ஒரு நிமேஷந்தான் ஒரு விநாடி அல்லது विघटिका என்று வழங்கப்படுகின்றது. ஒரு விநாடி 2½ ஸெகண்ட் பரிமாணமுள்ள காலமாகும்.

ஆகவே 3½ நிமேஷம் 317 த்ருடி காலத்திற்குச் சற்றேறக் குறைய 8. 85 ஸெகண்டுகளாகின்றனவென்பதை மேற்படி ச்லோகங்களின் வியாக்கியானத்தோடு சேர்த்து வாசிக்கும்படி வேண்டப்படுகின்றது.

இந்நூலைச் சென்னை, ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சனீ ஸபையார், பேருக்கத்தோடும் முயற்சியோடும் அச்சிட்டு வெளிப்படுத்தியதற்காக யான் அவர்மாட்டு மிக்க நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்; அன்றியும், இதைச் செம்மையாய் எழுதித் தந்தவர்களுக்கும், சிரமம்பாராது, பன்முறை ப்ரூப்பார்த்துத் திருத்தியவர்களுக்கும், இந்நூலை வெகு அழகாக அச்சிட்டுத்தந்த கேஸரீ அச்சுக்கூடத் தலைவர்க்கும், இதில் சேர்க்கப்பட்டுள்ள ஸ்ரீ பாஸ்கரராயரது திருவுருவப்படத்தைத்தந்து உபகரித்த ஸ்ரீமான் M. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுக்கும் ஸர்வாபீஷ்டங்களையும் அருள் புரியுமாறு, திரிகரணத் தூய்மையுடன், பரதேவதையைப் பிரார்த்திக்கின்றனன்.

இந்நூல் முட்டின்றி முடியுமாறு இன்னருள்புரிந்த பரதேவதையானவள், அடியேன் வெளியாக்குவதாய்த் தீர்மானித்துள்ள பராபூஜாவாஸனாவிமர்சம், த்ரிபுரோபநிஷத் (வடமொழி) பாஷ்யம், காமகலாவிலாஸம் (தமிழுரையுடன்) முதலிய அரிய நூல்களையும் முட்டின்றி முடித்துவைக்குமாறு அருள்புரிய எல்லாம்வல்ல ஸ்ரீ சற்குருநாதரது சரணங்களைச் சந்ததம் பணிகின்றேன். இந்நூலின் வடமொழி வியாக்கியானம் முழுமையும், தமிழில் மொழிபெயர்க்கப்படவில்லை; ஸம்ஸ்க்ருதப் பயிர்ச்சியும் வேதாத்தியனமுமற்று, வியாகரணம், மீமாம்ஸை முதலிய சாஸ்திரங்களை யறியாதவர்களுக்குத் துரூஹமான சிலவிஷயங்களை முற்றும்விடுத்துச் சாதாரணமாய் அறியக்கூடியனவும், அத்தியாவசியமானதுவு

மானவற்றை விடாமல் மொழிபெயர்த்துள்ளேன். இதில் எனது பிரமாதாதி தோஷங்களாலும், ஆராய்ச்சிக் குறைவினாலும் பலவிஷயங்கள் நன்கு விளக்கப்படாமல் இருக்கலாம்; மொழிபெயர்ப்பிலும் பல பிழைகள் இருக்கலாம். அவைகளையெல்லாம் முற்றறிவுள்ள முதுஞானிகள் அடியேன்மாட்டுக் கருணைபுரிந்து பொறுத்துக்கொண்டு அடியேனுக்குத் தெரிவிப்பார்களேயாயின், யான் அவைகளை வந்தன பூர்வகமாய் ஏற்றுக்கொண்டு, மறுபதிப்பில் அவற்றைத் திருத்தி வெளியிடுவதற்குச் சித்தமாயிருக்கிறேன்.

இங்ஙனம்

திருவேட்டீச்வரம் 25-7-1938.

ஸஜ்ஜன விதேயன்
ந. சுப்பிரமண்ய அய்யர்.



## श्रीचक्रम्



बिन्दुत्रिकोणवसुकोणदशारयुग्म
मन्वश्रनागदलसंयुतषोडशारम् ।
वृत्तत्रयं च धरणीसदनत्रयं च
श्रीचक्रमेतदुदितं परदेवतायाः ॥

*இதில் பதினாறு தள கமலத்திற்கு வெளியில், மூன்று வ்ருத்தங்களைப் பாவித்தல் வேண்டும்.*



பிரஹ்மஸ்ரீ ந. சுப்ரமண்ய அய்யர்

॥ श्रीगणेशाय नमः ॥

श्रीदक्षिणामूर्तये नमः
श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः
श्रीललिता महात्रिपुरसुन्दरी पराभट्टारिकायै नमः

## वरिवस्यारहस्ये प्रथमोंशः



॥ मङ्गलाचरणम् ॥

वन्दे गजेन्द्रवदनं वामाङ्कारूढवल्लभाश्लिष्टं ।
कुङ्कुमपरागशोणं कुवलयनीजारकोरकापीडं ॥

ज्ञानानन्दमयं देवं निर्मलस्फटिकाकृतिं ।
आधारं सर्वविद्यानां हयग्रीवमुपास्महे ॥

अस्तुवः श्रेयसेनित्यं वस्तु वामाङ्कसुन्दरं ।
यतस्तृतीयं विदुषां तुरीयं त्रैपुरं महः ॥

नत्वा श्रीं श्रीगुहानन्दनाथ पङ्केरुहद्वयं ।
वरिवस्यारहस्यस्य दीपिका क्रियतेऽधुना ॥

॥ श्री भासुरानन्दनाथचरणारविन्दाभ्यां नमः ॥
॥ श्री विमलप्रकाशात्मानन्दनाथ चरणारविन्दाभ्यां नमः ॥

---

ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யத்திற்கு தீபிகையென்னும்
தமிழ் விருத்தியுரை.

विद्यानां च मनूनां मनुसंख्यानां च विद्यानाम् ।
उपदेष्टा जयतितरां नरसिंहानन्दनाथगुरुः ॥

वरिवस्यारहस्याख्यो ग्रन्थो यः स्वेननिर्मितः ।
तत्र दुर्घटशब्दानामर्थः संक्षिप्य कथ्यते ॥

(அவதாரிகை) "तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्"—"आचार्यवान् पुरुषोवेद" என்னும் உபநிஷத் பிரமாணங்களின்படி, ஸத்குருவைச் சரணமடைதல், தத்வ ஞானத்தின் அடைவிற்குப் பரம காரணமாயிருப்பதால், ஸகல மந்த்ரங்களின் அதிஷ்டான தேவதா ஸ்வரூப குருமூர்த்தியை ஸ்தோத்ரம் செய்கின்றார் :—

(தாத்பர்யம்) ஸகலமான வித்தைகளையும், மந்த்ரங்களையும், சதுர்த்தச வித்தைகளையும் உபதேசித்த ஸ்ரீ நரஸிம்ஹாநந்தநாதரென்னும் ஸத்குருவானவர் ஸர்வோத்க்ருஷ்டமாய் விளங்கட்டும் என்று இக்கிரந்தகர்த்தா ஸ்ரீ பாஸ்கரராயர் கூறுகின்றார்.

என்னால் இயற்றப்பட்ட "வரிவஸ்யா ரஹஸ்யம்" என்னும் நூலில் கடினமான சப்தங்களுக்குக் குறிப்புரையொன்றும் சுருக்கமாய்க் கூறுகின்றேன் — (நூலாசிரியர் கூற்று).

குறிப்பு :—இந்நூலுக்கு நூலாசிரியரே சங்கிரகமான உரையும் இயற்றியுள்ளாரென அறியவும்.

श्री गुरुस्तोत्र मङ्गलम्

प्रह्लादाभीष्टदाने विबुधसमुदयस्तूयमानापदाने
शेषक्षोणीभृदन्तः प्रविलसितपदाहोबलक्षेत्रगर्भात् ।
प्रादुर्भूते हिरण्यद्विरदमतिमदध्वान्ततन्त्रंनिहन्तुं
धीरे सच्छास्त्रयोनौ मम भुवनगुरावस्तुभक्तिर्नृसिंहे ॥

(அ-கை) ஸ்ரீ நரசிம்ஹாநந்தநாதரைக் குருரூபமாயும் ஸ்ரீநரசிம்ஹ மூர்த்தியாயும் சிலேடையாய்த் துதிக்கின்றார்.

(தா - ம்) குருஸ்வரூபமான ஸ்துதி: —प्रह्लाद:-மேலாகிய ஆநந்தம் அதாவது பிரஹ்மாநந்தம். இப்பரமபுருஷார்த்த ரூப மோக்ஷத்தோடு அபீஷ்டமான தர்மம், அர்த்தம், காமம் என்னும் த்ரிவர்க்கங்களையும் அருளிச் செய்பவரென்று வித்வான்களால் துதிக்கப்பெற்ற பூர்வ சரித்திரத்தையுடையவராயும், செல்வத்தாலும் ஸேனை முதலிய பரிவாரங்களாலும், அஸத்தாகும் த்வைத சாஸ்திரத்தால் ஏற்பட்ட துர்ப்புத்தியாலும் மதம் பிடித்துள்ள ध्वान्ततन्त्रं निहन्तुं = மத்வர்களின் தந்த்ரத்தைச் சாஸ்திரீயமாய்க் கண்டிப்பதற்காக ஸகல ராஜாதி ராஜர்களுக்கிடையே பிரகாசிக்கும் பாதாரவிந்தங்களை யுடையவரும் அஹோபல பண்டிதருக்கும் அவரது பத்னிக்கும் ஸத்புத்திராய் அவதரித்தவரும், தீரரும், ஸத் சாஸ்திரங்களை அதாவது நித்யாநந்த ரூப மோக்ஷ சாதனமானக் கிரந்தங்களை இயற்றியவருமான எனது குரு ஸ்ரீ நரஸிம்ஹாநந்தநாதரின் சரணங்களில் எனது பக்தி பதியட்டும்.

நரஸிம்ஹமூர்த்திரூப ஸ்துதி :—பிரஹ்லாத ஸ்வாமிக்குச் சர்வாபீஷ்டங்களையும் அருளிச் செய்தவரென்று முப்பத்து முக்கோடி தேவர்களாலும் துதிக்கப்பெற்ற புகழையுடையவரும், மதம் பிடித்து அஞ்ஞான இருளின் வசத்ததாயுள்ள "ஹிரண்ய கசிபு" என்னும் யானையைச் சம்ஹாரம் செய்வதற்குச் சேஷாசலத் தொடர்ச்சியில் விளங்கும் அஹோபலம் என்னும் க்ஷேத்திரத்தில் ஆவிர்ப்பவித்தவரும், தைர்ய சௌர்யமுடைவரும், ஸத் சாஸ்திரங்களாகும் வேத, வேதாந்த, ஸ்மிருதி, புராணாதிகளுக்குக் கர்த்தாவும் ஆகும் ஸ்ரீ நரஸிம்ஹ ஸ்வாமியின் சரணங்களில் எனது பக்தி நிலைக்கட்டும். (1)

२. विद्वत्समाजतोषाशंसा

**आ प्राचः कामरूपाद् द्रुहिणसुतनदप्लाविताद्राप्रतीचो**
**गांधारात्सिन्धुसान्द्राद्रघुवरचरितादा च सेतोरवाचः।**

आ केदारादुदीचस्तुहिनगहनतः सन्ति विद्वत्समाजा
ये ये तानेष यत्नः सुखयतु समजान्कश्चमत्कर्तुमीष्टे ॥ २ ॥

(தா - ம்) கிழக்கே பிரஹ்மபுத்திரா நதி பிரவஹிக்கும் தேசமாகிய காமரூபம் முதல் மேற்கே ஸிந்து நதி பாயும் தேசமாகிய காந்தார தேசம் வரையிலும், தெற்கே ஸ்ரீராமபிரானால் ஏற்படுத்தப்பட்ட ஸேது முதல் வடக்கே ஹிமய மலைச்சாரலிலுள்ள கேதாரதேசம் வரையிலுமுள்ள வித்வான்களாகிய ஸ்ரீவித்யோபாஸகர்களின் எந்த எந்த ஸமாஜங்களுள்ளனவோ அந்த அந்த ஸமாஜங்கள் யாவும் இந்நூலைக்கண்டுணர்ந்து சந்தோஷமடையட்டும்; மூடர்களாகிய பசுக்கூட்டங்கள் இதை எங்ஙனம் உணரக்கூடும்? ஆதலின் அவைகளைச் சந்தோஷிப்பிக்கச் செய்வது எங்ஙனம் சாத்தியமாகும்? (2)

३. ज्ञेयब्रह्मरूपप्रकाशोत्कर्षः

स जयति महान्प्रकाशो यस्मिन्दृष्टे न दृश्यते किमपि ।
कथमिव तस्मिञ्ज्ञाते सर्वं विज्ञातमुच्यते वेदे ॥ ३ ॥

(தா-ம்) எந்த ஒரு மஹாப் பிரகாசத்தை யறிந்தால் காணப்படுவனவாகிய திருசியங்களொன்றும் புலப்படாதோ அந்த ஸ்வப்பிரகாசப் பரம்பொருள் எல்லாவற்றிற்கும் மேலாய் விளங்கட்டும். இங்ஙனம் "அதை யறிந்தால் ஒன்றும் புலப்படாது" என்று கூறி, மறுபடியும் அதே வேதத்தில் "எந்த வொன்றை யறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாகு" மென்று முன்பின் முரணாகக் கூறியவாறு என்னே? இக்கூற்று எப்படிப் பொருந்தும்?

(விருத்தியுரை) யாவருக்கும் அதாவது பிரஹ்மாதி பிபீலிகை (புழு) வரையில் "நான், நான்" என்று மிகப்பிரசித்தமாய் அநுபவிக்கப்படுவது, மகத்தாயும், தேச கால

வஸ்து பரிச்சேதங்களற்றதாயும் உள்ள ஸ்வப்பிரகாசப் பிரஹ்மமேயாகும். அது எக்காலத்தும் மறைப்பின்றி ஆத்ம ஸ்வரூபமாய் விளங்கும் ஜோதியாகும். 'स्वरूपज्योतिरेवान्तः' என்பது இரகசியாகம வசனம். 'न तत्र सूर्यो भाति' என்பது சுருதிப் பிரமாணம். ஜயதி = எல்லாவற்றிற்கும் மேன்மையாய் விளங்கட்டும். அதாவது கற்பிதமாயுள்ள யாவும் ஒழிந்தபிறகு ஸர்வாதிஷ்டான ரூபமாய் விளங்கட்டுமென்பது பொருள். 'अधिष्ठानावशेषोहि नाशः कल्पितवस्तुनः' ஸூதஸம்ஹிதா வசனம். இத்தகைய அதிஷ்டான ஞானத்தினால் அத்தியஸ்தமாயுள்ள பிரபஞ்சத்தின் ஞானம் இல்லாமேயில்லை. கற்பிதப் பொருள்கள் அதிஷ்டான ஞானத்தினால் நாசமாகும் தன்மையுடையவையாதலின்.

இங்ஙனமாயின், 'एकविज्ञानेन सर्वविज्ञानं' என்று சாந்தோக்கிய உபநிஷத்து கூறும் வண்ணம் "ஒன்றன் ஞானத்தினால் எல்லாவற்றின் ஞானமும் உண்டாகும்" என்பது எப்படிப்பொருந்தும்? மேற்படி ம்லோகத்தில் முதலில் கூறியது விவர்த்தவாதம். பின்னர் கூறியது அவிகாரபரிணாமவாதம்.

விவர்த்தவாதம் அதாவது பிரஹ்மத்தின்கண் யாவும் கற்பிதம்; ரஜ்ஜு ஸர்ப்பம்போல் என்பது. இது வேதாந்திகளுக்குச் சம்மதமானது. இதைத் தாந்த்ரிகனை பரிணாமவாதி தூஷிக்கின்றனன். எங்ஙனமெனின்? விவர்த்தவாதத்தில் மண்-குடம், பொன்-நகை முதலிய உதாரணங்கள் அங்கீகரிக்கப்படுவதில்லை.

## அவிகார பரிணாமவாத மேன்னும் தாந்த்ரீகர் மதத்தின் ஸ்வரூபம் கூறப்படுகின்றது.

"இச்சிக்கிறேன், அறிகிறேன்" முதலியவற்றில் தன்மையைக் குறிக்கும், "நான்" என்பதனோடு முடிவடையும்

அறிவே பிரகாச வடிவ பிரஹ்மமாம். இந்தப் பிரஹ்மம், ஸர்வக்ஞத்வம், ஸர்வகர்த்ருத்வம், பூர்ணத்வம், வியாபகத்வம், முதலிய சக்திகளோடு கூடியது. இந்தப் பொருளின் ஆநந்தாம்சமே ஸ்புரண மெனப்படும்.

இது பராஹந்தை, விமர்சம், பரை, லலிதை, மஹா பட்டாரிகை, திரிபுரஸுந்தரி என்பனவாதி பதங்களால் விவகரிக்கப்படுகின்றது. இவ்விஷயம் விரூபாக்ஷ பஞ்சாசிகையில் விம்வ சரீர ஸ்கந்தத்தில் "ईश्वरता कर्तृत्वं स्वतन्त्रता चित्स्वरूपताचेति । एतेऽहंतायाः किल पर्यायाः सद्भिरुच्यन्ते ॥" என்று கூறப்பட்டிருப்பது இங்கு அறிதற்பாலது. இந்த பராஹந்தையன்றி "இதந்தை" (இதுவென்று சுட்டியறிதற்குரிய உலகம்) ஸ்புரிப்பதில்லையாதலாலும், அஹந்தைக்கும், இதந்தைக்கும் நெருங்கிய சம்பந்தமுள்ளதாலும் இதந்தையென்னும் திரிசிய வுலகிற்கும் அஹந்தாரூப சக்திக்கும் அல்லது அஹந்தாரூப ஸ்புரண சக்தியோடு கூடிய பிரஹ்மத்திற்கும் * ஜன்ய ஜனகபாவ சம்பந்தமுள்ளது. ஆதலால் திரிசியமானது ஸ்புரண சக்தியோடு கூடிய பிரகாச வடிவ பிரஹ்மத்தின் பரிணாமமேயாம்.

"तस्यां परिणतायां तु न कश्चित्पर इष्यते" என்னும் வாமகேஸ்வர தந்திர வாக்கியம் இதற்குப் பிரமாணமாம். 'वाचारंभणं विकारोनामधेयं' என்னும் சுருதிகளுக்கும் இந்த அர்த்தத்திலேயே தாத்பர்யமாம். உபாதான உபாதேயங்களுக்கும் சக்தி சக்தர்களுக்கும் அபேதமே உண்டு. இது நிர்விவாதம். உபநிஷன்மதப்படி பேதாபேதமல்ல. ஆதலினாற்றான் "सर्वं खल्विदं ब्रह्म" என்று, சுருதி அபேத ஸாமாநாதிகரண்யத்தால் கூறிற்று. இங்கே பாத ஸாமாநாதிகரண்யமல்ல. அத்வைத சுருதிகள் யாவும் இந்த அபிப்பிராயத்தைக் கொண்டே பரஸ்பரம் அவிரோதிகளாய் இருக்கின்

* ஜன்யம் = உண்டாக்கப்பட்டது. ஜனகம் = உண்டாக்கியது.

றன. இங்ஙனம் ஸர்வப் பிரமாணங்களிலும் தலைசிறந்து விளங்கும் சுருதிகளாலும், சுருதிகளுக்கு அநுஸாரிணிகளான தந்திர வாக்கியங்களாலும், அத்வைதமே சித்தாந்தஞ் செய்யப்படுங்கால், அத்வைத தாத்பரியத்திற்கு முரண்படுவனவாகிய காரண காரியங்களின் பேதாம்சமே கற்பிதமாகின்றது. பேதாம்சம் கற்பிதமெனின் பிரபஞ்ச மென்பதல்ல. "नेह नानाऽस्ति किंचन" என்பனவாதி சுருதிகளும் பேதத்தையே நிஷேதிக்கின்றன. பிரபஞ்சத்தை யன்று. "एकमेवाद्वितीयम्" இது முதலிய சுருதிகளில் பேதமுடைய பிரபஞ்சத்தின் அபாவத்தைப் பிரதிபாதித்த போதிலும் பேதமாகிய விசேஷணத்தின் அபாவமே பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறதென்று கொள்ளல்வேண்டும். ஆகையினுல்தான் பா(भा)மதியில் "हाटकमकुटग्रन्थे भेदस्यैव हाटकन्यूनसत्ताकत्वं न मकुटस्योक्तम्, परिणामस्य परिणामिसमान सत्ताकत्वावश्यिकत्वात्" என்றும் "मायामात्रमिदं द्वैतम्" என்று ஸ்ரீ கௌடபாத காரிகையிலும் கூறப்பட்டிருப்பதுபோல, த்வைத சப்தத்தினுல் பேதமே மித்தையென்று சித்திக்கிறது. பேதமுடைய பொருள் மித்தை யென்பதல்ல. பேதமும் பேதமுடைய பிரபஞ்சமும் மித்தையென்று கூறில், பிரஹ்மமும் மித்தையாதல் வேண்டும், என்று நையாயிகர் கூறுகின்றனர். எங்ஙனமெனின் "மித்தையாகிற பேதத்தின் அபாவத்திற்குப் பிரதியோகி உலகமாம்; அநுயோகி பிரஹ்மமாம். அபாவத்தின் பிரதியோகிக்கு மித்யாத்வம் கூறுங்கால் அநுயோகியாகிய பிரஹ்மத்திற்கும் மித்யாத்வம் கூறுதல் வேண்டும். அநுயோகிதா சம்பந்த முடைமையின்," என்றும் "ஆதலால் அபாவம் நிரூபிக்கப்படுகின்ற" தென்றும் அவர் கூறுகின்றனர். சுருதிகளுக்கும் இந்த பரிணுமவாதமே சம்மதமானது. இது கருதியன்றோ பகவான் ஸ்ரீ வியாசரும் "प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्" என்றும், அவ்வதிகரணத்தில்

ஒரே அறிவால் எல்லாவற்றின் ஞானமும் உண்டாகின்றதென்றும் பிரதிக்ஞை செய்து, மண்குடம் முதலிய உதாரணங்களால் விவரித்திருக்கின்றனர். "बहुस्यां प्रजायेय" இத்யாதி சுருதிகளாலும் பரிணாமவாதமே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விஷயம் நிர்விவாதமாம். "आत्मकृते: परिणामात्" என்று பிரஹ்மஸூத்ரம் விளக்கமாய்ப் பரிணாம வாதத்தையே கூறுகின்றது. இதற்கு, பாஷ்யகாரராகிய ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியாள் விவர்த்தவாத ரீதியாய்ப் பாஷியஞ் செய்திருந்த போதிலும், ஸௌந்தர்யலஹரில் "मनस्त्वं व्योम त्वम्" என்னும் சுலோகத்தில் தமது ஸ்வாபிப்பிராயமாகிய பரிணாம வாதத்தை "त्वयि परिणतायाम्" என்னும் பதங்களால் வெள்ளிடை மலைபோல் கூறியிருக்கின்றனர் ஆதலின், பரிணாம வாதத்தில், நாநாவாயும், காரியரூபமாயும், பின்ன பின்னமாயும் உள்ள குடம் சட்டி மொந்தை முதலியவைகளே மித்தையாகும். காரண ரூபமான மண் சத்தியமே. இங்ஙனமே காரியமாயும், நாநாவாயும், பின்ன பின்னமாயும் உள்ள பேதமே (ஒரு பொருளுக்கும் மற்றொரு பொருளுக்குமுள்ள வித்தியாசமே) மித்தையாம். பிரஹ்மமயமான பிரபஞ்சமல்ல. இவ்விஷயம் சாம்பவாநந்த கல்பலதையில் மிகு விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. விசேஷமாய் அறிய விரும்புவோர் ஆண்டு அறிக. இது தாந்த்ரீகரின் மதம். அவிகார பரிணாமவாதம். (3)

### ४. विमर्शात्मकशक्तिस्वरूपनिरूपणम्

**नैसर्गिकी स्फुरत्ता विमर्शरूपाऽस्य वर्तते शक्तिः।**
**तद्योगादेव शिवो जगदुत्पादयति पाति संहरति ॥ ४ ॥**

(தா - ம்) அந்தப் பிரஹ்மத்திற்கு ஸ்வபாவ ஸ்புரணரூப விமர்சமென்னும் ஒரு சக்தியுள்ளது. இந்தச் சக்தி

யோடு சேர்ந்தே, சிவமெனும் அந்தப் பிரஹ்மம் ஜகத்தைச் சிருஷ்டித்துக் காப்பாற்றிச் சங்கரிக்கின்றது. ஈண்டு திரோபவம், அநுக்கிரஹம் என்னும் இரண்டையும் உபலக்ஷணமாகக் கொள்ளல் வேண்டும். (4)

शिवश्शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं

என்னும் ஸ்ரீ சங்கர பகவத் பாதருடைய ஸௌந்தர்யலஹரீ வாக்கியம் இங்கறிதற் பாலது.

**साऽवश्यं विज्ञेया यत्परिणामादभूदेषा ।**
**अर्थमयी शब्दमयी चक्रमयी देहमय्यपि च सृष्टिः ॥ ५ ॥**

(தா - ம்) சிவதத்வம் முதல் தரணீதத்வம் வரையிலுள்ள முப்பத்தாறு தத்வ ரூபமான அர்த்தங்களும், பரா, பஶ்யந்தீ, மத்யமை, வைகரீ என்னும் நான்கு வாக்குகளாகும் சப்தங்களும், பிந்து முதல் பூபுராந்தமான ஒன்பது சக்கிரங்களும், காரண, ஸூக்ஷ்ம, ஸ்தூலமென்னும் மூன்று தேகங்களும் எந்த ஒரு சிற்சக்தியினின்றும் பரிணமிகளாய்ச் சிருஷ்டிக்கப்பட்டனவோ அந்தச் சக்தியானது ஒவ்வொருவராலும் அறியத் தக்கது. இங்ஙனம் அறிவது எல்லாவற்றையும் அறியும் விஞ்ஞான ரூப மோக்ஷத்திற்கு நேர் சாதனமாதலின். (5)

५. तज्ज्ञानार्थचतुर्दशविद्यासारवेदसारभूता गायत्री

**तज्ज्ञानार्थमुपाया विद्या लोके चतुर्दश प्रोक्ताः ।**
**तेष्वपि च सारभूता वेदास्तत्रापि गायत्री ॥ ६ ॥**

(தா - ம்) அந்த சிற்சக்தியை அறிவதற்குச் சாதனமாய், உலகத்தில் பதினான்கு வித்தைகள் (பரமேஶ்வரனால்) சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் சாரமானவை

வேதங்கள். அந்த நான்கு வேதங்களிலும் சாரமானது காயத்ரீ மஹா மந்த்ரமாகும்.

பதினான்கு வித்தைகளாவன—நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், நியாயம், மீமாம்சை, தர்ம சாஸ்திரம், புராணங்கள் என்பனவாம். வைதிகமான ஆகமங்களும், தந்த்ர சாஸ்திரங்களும், தர்ம சாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாகும். (6)

६. गायत्र्या द्वैरूप्यं तन्महिमा च

**तस्या रूपद्वितयं तत्रैकं यत्प्रपठ्यतेऽस्पष्टम् ।**
**वेदेषु चतुर्ष्वपि परमन्यत्तं गोपनीयतरम् ॥ ७ ॥**

(தா - ம்) அந்த காயத்ரீ ஸ்வரூபத்திற்கு இரண்டு ரூபங்களுண்டு. அவற்றில் ஒன்று வேதத்தில் ஸ்பஷ்டமாகவும், அதாவது காயத்ரீயின் மூன்று பாதங்களை விளக்கமாகவும், அஸ்பஷ்டமாகவும், அதாவது அதன் நான்காவது பாதத்தை அஸ்பஷ்டமாகவும் கூறப்பட்டிருப்பதால் ஸ்பஷ்டாஸ்பஷ்ட வடிவமானது. மற்றொன்று மிகவும் மேலானதாகவும் அதிரஹஸ்யமாகவும் உள்ள ஸ்ரீவித்தை வடிவமாகும். (7)

७. सांकेतिकशब्दैः श्रीविद्याया वेदव्यवहारः

(அவதாரிகை) தந்த்ர ராஜத்திலும், ஸௌந்தர்ய லஹரீயிலும் ஹாதிவித்தையே முதலில் உத்தாரம் செய்யப்பட்டுள்ளது. ஆயினும் " श्रीविद्यैव तु मन्त्राणां तत्र कादिर्यथा परा " என்னும் பிரமாணப்படி, ஸ்ரீ மஹாஷோடசீ வித்தையானது, (28 பீஜங்களுள்ளது) காதி வித்தையினின்றும் ஏற்படுவதாலும், " यदक्षरैकमात्रेऽपि " " यदेकादशमाधारम् बीजं कोणत्रयोद्भवम् " முதலியவற்றால் நிரூபிக்கப்பட்ட அதிரஹஸ்யமாயுள்ள பீஜங்களான ई - ए - என்பனவற்றோடு

கூடியுள்ளதாலும், த்ரிசதியில் ஆதரிக்கப்பட்டிருப்பதாலும், த்ரிபுரோபநிஷத்தில் இதன் மூலமாய் ஹாதி வித்தையை உத்தாரஞ் செய்யப்பட்டிருப்பதாலும், யோகினீ ஹ்ருதயத்தைப் போலவே இந்நூலிலும் ஸ்ரீ காயத்ரீ அர்த்தம் முதல் பலவித அர்த்தங்கள் இவ்வித்தைக்கே கூறப்பட்டிருப்பதாலும், ஸாங்க்யாயன ச்ருதியில் "चत्वार ईं बिभ्रति" என்னும் ருக்கில் முதலில் இதுவே உத்தாரம் செய்யப்படுவதாலும் காதி வித்தையே பிரதானமாயிருக்கின்றதென்பது அறியத்தக்கது.

कामोयोनिः कमलेत्येवं संकेतितैः शब्दैः ।
व्यवहरति न तु प्रकटं यां विद्यां वेदपुरुषोऽपि ॥ ८ ॥

(தா - ம்) வேத புருஷன் அந்த ஸ்ரீ வித்தையை कामः முதலிய ஸங்கேத சப்தங்களினால் கூறினான்; விளக்கமாய்ச் சொல்லவில்லை:

(விரிவுரை) काम:=क காரம், योनि:=ए காரம், कमला=ई காரம், वज्रपाणि:=ल காரம், गुहा=ह्रीं காரம்; हसा=ह - स -, मातरिश्वा=क காரம், अभ्रं=ह காரம், इन्द्र:=ल காரம், गुहा=ह्रीं காரம்; सकला=स - क - ल -, माया=ह्रीं காரம். இந்த பதினைந்து அக்ஷரங்களே காதி பஞ்சதசாக்ஷரீ மந்த்ரமாகும். ஜகந்மாதாவான இந்த ஆதிவித்யை விசேஷமாய் பூஜிக்கத்தகுந்தது. ஆதலாற்றான் அதிக ரஹஸ்யமானதென்று கூறப்பட்டது. (8)

८. विद्याकूटत्रयवर्णोद्धार:

(அவதாரிகை) மீண்டும் வித்தையின் மூன்று கூடங்களின் வர்ணங்களைக் கூறுகின்றார்.

क्रोधीशः श्रीकण्ठारूढः कोणत्रयं लक्ष्मीः ।
मांसमनुत्तररूढं वाग्भवकूटं प्रकीर्तितं प्रथमम् ॥ ९ ॥

शिवहंसब्रह्मवियच्छक्राः प्रत्येकमन्त्ररारूढाः ।
द्वैतीयीकं कूटं कथितं तत्कामराजाख्यम् ॥ १० ॥

शिवतो वियतो मुक्तं तृतीयमिदमेव शक्तिकूटाख्यम् ।
हृल्लेखानां त्रितयं कूटत्रितयेऽपि योज्यमन्ते स्यात् ॥ ११ ॥

(தா - ம்) முதல் கூடமாகிய வாக்பவ கூடமானது क - ए - ई - ल என்னும் பீஜங்களோடும்,

இரண்டாவதாகிய காமராஜ கூடமானது ह - स - क - ह - ल என்னும் பீஜங்களோடும்,

மூன்றாவதாகிய சக்தி கூடமானது (இரண்டாவது கூடத்திலுள்ள சிவ ஆகாச பீஜங்களாகிய ह - என்னும் இரண்டு பீஜங்கள் நீங்கலாக எஞ்சிய) स - क - ल என்னும் பீஜங்களோடும், கூடி மேற்கூறிய மூன்று கூடங்களும் இறுதியில் ह्रीं என்னும் பீஜத்தோடும் கூடியவை ஆகும். (9, 10, 11)

9. हृल्लेखास्वरूपं नादशब्दवाच्यं च

हृल्लेखायाः स्वरूपं तु व्योमाग्निर्वामलोचना ।
बिन्द्वर्धचन्द्ररोधिन्यो नादनादान्तशक्तयः ॥ १२ ॥

व्यापिकासमनोन्मन्य इति द्वादशसंहतिः ।
बिन्द्वादीनां नवानां तु समष्टिर्नाद उच्यते ॥ १३ ॥

(தா - ம்) ह्रीं காரமாகிய ஹ்ருல்லேகை ஹ்-ர்-ஈ- பிந்து, அர்த்த சந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை, உந்மனி, என்னும் பன்னிரண்டு ஸ்வரூபங்களை உடையது. பிந்து முதல் உந்மனி வரையிலுள்ள ஒன்பதுக்கும் பொதுவாய் நாதம் என்னும் பெயருண்டு. இவ்

வொன்பதும் ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதர, ஸூக்ஷ்மதம காலங்களால் உச்சரிக்கப்படும் த்வனி விசேஷங்களென்றுவது அல்லது, அக்ஷர விசேஷங்க ளென்றுவது கூறப்படுகின்றன. (12, 13)

१०. विद्यावर्णयत्तावर्णनम्

**प्रथमेऽष्टादश वर्णा द्वाविंशतिरक्षराणि मध्ये स्युः ।**
**प्रथमेन तुल्यमन्त्यं संघातेनाष्टपञ्चाशत् ॥ १४ ॥**

(தா - ம்.) உயிரோடுகூடிய மெய்யெழுத்திற்கு இரண்டு வர்ணங்களாகவும், உயிரெழுத்திற்கு ஒரு வர்ணமாகவும் கணக்கிடவேண்டும். இங்ஙனம் கணக்கிடின் முதற் கூடத்திலுள்ள 'क' என்பதற்கு இரண்டு வர்ணங்களும், 'ल' என்பதற்கு இரண்டும், ए - ई ஆகிய உயிரெழுத்துக்களுக்குத் தனித் தனியே ஒவ்வொன்றாக இரண்டும், ह्रीं - என்பதற்கு பன்னிரண்டு வர்ணங்களுமாக முதல் கூடத்திற்குப் 18 வர்ணங்கள்.

மத்ய கூடத்திலுள்ள ह - स - क - ह - ल ஒவ்வொன்றிற்கும் இரண்டாகப் பத்தும், ह्रीं காரத்திற்குப் பன்னிரண்டும் ஆகக்கூடி இரண்டாவதாகிய மத்ய கூடத்திற்கு 22 வர்ணங்கள்.

மூன்றுவது கூடத்திலுள்ள स - क - ल - என்பவற்றிற்கு மொத்தமாய் 6 வர்ணங்களும், ह्रीं - காரத்திற்கு 12 வர்ணங்களும் சேர்ந்து மூன்றுவதாகிய சக்தி கூடத்திற்கு 18 வர்ணங்கள். ஆக மூன்று கூடங்களுக்கும் 58 வர்ணங்களுள்ளன. (14)

११. विद्यावर्णानां मात्राकालव्यवस्था

வர்ணங்களை யுச்சரிக்கவேண்டிய மாத்ரா காலத்தைக் கூறுதல்.

मात्राद्वितयोच्चार्या कामकला च त्रिकोणा च।
बिन्दुरहितहृल्लेखा मात्राकालत्रयोच्चार्याः ॥ १५ ॥

अन्येषां वर्णानां मात्राकालोऽर्धमात्रया सहितः।
बिन्दोरर्धं मात्रा परे परे चापि पूर्वपूर्वार्धाः ॥ १६ ॥

संहृतैकलवोनो मात्राकालोऽस्य नादस्य।

(தா - ம்.) குற்றெழுத்திற்கு ஒரு மாத்ரைக் காலமும், நெட்டெழுத்திற்கு இரண்டு மாத்ரைக் காலமும், மெய் யெழுத்திற்கு அரை மாத்ரைக் காலமும் ஆம். ஆதலின் ஏ - ஈ என்னும் நெட்டெழுத்துக்களுக்குத் தனித்தனியே இரண்டிரண்டாக நான்கு மாத்ரைகளும், பிந்து நீங்கலாக ஹ்ரீ காரத்திற்கு மூன்று மாத்ரைகளும் (ह् $\frac{1}{2}$ மா + र् $\frac{1}{2}$ மா + ई 2 மா = 3 மாத்ரைகள்), அகர உயிரேறிய மற்றெல்லாப் பத்து எழுத்துக்களுக்கும் தனித்தனியே $1\frac{1}{2}$ மாத்ரையாக $1\frac{1}{2} \times 10$) 15 மாத்ரைகள். பிந்து, வியஞ்சனமா (மெய்யா) தலால் $\frac{1}{2}$ மாத்ரையாகவும், பின்னர் கிரமமாய் அர்த்த சந்திரன், ரோதினி முதலானவைகளுக்கு முன்னதன் காலத்திற் பாதி பின்னதற்காகுமாதலின், பிந்துவின் பாதி அர்த்த சந்திரன், அர்த்த சந்திரனிற்பாதி ரோதினி, இப்படியே ஸமனை வரையில் கால அளவை ஊகிக்கவும். இதன் விளக்கமாவது:—ஒரு மாத்ரை 256 லவங்களையுடையது.

லவமாவது — தாமரைப்பூவின் இதழை மெல்லியதான ஊசியால் குத்தினால் அவ்வூசி அவ்விதழில் பதியுங்காலமா

கும். பிந்து 128 லவங்கள், அர்த்த சந்திரன் 64, ரோதினி 32, நாதம் 16, நாதாந்தம் 8, சக்தி 4, வியாபிகை 2, ஸமனைக்கு 1 லவம்; உந்மநிக்குக் காலமில்லை. (15, 16)

ஒவ்வொரு கூடத்திற்கும் மாத்ரைக்காலம் கூறுதல்.

एकादश वाक्कूटे सार्धा एकादशोदिता मध्ये ॥ १७ ॥

सार्धा अष्टौ शक्तावेकैकलवोनिता मात्राः ।
संहत्यैकत्रिंशन्मात्रा मन्त्रे लवत्रयन्यूनाः ॥ १८ ॥

(தா - ம்.) முதலாவது வாக்பவ கூடம், இரண்டாவது காமராஜகூடம், மூன்றாவது சக்திகூடம்.

I. क - $1\frac{1}{2}$, ए - 2, ई - 2, ल - $1\frac{1}{2}$, ह्रीं - 3, பிந்து முதல் உந்மநி வரையில் ஒரு லவம் குறைய ஒரு மாத்ரை, ஆக முதல் கூடத்திற்கு ஒரு லவங் குறைய 11 மாத்ரைகள்.

II. ह - $1\frac{1}{2}$, स - $1\frac{1}{2}$, क - $1\frac{1}{2}$, ह - $1\frac{1}{2}$, ल - $1\frac{1}{2}$, ह्रीं - 1 லவம் குறைய 4 மாத்ரை - இரண்டாங் கூடத்திற்கு ஒரு லவங்குறைய $11\frac{1}{2}$ மாத்ரைகள்.

III. स - $1\frac{1}{2}$, क - $1\frac{1}{2}$, ल - $1\frac{1}{2}$, ह्रीं - 1 லவங் குறைய 4 மாத்ரை. ஆக மூன்றாங் கூடத்திற்கு 1 லவங் குறைய $8\frac{1}{2}$ மாத்ரைகள்.

ஆதலால் ஷோடி மனுவை மூன்று லவங்கள் குறைய 31 மாத்ரா காலத்தில் ஒரு முறை உச்சரித்தல் வேண்டும். (17, 18)

## १२. वर्णोत्पत्तिस्थान बाह्याभ्यान्तरयत्नाः

அக்ஷரங்களின் உற்பத்தி ஸ்தானங்களையும் உள், வெளிப் பிரயத்தினங்களையும் கூறுதல்.

**कण्ठे च कण्ठतालुनि तालुनि दन्तेषु मूर्ध्नि नासायाम् ।**
**स्पृष्टविवाराद्यान्तरबाह्यैर्यत्नैस्तदक्षरोत्पत्तिः ॥ १९ ॥**

(தா - ம்.) பஞ்சதசீ மனுவின் மூன்று கூடங்களிலும் உள்ள 58 வர்ணங்களுக்குப் பிறப்பிடங்களாவன :—

क காரங்கள் மூன்றும், இரண்டாவது கூடத்திலுள்ள ह காரங்கள் இரண்டும், ह्रीं காரத்திலுள்ள ह காரங்கள் மூன்றும், உயிர் மெய்யெழுத்துக்களின் மேலேறிய அகாரங்கள் பத்தும் கண்டத்திலும், ए காரம் கண்டதாலுவிலும், அதாவது கழுத்து தாடை இவ்விரண்டினுடைய சந்திஸ்தானத்திலும், ह्रीं காரத்திலுள்ள ஈகாரங்கள் மூன்றும், முதல் கூடத்திலுள்ள (ई) ஈகாரம் ஒன்றும் தாடையிலும், (ल) லகாரங்கள் மூன்றும், (स) ஸகாரங்கள் இரண்டும் பற்களிலும், ह्रीं காரத்திலுள்ள ரகாரங்கள் சிரஸிலும், பிந்துவாதி உன்மனி வரையிலுள்ள மூன்றுஒன்பதும் மூக்கிலும்உற்பத்தியாகின்றன.(19)

| कण्ठे. | कण्ठतालुनि. | तालुनि | दन्ते | मूर्ध्नि | नासिकायां |
|---|---|---|---|---|---|
| क-3 | | | | | |
| अ-10 | ए-1 | ई-4 | ल-3 | रेफं-3 | विन्द्वादि-9 |
| ह-5 | | | स-2 | | (9 × 3) |
| 18 | + 1 | + 4 | + 5 | + 3 | + 27 = 58 |

வர்ணங்களின் உச்சாரணைக்குப் பிரயத்தினங்கள் கூறப்படுகின்றன.

பிரயத்தினங்கள் வெளி—உள் என்னும் பாகுபாட்டால் இருவகைப்படும். क காரங்கள் ஸ்ப்ருஷ்டயத்ந மெனக்

கூறப்படுவதும், अ காரங்கள் ஸம்வ்ருத மெனப்படுவதும், ई கார ए காரங்கள் விவ்ருத மெனப்படுவதும், ऋ கார ऌ காரங்கள் ஈஷத் ஸ்ப்ருஷ்ட மெ(சற்றுத் தொடுவதெ)னப் படுவதும், ह கார स காரங்கள் ஈஷத் விவ்ருதம் அதாவது கொஞ்சம் விவ்ருதமெனப்படுவதும், பிந்து முதல் ஒன்பதும் அதிக ஸம்வ்ருத மெனப்படுவதுமான பிரயத்தினங்களையுடையன. இவைகள் ஆந்தரப் (உள்) பிரயத்தினங்களாகும். இனி பாஹ்ய (வெளி)ப் பிரயத்தினங்கள் கூறப்படுகின்றன.

क காரங்கள் விவார, சுவாஸ, கோஷமெனப்படும் பாஹ்யப் பிரயத்தினங்களையும், स காரங்கள் மஹா பிராணமென்னும் பாஹ்ய ப்ரயத்தினத்தையும், விவாரமென்னும் பிரயத்தினத்தையும், अ காராதிகள் (உயிரெழுத்துக்கள்) யாவும் உதாத்தமென்பதையும், र கார ल காரங்கள் ஸம்வார, நாத, கோஷ, அற்பப் பிராணமென்பவற்றையும், ह காரங்கள் ஸம்வார, நாத, கோஷ மஹாப் பிராண மென்பவற்றையும், பிந்துவாதி ஒன்பதும், அத்யந்தமாய் அதாவது மிக்க இறுதியிலுள்ள ஸம்வார, நாத, கோஷ, மஹாப் பிராணமென்னும் நான்கு பாஹ்ய யத்தினங்களையு முடையனவாகும்.

இவற்றின் விரிவான விளக்கம் வியாகரண சாஸ்திரத்தில், வர்ணங்களின் உற்பத்தி, வர்ணோச்சாரணையின் பிரயத்தினங்கள் முதலியவைகளைக் கூறுமிடத்துக் கண்டு தெளிக. (19)

१३. वर्णस्थितिस्थानरूपाकारवर्णनम्

(அவதாரிகை) மந்த்ர வர்ணங்களின் ஸ்திதி, ஸ்தானம், ரூபம், ஆகாரம் (வடிவம்) இவைகளைக் கூறுதல்.

**प्रलयाग्निनिभं प्रथमं मूलाधारादनाहतं स्पृशाति ।**
**तस्मादाज्ञाचक्रं द्वितीयकूटं तु कोटिसूर्याभम् ॥ २० ॥**

तस्माल्ललाटमध्यं तार्तीयं कोटिचन्द्राभम् ।
मालामणिवद्वर्णाः क्रमेण भाव्या उपर्युपरि ॥ २१ ॥

(தா - ம்.) முதல் கூடம், பிரளய காலத்தில் தோன்றும் அக்னியைப்போன்ற காந்தியை யுடையதாய் மூலாதாரம் முதல் அநாஹதம் (ஹிருதயம்) வரையிலும், இரண்டாவது கூடம் கோடி சூரியர்களுடைய பிரகாச முடையதாகி அநாஹதம் முதல் ஆக்ஞா சக்ரம் வரையிலும், மூன்றாவது கூடம் கோடி சந்திரர்களுடைய பிரகாச முடையதாய் ஆக்ஞை முதல் லலாட மத்தியம் வரையிலும் வியாபித்துக் கொண்டுள்ளன. மாலையிலுள்ள மாணிக்கங்களைப் போல் மூன்று கூடங்களிலுமுள்ள வர்ணங்கள் (எழுத்துக்கள்) வரிசையாய் ஓரெழுத்துக்குமேல் மற்றோரெழுத் துள்ளதுபோல் பாவித்தல் வேண்டும். பிந்து முதல் உந்மநி வரையிலுள்ள ஒன்பதைப்பற்றிப் பின் கூறப்படும். ஸஹஸ்ராரத்திலுள்ள ஸுஷும்நா வென்னும் நாடியானது தன் ஸ்தானத்திலிருந்து மூலாதாரம் வரையிலும், மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரையிலும் உலவிக் கொண்டிருக்கும். மூலாதார ஸஹஸ்ராரங்களுக்கிடையில் எட்டு, ஆறுமுதலிய தளங்களையுடைய முப்பது கமலங்கள் உள்ளனவென்று மிக விரிவாய் ஸ்வச்சந்த ஸங்கிரகம் முதலிய கிரந்தங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

மூலாதாரம் என்னும் நான்கிதழ்ப் பத்மம் குதஸ்தானத்தைக் காட்டிலும் இரண்டங்குலம் மேலும், ஸ்வாதிஷ்டானமென்னும் ஆறிதழ்க்கமலம் லிங்கத்திலும், மணிபூரகம் என்னும் பத்திதழ்ப்பத்மம் நாபியிலும், அநாஹதம் என்னும் பன்னிரண்டுதள கமலம் ஹிருதயத்திலும், விசுத்தியென்னும் பதினாறிதழ்க் கமலம் கண்ட (கழு)த்திலும், ஆக்ஞை யென்னும் இரண்டிதழ்க் கமலம் புருவ மத்தியிலும் இருக்கின்றன. இரண்டிரண்டு கிரந்திகளால் மத்தியில் வியாபிக்கப்பட்ட சக்தி

ரங்களென்னும் பெயருடைய ஆறு கமலங்கள் உள்ளன வென்று இதர கிரந்தங்களில் விஸ்தாரமாய்க் கூறப்பட்டிருக் கின்றது. (20, 21)

## आधारोत्थितनादो गुण इव परिभाति वर्णमध्यगतः

((தா - ம்.) மூலாதாரத்திலிருந்து புறப்பட்ட நாதம் இவ்வெழுத்துக்களுக்கிடையில் (மணிகளுக்கிடையே ஊடுரு விச் செல்லும்) கயிற்றைப்போல் பிரகாசிக்கும்.

சப்த சிருஷ்டியின் விவரம் எங்ஙனமெனின் :—

ஆலம் விதைக்குள் ஆலமரத்தின் அதி ஸூக்ஷ்ம ரூப மான ஒரு சக்தியுண்டு. இதைப்போல், சப்த சிருஷ்டியி னுடைய சூக்ஷ்ம ரூபத்தையுடையது திரிபுரஸுந்தரியா கும். அத்தகைய சூக்ஷ்மமான சக்தியே பிரவிர்த்தி நிமித்த மாகும் பரா என்னும் சப்தத்தினால் கூறப்படுகின்றது. தெரிந்து கொள்வது (म्राति), கடக்கும்படி செய்வது (तरति), பிரகாசிக்கச் செய்வது (काशयति) என்னும் அர்த்தமுள்ள மாத்ருகை என்று அந்தத் திரிபுரஸுந்தரீ ரூபமான பரையே கூறப்படுகின்றாள்.

(விசேஷ வுரை) இங்ஙனம் மாத்ருகை யென்று கூறப் படும் பரையானவள், நிர்விகாரமாய் இருப்பினும் அநாதியா யுள்ள ஜீவர்களின் அதிர்ஷ்ட வசத்தினால் ஜகத்தைச் சிருஷ் டிக்க வேண்டுமென்னும் எண்ணம் உண்டாய் சிருஷ்டிக்க வேண்டியவற்றைப் பற்றி ஆலோசித்து 'तदैक्षत बहुस्यां प्रजायेय' என்னும் ஸ்ருதிப் பிரமாணப்படி அப்படியே யானாள். இத் தகைய ஈக்ஷணமென்னும் பிரவிர்த்தியின் நிமித்தமாய் அந் தப் பரையே பஶ்யந்தீ என்னும் பெயரைப் பெற்றாள். இதன் அவயவங்கள் வாமாதி எட்டு. இந்த பஶ்யந்தி மாத் ருகையானது, தனது அவயவங்களும் தானுமான வியஷ்டி

ஸமஷ்டி பாவத்தினால் ஒன்பது வகையினதாகும். இவ்வொன்பது விதமான பஶ்யந்தியினால், அவிக்ருதம், சூன்யம் முதலிய நவநாதங்கள் உண்டாயின. இவற்றின் ஸமஷ்டியே ஸூக்ஷ்ம மத்திமையாகும். அவிக்ருதம், சூன்யம், ஸ்பர்ஶம், நாதம், த்வனி, பிந்து, சக்தி, பீஜம், அக்ஷரம் என்னும் வியஷ்டி நாதங்களின் வடிவம் ஸ்தூல மத்திமையாகும். இவ்வொன்பது நாதங்களும் முறையே மூலாதாரம் முதல் ஆக்ஞைவரையில் ஆறு சக்கிரங்கள், நாதம், நாதாந்தம், பிரஹ்மரந்திரம் என்னும் ஒன்பது ஸ்தானங்களிலும் விளங்கும். இவ்வொன்பது நாதங்களாலும் अ - क - च - ट - त - प - य - श - ळ என்னும் ஒன்பது வர்க்கங்களையுடைய வைகரீ வாக்கு உண்டாயிற்று. वै - निश्चयेन स्पष्टतरत्वात्, खं - कर्णविवरवर्तिनभोरूपश्रोत्रेन्द्रियं, राति - गच्छति तज्जन्यज्ञानविषयो भवतीति—**वैखरी** - நிச்சயமாயும் ஸ்பஷ்டமாயும் செவித்துளையிலுள்ள ஆகாசரூப ச்ரோத்ரேந்த்ரியத்தை யடைந்து வர்ணத்தின் (எழுத்தின்) சப்த ஞானத்தை யுண்டு பண்ணுவதால் வைகரீ யென்று கூறப்படும்.

(காரியரூப) கடத்தில் (காரணரூப) மண்ணைப்போல் அக்ஷரங்களில் நாதம் வியாபகமாய் இருக்கின்றது. இத்தகைய நாதம் ஒவ்வோரிரண் டெழுத்துக்களின் மத்தியிலும், இரண்டு மணிகளுக்கு இடையிலுள்ள சுத்தமான கயிற்றைப் போல் பிரகாசித்துக்கொண் டிருக்கிறது. (21½)

மற்றைய பிந்து முதல் உந்மநீ யீறாகவுள்ள வொன்பதன் ஸ்திதி, ஸ்தானம், உருவம் (நிறம்), வடிவம், முதலியவை கூறப்படுகின்றது.

**मध्येफालं विन्दुर्दीप इवाभाति वर्तुलाकारः ॥ २२ ॥**

**तदुपरि गतोऽर्धचन्द्रोऽन्वर्थः कान्त्या तथाऽऽकृत्या ।**
**अथ रोधिनी तदूर्ध्वं त्रिकोणरूपा च चन्द्रिकाकान्तिः ॥ २३ ॥**

नादस्तु पद्मरागवदण्डद्वयमध्यवर्तिनीव सिरा ।
नादान्तस्तडिदाभः सव्यस्थितबिन्दुयुक्तलाङ्गलवत् ॥ २४ ॥

तिर्यग्बिन्दुद्वितये वामोद्गच्छत्सिराकृतिः शक्तिः ।
बिन्दूद्गच्छत्त्र्यश्राकारधरा व्यापिका प्रोक्ता ॥ २५ ॥

ऊर्ध्वाधोबिन्दुद्वयसंयुतरेखाकृतिः समना ।
सैवोर्ध्वबिन्दुहीनोन्मना तदूर्ध्वे महाबिन्दुः ॥ २६ ॥

शक्त्यादीनां तु वपुर्द्वादशरविकान्तिपुञ्जाभम् ।

1. பிந்து :—நெற்றியின் மத்தியில் தீபத்தைப்போன்ற ஒளியை யுடையதாய் வட்டமா யிருக்கும். ◦

2. அர்த்த சந்திரன் :—பிந்துவுக்கு மேல் ஒளியிலும் வடிவத்திலும் அர்த்த சந்திரனைப்போலிருக்கும். ◡

3. ரோதினி :—அர்த்த சந்திரனுக்குமேல் நிலவைப் போன்ற ஒளியை யுடையதாய் முக்கோண வடிவமாக விருக்கும். △

4. நாதம் :—பத்மராக மணியைப் போன்ற காந்தி யோடு இரண்டு அண்டங்களுக்கிடையில் உள்ள இலிங்கத் தைப்போல் இருக்கும். ⦶

5. நாதாந்தம் :—மின்னலைப் போன்ற ஒளியையுடைய தாய் இடது பக்கத்தில் பிந்துவோடு ஏர்க்காலைப் போன்ற வடிவமுடையது. ஏர்க்காலின் மேல்நுனி வலது பாகத்தில் நீண்டிருக்கும். c|

6. சக்தி :—குறுக்கேயுள்ள இரண்டு பிந்துக்களில் இடது பக்கத்தில் உள்ள பிந்துவுக்குமேல் மேல் நோக்கிப்

புறப்படும் ஒருகோட்டை (ஸிரையை) யுடைய வடிவ முடை யது. ¦

7. வியாபிகை :—பிந்துவோடு கலந்த முக்கோண வடிவமுடையது.

8. ஸமனா :—மேலும் கீழும் பிந்துக்களை யுடைய கோட்டின் வடிவமுடையது.

9. உந்மநீ.—மேல் பாகத்தில் பிந்துவின்றிக் கீழ்ப் பாகத்தில் பிந்துவோடு கூடிய கோட்டைப்போன்ற வடிவ முடையது.

10. இதற்கு மேல் மஹாபிந்து உளது.

சக்தி, வியாபிகை, ஸமனா என்பவை பன்னிரண்டு சூரி யர்களினுடைய ஒளியைப் போன்ற காந்தியை யுடையவனவாகும்.

குறிப்பு :—பிந்து முதலியவற்றின் ஸ்வரூபங்கள் ஸ்வச்சந்த ஸங்கிரஹத்தில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றது. (22, 23, 24, 25, 26½)

१४. वर्णोच्चारणप्रकारः

**इत्येवं वर्णानां स्थानं ज्ञात्वोच्चरेद्यत्नात् ॥ २७ ॥**

(தா - ம்.) இங்ஙனம் மூல வித்தையின் ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் கழுத்து, பல் முதலிய உற்பத்தி ஸ்தானங்களையும், மூலாதாரம் முதலிய ஸ்திதி ஸ்தானங்களையும் தெரிந்துகொண்டு, ஆந்தர பாஹ்யங்களெனும் உள் வெளிப் பிரயத்தினங்களால் உச்சரித்தல் வேண்டும். மானஸிக ஜபத் தில் மந்த்ர அக்ஷரங்களின் வெளிப்படையான உச்சாரணை

யின்மையால் இந்த நியமம் இல்லை. ஆயினும் அப்பொழுதும் வர்ணங்களின் ஸ்தானப் பிரயத்தினங்களின் பாவனையை மாத்திரம் செய்தல்-வேண்டும். (27)

**नादः प्राथमिकस्तु द्वितीयकूटेन साकमुच्चार्यः ।**
**द्वैतीयीकं नादं तार्तीयेनोच्चरेन्न पृथक् ॥ २८ ॥**

(தா - ம்.) முதல் கூடத்திலுள்ள நாதம் அதாவது பிந்து முதல் உன்மனி வரையிலுள்ள நாதமானது இரண்டாவது கூடத்தோடும், இரண்டாவது கூடத்திலுள்ள அந்த நாதம் மூன்றாவது கூடத்தோடும் சேர்த்து உச்சரித்தல் வேண்டும். இங்ஙனமன்றி வெவ்வேறாய் உச்சரித்தல் கூடாது. (28)

**बिन्द्वादिनवकयोस्तु प्राक्तनकूटस्थयोरनयोः ।**
**संमेलनेन शबलं तार्तीयीकं विभावयेत्कूटम् ॥ २९ ॥**

(தா - ம்.) பிந்து முதலிய ஒன்பதன் நாதம், முதல் இரண்டு கூடத்திலும் அந்தர்ப்பூதமாயும், மூன்றாவது கூடத்தில் ஸ்பஷ்டமாயும் பாவித்தல் வேண்டும். (29)

**बिंद्वादिकसमनान्तं क्रमेण तार्तीयमुच्चरेन्नादम् ।**
**उन्मन्यन्तर्लीनं विभावयेदेतदुच्चरणम् ॥ ३० ॥**

(தா - ம்.) மூன்றாவது கூடத்தில் பிந்துமுதல் ஸமனை வரையில் கிரமமாய் நாதத்தை உச்சரித்துக்கொண்டு இதை உன்மனியில் லீனமானதாய்ப் பாவிக்கவேண்டும்.

குறிப்பு :—உன்மனிக்கு உச்சாரணைகால மின்மையால் அதைப் பாவனை செய்யத்தான் முடியும் என்பதை அறியவும். (30)

१५. वर्णोच्चारण कालनिष्कर्षः

(அவதாரிகை.) இதுவரையில் வித்தையின் உச்சாரணையின் பிரகாரம் கூறப்பட்டது. இனி உச்சாரணையின் காலம் கூறப்படுகிறது.

**आद्ये दश मध्ये ताः सार्धास्तार्तीयकूटेऽष्टौ ।**
**एकलवोना ऊनत्रिंशन्मात्रा मनोर्जपे कालः ॥ ३१ ॥**

(தாத் - ம்.) முதல் கூடத்தைப் பத்து மாத்திரைக் காலத்திலும், இரண்டாவது கூடத்தை பத்தரை மாத்திரைக் காலத்திலும், மூன்றாவது கூடத்தை ஒரு லவம் குறைய எட்டரை மாத்திரைக் காலத்திலும் உச்சரித்தல் வேண்டும். ஆகவே, ஒரு முறை பஞ்சதசீ மந்த்ரத்தை உச்சரிப்பதற்கு ஒரு லவம் குறைய இருபத்தொன்பது மாத்திரைக் காலம் வேண்டும். இந்த கால நிபந்தனை வாசிக ஜபத்திற்கேயன்றி மானஸிக ஜபத்திற்கு இல்லை. ஜபகாலத்தில் அன்றி கூடங்களைப் பிரத்தியேகமாய் உச்சரிக்கவேண்டிய ஸந்தியா வந்தனாதிகளிலும், நியாஸாதிகளிலும் உச்சரிக்கும்போது முதல் இரண்டு கூடங்களிலும்கூட பிந்துமுதல் ஒன்பதையும் சேர்த்து உச்சரித்தல் வேண்டும். (விவரம் 17½-18 ஶ்லோகங்களைக் கவனிக்க). (31)

१६. व्यष्टिसमष्टिभेदेन चतुर्धाभिन्नानां कूटानां स्वरूपविशेषवर्णनम्

(அவ - கை.) அந்த அந்த கூடங்களுக்கு வியஷ்டி ஸமஷ்டி பேதங்களால், நான்கு விதமாயுள்ள ஸ்வரூப விசேஷத்தைக் கூறுகின்றார்.

**व्यष्टिसमष्टिविभेदादस्यां चत्वारि बीजानि ।**
**सृष्टिस्थितिसंहारानाख्यारूपाणि भावनीयानि ॥ ३२ ॥**

(தா - ம்.) இந்தக் கூடங்களில், வியஷ்டி, ஸமஷ்டி யெனனும் பேதங்களால் நான்கு பீஜங்கள் உண்டு. அவை சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், அநாக்கியை யென நான்கு ரூபங்களாகப் பாவிக்கத் தக்கவை. அநாக்கியை என்றால் திரோதான, அநுக்கிரஹங்களின் ஸமஷ்டியாகும். அல்லது உதாஸீந அவஸ்தையோடு சேர்ந்த சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களாகவும் நான்காகும். மூன்று கூடங்களும் வியஷ்டியாக மூன்று பீஜங்களாகும்; ஸமஷ்டியாக ஒரு பீஜம்; ஆக நான்கு பீஜங்களாகும். (32)

पुटधामतत्त्वपीठान्वयलिङ्गकमातृतत्समष्टीनाम् ।
रूपान्तराणि बीजान्यमूनि चत्वारि चिन्तनीयानि ॥ ३३ ॥

(தா - ம்) புடங்கள், தாமம், தத்வங்கள், பீடங்கள், அந்வயம், லிங்கம், மாத்ருகை என்பனவற்றிற்கும் அவற்றின் ஸமஷ்டிக்கும் ரூபாந்தரமாக நான்கு பீஜங்களையும் விசாரிக்கத்தக்கன.

I. புடங்கள் :—ஞாத்ரு, ஞானம், ஞேயம் என்பன வியஷ்டி. இதன் ஸமஷ்டி ஒன்று. அது திரிபுடியின் ஸாமரஸ்யமாகும்.

II. தாம ஸப்தகமாவன :—சக்கிரம், நாதர், தசை சக்தித்ரயம், ஆத்மரூபங்கள், என எழுவகையாம்.

1. சக்கிரங்கள் :—அக்நி சக்கிரம், சூரிய சக்கிரம், சோமசக்கிரம், பிரஹ்ம சக்கிரம்.

2. நாதர்கள் :—மித்ரேசநாதர், ஷஷ்டீசநாதர், உட்டீசநாதர், சரியாநந்தநாதர்.

3. தசைகள் :—ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி, துரீயம்.

4. சக்திகள் :—i. வாமை, ஜ்யேஷ்டை, ரௌத்ரீ, சாந்தை;

5. ௸ ii. இச்சை, ஞானம், க்ரியை, அம்பிகை;

6. ௸ iii. காமேஸ்வரீ, வஜ்ரேஸ்வரீ, பகமாலினீ, மஹாதிரிபுரஸுந்தரீ.

7. ஆத்மா :—ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா, ஞானாத்மா.

இங்ஙனம் மேற்கூறியவை தாம (धाम) ஸப்தகங்களாகும்.

III. தத்வங்கள் :—ஆத்மதத்வம், வித்யாதத்வம், சிவதத்வம், ஸர்வதத்வம்.

IV. பீடங்கள் :—காமகிரி, பூர்ணகிரி, ஜாலந்தரம், ஒட்டியாணம்.

V. அன்வயம் அல்லது ஆம்நாயம் :—பூர்வாம்நாயம், தக்ஷிணாம்நாயம், பஸ்சிமாம்நாயம், உத்தராம்நாயம்.

VI. இலிங்கங்கள் :—சுயம்புலிங்கம், பாணலிங்கம், இதரலிங்கம், பரலிங்கம்.

VII. மாத்ருகை :—பஸ்யந்தி, மத்யமை, வைகரீ, பரா.

மேற்கூறிய எழுவகைப் பிரிவுகளிலும் உட்பிரிவுகளிலும் முதலில் கூறப்பட்ட மூன்றும் வியஷ்டிகளாகுமென்றும், பின்னர் கூறியது அவற்றின் ஸமஷ்டியாகுமென்றுமறிக. தாமம் என்னும் பிரிவில் கூறப்பட்ட மூன்று வகையான சக்திகளும் மாத்ருகை என்னும் சப்தத்திற்குப் பொருளாகும். ஆகவே புடாதி ஆறுவகையினவென்றும் கூறத்தகும். (33)

१७. प्रत्यक्षरं स्वरूपोक्तिः

एकैकस्मिन्कर्मणि सृष्ट्यादि विभेदतस्त्रिविधे ।
ब्रह्माद्या अधिपतयो भारत्यादिस्वशक्तिभिः सहिताः ॥ ३४ ॥

ब्रह्मादयस्त्रयोऽमी भारत्याद्याश्च शक्तयास्तिस्रः ।
प्रत्यक्षरस्वरूपाः शाक्तार्थे वक्ष्यमाणया रीत्या ॥ ३५ ॥

(தா - ம்.) *ஸிருஷ்டி, ஸ்திதி, லயங்களென்னும் மூன்று வித கிருத்தியங்களிலும் ஸாஸ்வதி முதலிய சக்திகளோடு கூடிய பிரஹ்மாதிகள் அதிபதிகளாவர்.*

I. ஸிருஷ்டிகிருத்தியம் மூன்று வகை :— 1. *ஸிருஷ்டியில் ஸிருஷ்டி,* 2. *ஸிருஷ்டியில் ஸ்திதி,* 3. *ஸிருஷ்டியில் ஸம்ஹாரம்.*

II. ஸ்திதியில் மூன்று வகை :—1. *ஸ்திதியில் ஸிருஷ்டி,* 2. *ஸ்திதியில் ஸ்திதி,* 3. *ஸ்திதியில் ஸம்ஹாரம்.*

III. ஸம்ஹாரத்தில் மூன்று வகை :—1. *ஸம்ஹாரத்தில் ஸிருஷ்டி,* 2. *ஸம்ஹாரத்தில் ஸ்திதி,* 3. *ஸம்ஹாரத்தில் ஸம்ஹாரம்:*

*இங்ஙனம் ஒவ்வொரு மூன்றிலும் பிரஹ்மா, விஷ்ணு ருத்ரர் மூவரும் பாரதி, பிருதிவி, ருத்ராணி என்னும் சக்திகளோடு சேர்ந்து, அதிபதிகளாவர். எனவே* क - *பிரஹ்மா,* ए *ஸரஸ்வதி,* ई - *விஷ்ணு,* ल - *பிரிதிவி அல்லது லக்ஷ்மி,* ह्रीं *காரத்திலுள்ள* ह् - *ருத்ரன்,* र् - *ருத்ராணி,* ई *சாந்தாம்பிகை களின் மிதுனங்களாகும். இவை பீஜஸ்வரூபங்கள். இங்ஙனம் முதல் கூடம் கூறப்பட்டது.*

*இரண்டாவது கூடத்தில் உள்ள இரண்டாவது* ह *காரத்தை நீக்கி, மீதி அக்ஷரங்களுக்கு மேற்கூறியவாறே*

பொருள் கொள்ளல் வேண்டும். எங்ஙனமெனின், ह ப்ரஹ்மா, स-ஸரஸ்வதி क-விஷ்ணு, ल-லக்ஷ்மி ह्-ருத்ரன், र्-ருத்ராணி, ई-சாந்தாம்பிகைகளின் மிதுனங்கள். இவையே இரண்டாவது கூடத்தின் பீஜஸ்வரூபங்களாகும்.

இரண்டாவது கூடத்தில் நீக்கி வைத்த ह காரத்தை மூன்றாவது கூடத்தின் முதலில் சேர்க்கின், இரண்டாவது கூடத்திற் கூறியவாறே பீஜஸ்வரூபங்களாகும். மூன்றாவது, சக்தி கூடமாதலால் சக்திப்பிரதானத்தன்மையால் முதலில் ஸரஸ்வதிரூபமாகும் स காரத்தினால் துவக்கப்பட்டது. மற்றவை முன்போல் என்றறியவும். இவற்றின் விளக்கம் பின் சாக்தார்த்தத்தில் நன்கு விவரிக்கப்படும். (34, 35)

१८. विन्द्वादीनां स्वरूपोक्तिः

(அ-கை) மீதியுள்ள பிந்துமுதல் ஒன்பதன் ஸ்வரூபம் கூறப்படுகின்றது.

**हृल्लेखाकामकलासपरार्धकलाख्यकुण्डलिन्युत्थाः**
**नादाश्चक्रत्रितयत्रितयात्मानो विभावनीयाः स्युः ॥ ३६ ॥**

(தா - ம்) ஸபரார்த்தகலை யெனில், स காரத்திற்குப் பிறகு உள்ள எழுத்து ह காரம். இந்த ह என்னும் அக்ஷரம் விஸர்க்கம் அல்லது இரண்டு பிந்துக்களின் வடிவம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் அர்த்த பாதி, ஒரு பிந்து. இதுவே ஸபரார்த்த கலையாகும். இத்தகைய பிந்து கலைகள் மூன்றும், மூன்று (கூடங்களிலுள்ள) ह्रीं காரங்களிலுள்ள ई காரங்களோடு விளங்கி "குண்டலினி" என்று கூறப்படும். இந்த மூன்று ई காரங்களிலுள்ள மூன்று நாதங்களுக்கும், நாதம் ஒன்றுக்கு மூன்று சக்கிரங்கள் வீதம் ஒன்பது சக்கிரங்கள். இந்த பிந்துகலை முதற்கூடத்தில்

"வஹ்நி குண்டலினி" யென்றும், இரண்டாவது கூடத்தில் "சூர்ய குண்டலினி" என்றும், மூன்றாவது கூடத்தில் "ஸோம குண்டலினி" என்றும் பெயர் பெறும். வஹ்நி குண்டலினியின் ஸ்வரூபதத்வம் குருமுகமாகவே அறியத் தக்கது. அந்த நாதம் பிந்து முதல் உந்மநி வரையில் உள்ள ஒன்பதற்கும் ஸமஷ்டி வடிவமாயிருந்து தீப சிகையின் அக்ரத்தில் மையுண்டாவது போல் அந்த பிந்துகலையிலிருந்தே யுண்டாகும்.

அதாவது ஸபரார்த்தகலை யென்னும் பிந்துகலையி லிருந்து அர்த்தசந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை, உந்மநி முதலியவை உண்டாகின்றன.

அநாஹத சக்கிரத்திலிருந்து ஆக்ஞை வரையில் புறப்பட்ட முதல் கூடத்தின் நாதமானது, த்ரைலோக்யமோஹனம், ஸர்வாசாபரிபூரகம், ஸர்வஸம்க்ஷோபணம் என்ற சக்கிர நாமங்களை யுடைத்தாய் சிருஷ்டி சக்கிரத்தின் நாமாந்தரமா யிருக்கிறது.

ஆக்ஞா சக்கிரத்திலிருந்து பிந்து ஸ்தானம் வரையில் புறப்பட்ட இரண்டாவது கூடத்திலுள்ள நாதமானது ஸர்வ ஸௌபாக்யதாயகம், ஸர்வார்த்தஸாதகம், ஸர்வரக்ஷாகரம் என்னும் சக்கிர நாமங்களையுடைத்தாய் ஸ்திதி சக்கிரத்தின் நாமாந்தரமா யிருக்கிறது.

பிந்துஸ்தானத்திலிருந்து துவாதசாந்தம் வரையில் புறப்பட்ட நாதம், ஸர்வரோகஹரம், ஸர்வஸித்திப்ரதம், ஸர்வாநந்தமயம் என்னும் சக்கிரங்களின் பெயர்களை யுடைத்தாய் ஸம்ஹார சக்கிரத்தின் நாமாந்தரமா யிருக்கிறது. இங்ஙனம் பாவித்தல் அத்தியாவசியம். (36)

११. जपकालविभाव्यमवस्थापञ्चकम्

(அ - கை.) அவஸ்வதாபஞ்சகம், சூனியஷட்கம், விஷு வத்சப்தகம் என்னும் இவைகளையும் பாவித்தல் வேண்டும் என்று கூறப்படுகின்றது.

**इन्द्रियदशकव्यवहृतिरूपा या जागरावस्था ।**
**तत्र प्रकाशरूपो हेतुर्भाव्यस्तृतीयगे रेफे ॥ ३७ ॥**

(தா - ம்.) *வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தங்கள் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும், கிராணம், ரஸனே, சக்ஷுு, துவக்கு, சுரோத்திரங்களென்னும் ஐந்து ஞானேந்திரியங்களும் ஆகப் பத்து இந்திரியங்களைக் கொண்டு வியவகாரம் செலுத்தும் அவஸ்தை ஜாக்ராவஸ்தையென்று கூறப்படும். ஈண்டு காரணமான ஞானத்திற்கு ரூப மின்மையால், பிரகாச வடிவமாய் மூன்றுவது கூடத்தில் உள்ள ரேபத்தில் அதாவது र காரத்தில் பாவித்தல் வேண்டும். இதுவே முதல் அவஸ்தையாகும்.* (37)

**अन्तःकरणचतुष्कव्यवहारः स्वाप्निकावस्था ।**
**सा तार्तीयेकाराद्बोध्याऽपि गलस्थले चिन्त्या ॥ ३८ ॥**

(தா - ம்.) *அந்தக்கரண வடிவமான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கினாலும் வியவகரிக்கப்படும் அவஸ்தை ஸ்வப்நாவஸ்தையாம். அதை விளக்கும் பிரகாச வடிவம் மூன்றுவது கூடத்தில் உள்ள ह्रीं காரத்திலுள்ள ई காரத்தில் பாவிக்கத்தக்கதாயிருப்பினும், இரண்டாவது கூடத்திலுள்ள ल காரத்திலேயே பாவித்தல் வேண்டும்.* (38)

**आन्तरवृत्तेर्लयतो लीनप्रायस्य जीवस्य ।**
**वेदनमेव सुषुप्तिश्चिन्त्या तार्तीयबिन्दौ सा ॥ ३९ ॥**

(தா - ம்.) சித்த விருத்தியின் நாசத்தினுல் இறந்தவனுக் கொப்பாயுள்ள ஜீவனுடைய அவஸ்தையே சுஷுப்தியென்று கூறப்படும். இந்த அவஸ்தையை மூன்ருவது கூடத்தின் பிந்துவில் அதாவது லலாட ஸ்தானத்தில் பாவிக்க வேண்டும்.

குறிப்பு :—விவரண மதத்தில், ஆத்ம விருத்தி, சுகாகார விருத்தி, அக்ஞான விருத்தி ஆகிய மூன்று விருத்திகளுக்கும் விஷயமான ஆத்ம, சுக, அக்ஞானங்கள் சுஷுப்தியில் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளன. ஆத்ம, சுக, அக்ஞான விருத்திகளுக்கு அவித்யா விருத்தியென்றும் வேறெரு பெயருண்டு. விருத்தி யென்ருல் அந்தக்கரண பரிணுமமாகும். வார்த்திககாரர் மத ரீதியாய் விருத்தி சூனியமே சுஷுப்தியாகும். (39)

**तुर्याऽवस्था चिदभिव्यञ्जकनादस्य वेदनं प्रोक्तम् ।**
**तद्भावनाऽर्धचन्द्रादिकं त्रयं व्याप्य कर्तव्या ॥ ४० ॥**

(தா - ம்.) ஞானத்தைப் பிரகடஞ் செய்யும் நாதத்தையறிந்துகொள்வதே துரீயாவஸ்தை யெனப்படும். இத்தகைய பிரகாச வடிவம் அர்த்தசந்திரன், ரோதினி, நாதம், என்னும் மூன்றன்கண்ணும் வியாபித்திருப்பதாகப் பாவனை செய்தல் வேண்டும். (40)

**आनन्दैकघनत्वं यद्वाचामपि न गोचरो नृणाम् ।**
**तुर्यातीताऽवस्था सा नादान्तादिपञ्जके भाव्या ॥ ४१ ॥**

(தா - ம்.) பூர்ணமாயுள்ள ஆநந்தகன துரீயாதீத அவஸ்தையைப்பற்றி வாக்கினுல் சொல்லுவதற்கு அசாத்திய

மானது. இத்தகைய துரீயாதீத அவஸ்தையின் பிரகாச ஸ்வரூபத்தை நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனா, உந்மநி என்னும் ஐந்து ஸ்தானங்களிலும் பாவனை செய்தல் வேண்டும். (41)

२०. शून्यषट्कनिरूपणं

(அவ - கை.) இதுகாறும் அவஸ்தா பஞ்சகம் நிரூபிக்கப்பட்டது. இனி சூனியஷட்கம் நிரூபிக்கப்படுகின்றது.

**तार्तीयीके रेफस्थाने बिन्दौ च रोधिन्याम् ।**
**नादान्त व्यापिकयोश्चन्द्रकतुल्यानि पञ्च शून्यानि ॥ ४२ ॥**
**उन्मन्यां नीरूपं षष्ठं चिन्त्यं महाशून्यम् ।**

(தா - ம்.) மூன்றாவது கூடத்திலுள்ள ह्रीं காரத்திலுள்ள ரேபம் அதாவது र காரம், பிந்து, ரோதினி, நாதாந்தம், வியாபிகை என்னும் ஐந்தன்கண்ணும் மயில் தோகையிலுள்ள கண்களுக்குச் சமானமான ஐந்து சூனியங்களையும், உந்மநியில் செரூபமற்ற ஆறுவதான மஹா சூனியத்தையும் பாவித்தல் வேண்டும். மயில் தோகையின் நுனியிலுள்ள கண்களுக்குச் சமானமான ஆகார (வடிவ)த்தையுடையது சூன்யமென்று கூறப்படும். "शिखिपक्षचित्ररूपैर्मण्डलैः शून्यपञ्चकम् । ध्यायतोऽनुत्तरे शून्यं परं व्योमतनुर्भवेत् ॥ மயில் தோகையின் விசித்திரமான உருவத்தையுடைய மண்டலம் (கண்) சூன்ய மெனப்படும். இவ்வித சூன்யபஞ்சகத்தைத் தியானஞ் செய்பவனுக்குப் பரத்தில் ஆகாச வடிவம்போல மிகச் சிரேஷ்டமான மஹா சூன்யம் விளங்கும் என்று ஸ்வச்சந்த ஸங்கிரஹத்தில் கூறப்பட்டிருப்பது இங்கு அறியத்தக்கது. இங்ஙனமாயின்—अग्न्यादिद्वादशान्तेषु त्रीन्त्रीन्सक्त्वा वरानने । शून्यत्रयं विजानीयादेकैकान्तरितं प्रिये । शून्यत्रयात्परे स्थाने महाशून्यं विभावयेत् ॥ என்று வாமகேச்வர தந்த்ரம், யோகினீ ஹ்ருதயம், பூஜா ஸங்கேதத்தில் கூறப்பட்டிருக்கிறதற்கு முற்கூறியது பொருந்

தாது. இந்த ஶ்லோகத்தின் பொருள் :—அக்னி பீஜமாகிய ரேபம் (र காரம்) முதல் துவாதசாந்தமாகும் மஹாபிந்து இறுதியாகவுள்ள பன்னிரண்டு ஸ்தானங்களுக்கு இடையில், மும்மூன்றுகும் ஒன்றைவிட்டு ஒன்றாக வுள்ள மூன்று சூன்யங்களையும், அவற்றிற்கு மேலுள்ள ஸ்தானத்தில் மஹா சூன்யத்தையும் பாவித்தல் வேண்டும் என்பது ஆகும். இதன்படி ரேபம், ஈ காரம், பிந்து என்னும் மூன்று ஸ்தானங்களை நீக்கி, அர்த்தசந்திரனில் ஒரு சூன்யத்தையும், அதற்குமேல் ரோதினீ, நாதம், நாதாந்தம் என்னும் மூன்று ஸ்தானங்களையும் நீக்கி, சக்தியில் ஒரு சூன்யத்தையும், அதற்குமேல் வியாபிகை, ஸமனை, உந்மநீ என்னும் மூன்றையும் நீக்கி, துவாதசாந்தமாகும் மஹாபிந்துவில் மற்றொரு சூன்யத்தையும், அதற்குமேல் மஹாசூன்யத்தையும் பாவித்தல் வேண்டுமென்று ஏற்படுகின்றது. இவ்வர்த்தம் பொருந்தாது. ஏனெனில் மஹாபிந்துவிற்குமேல் யாதொரு ஸ்தானமும் இல்லாமையினால் மஹாசூன்யத்தின் பாவனைக்கு இடமேயில்லை. ஆதலின் இதைக்காட்டிலும் வேறுவகையாய்ப் பொருள் செய்தல் அவசியமாகின்றது. அது எங்ஙனமெனின், ரேபம் முதல் துவாதசாந்தம் இறுதியாகவுள்ள ஸ்தானங்களில் முதலிலும், கடையிலும் மும்மூன்றை நீக்கி, இடையிலுள்ள அர்த்தசந்திரன் முதல் வியாபிகையிறுதியாயுள்ள ஆறு ஸ்தானங்களில் ஒன்றைவிட்டு ஒன்றில் மூன்று சூன்யங்களையும் அதற்குமேல் நான்காவது சூன்யத்தையும் பாவித்தல் வேண்டும். அதாவது அர்த்தசந்திரன், நாதம், சக்தி என்னும் மூன்று ஸ்தானங்களில் மூன்று சூன்யங்களையும் அதற்கு மேலுள்ள வியாபிகையில் நான்காவது சூன்யத்தையும் பாவித்தல் வேண்டும் என்பது. இவ்வர்த்தமும் பொருத்தமுடையதாகாது. ஏனெனின், அந்த யோகினீ ஹிருதயத்திலேயே शून्यषट्कं सुरेशानि अवस्थापञ्चकं पुनः । विषुवत्सप्त

रूपं च भावयन्मनसा जपेत् ॥ என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றது. இதன்படி ஆறு சூன்யங்கள் என்று சித்திக்கின்றது. நான்கு சூன்யங்களென்று பொருள் செய்யின் உபக்கிரமத்திற்கு முரண்படுகின்றது. ஆதலின் ஆறுசூன்யங்களையே ஒப்பல் வேண்டும். "अग्न्यादि द्वादशान्तेषु" என்னும் ம்லோகத்திலுள்ள अन्तेषु என்னும் பதத்தைத் தனியாய்ப் பிரித்துப் பொருள் செய்தல் வேண்டும். கடைசி கூடத்திலுள்ள ஹ்ருல்லேகையில் அக்னி பீஜமாகிற र காரத்திற்கு முதலிலுள்ள ह காரம் முதல் பன்னிரண்டு ஸ்தானங்களில் (त्रीन् त्रीन् = மூன்றும் + மூன்றும்) ஆறை நீக்கி, அதாவது ह காரம், ई காரம், அர்த்த சந்திரன், நாதம், சக்தி, ஸமனைகளை நீக்கி, இடையிலுள்ள ரேபம், பிந்து, ரோதினீ, நாதாந்தம், வியாபிகையென்னும் ஐந்து ஸ்தானங்களில் ஐந்து சூன்யங்களையும் அதற்குமேல் உந்மநியில் மஹாசூன்யத்தையும் பாவித்தல் வேண்டும். இதுதான் ஸரியான அர்த்தமாகும். மஹாசூன்யத்திற்கு வடிவமேயில்லை. இந்த சூன்யபாவனை அதிக ரஹஸ்யமானது. ஜாக்கிரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி, துரீயம், துரீயாதீதம் என்னும் ஐந்து அவஸ்தைகளுக்கும், முன்னும் பின்னும், ஆறு சூன்யங்கள் உண்டு என்று அறிதல் வேண்டும். ஜாக்கிராவஸ்தைக்குமுன் ஜாக்கிராவஸ்தையின் பிராகபாவரூபசூன்யமுண்டு. ஜாக்கிரத்திற்குப் பின்னும் ஸ்வப்னத்திற்கு முன்னும் ஜாக்ரத்தின் நாசரூபமும் ஸ்வப்னத்தின் பிராகபாவரூபமுமாகுமொரு சூன்யமுண்டு. இங்ஙனமே ஸ்வப்னத்திற்குப் பின்னும் ஸுஷுப்திக்கு முன்னும் ஒரு சூன்யமுண்டு. இது ஸ்வப்னத்தின் நாசரூபமும் ஸுஷுப்தியின் முன்னின்மை வடிவமுமாகும். ஸுஷுப்திக்குப்பின் துரீயத்திற்கு முன்னுள்ள சூன்யம் ஸுஷுப்தியின் பிரத்வம்ஸரூபமும் துரீயத்தின் பிராகபாவரூபமுமாகும். இங்ஙனமே துரீய துரீயாதீதங்களுக்கிடையே ஒரு சூன்ய முண்டு. இவை ஐந்தும்

அவஸ்தைகளுக் குட்பட்டவை. துரீயாதீதத்திற்குமேல் உன்மநீ ஸ்தானத்தில் விளங்குவது மஹா சூன்யமாகும். சூன்ய ஸ்திதியில் எந்த வகையான விர்த்தியுங்கிடையாது. ஞானேந்திரிய கர்மேந்திரிய அந்தக்கரண விவகாரம் ஜாக்கிரத்திலுண்டு; கேவலம் மானஸிகமான விவகாரம் ஸ்வப்னத்திலுண்டு; ஸுஷுப்தியில் ஆத்ம, சுக, அக்ஞானரூப அவித்யா விர்த்தியுண்டு; துரீயத்தில் நாதவேதன (அறிவு) வடிவ விர்த்தியுண்டு; துரீயாதீதாவஸ்தையில் பரிபூர்ண ஆநந்தகன அகண்டாகாரவிர்த்தியுண்டு. மேற்கூறிய சூன்ய ஸ்தானங்களில் எந்தவிர்த்தியுங் கிடையாது. துரீயாதீத அவஸ்தைக்குமேலுள்ள மஹாசூன்யமே அகண்டாகார விர்த்தியும் ஒழிந்த ஸஹஜநிலை யாகுமென்பது பரமரஹஸ்ய மாகும்.

குறிப்பு:—"அவஸ்தைகளுக்குட்பட்ட ஐந்து சூன்யங்களும் கூடஸ்தஸ்வப்பிரகாசத்தினால் விளங்குகின்றன" என்று அறியவும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 12 உன்மநீ | — | மஹா சூன்யம் | ௦ | 6 |
| 11 ஸமநீ | | துரியாதீதம் | | |
| 10 வியாபிகை | — | சூன்யம் | ௦ | 5 |
| 9 சக்தி | | துரீயம் | | |
| 8 நாதாந்தம் | — | சூன்யம் | ௦ | 4 |
| 7 நாதம் | | ஸுஷுப்தி | | |
| 6 ரோதிநீ | — | சூன்யம் | ௦ | 3 |
| 5 அர்த்தசந்திரன் | | ஸ்வப்னம் | | |
| 4 பிந்து | — | சூன்யம் | ௦ | 2 |
| 3 ஈ | | ஜாக்கிரம் | | |
| 2 ர் | — | சூன்யம் | ௦ | 1 |
| 1 ஹ் | | | | 42½ |

## २१. सप्तविषुवनिरूपणं

### இனி ஸப்த விஷுவங்கள் கூறப்படுகின்றன.

### விஷுவம் என்னும் பதத்தின்விவரணம்.

(அவ - கை) விஷுவம் என்றால் ஸமபரிமாணமுள்ள இரண்டு வஸ்துக்கள் மூன்றாவதாகும் ஒன்றில் வியாபித்தல் ஆகும். சூரியன் மேஷராசியில் பிரவேசிக்கும் காலத்தைச் சித்திரைவிஷு வென்றும், துலாராசியில் பிரவேசிக்கும் காலத்தை அற்பிசிவிஷு வென்றும் கூறப்படுவது மிகப் பிரஸித்தமேயாகும். समरात्रिं दिवेकाले विषुवद्विषुवं च तत्-इति अग्निपुराणे—உத்தராயணத்தின் மத்தியகாலம் சித்திரை விஷுவம், தக்ஷிணாயனத்தின் மத்தியகாலம் அற்பிசி விஷுவம் என்று கூறப்படும். சித்திரைவிஷுவத்திற்கு மேஷாயனமென்றும் அற்பிசிவிஷுவத்திற்கு துலாயனமென்றும் மறுபெயர்களுண்டு. मूलाधारं यदा प्राण: प्रविष्ट: पण्डितोत्तम । तदाऽऽद्यं विषुवं प्रोक्तंतापसैस्तापसोत्तम ॥ प्राणसंज्ञो मुनिश्रेष्ठ मूर्धानं प्रविशेयदा । तदाऽन्त्यं विषुवं प्रोक्तं धार्मिकैस्तत्वचिंतकै: ॥ सूर्योहि प्राण: । तथाच प्रश्नोपनिषदि - आदित्योह्वैप्राण: - इति । स च प्राणोमूलाधारप्रवेशानंतरमुदेति । मूर्ध्निप्रवेशानंतरं प्राणतोद्विषडङ्गुलेऽस्तमेति ॥ देवानांच आद्यविषुवे मेषायने सूर्योदय: ; विषुवान्तरे तुलायने चास्तमय: ॥ प्राणोदयास्तमयसमयौ विषुवद्वयत्वेनोक्तौ । अत्रामावास्यात्वेनोक्तो यस्संधिसमय: स एव विषुवद्वयत्वेनोक्त: ॥ द्विशतिकालोत्तरे - "मध्येतु-विषुवं प्रोक्तं पुटद्वयविनिस्सृतं" । इति । तत्र दक्षिणाद्वामगमनसमये यस्संधि: स उत्तरायणमध्यवर्तित्वादाद्यविषुवत्काल: । इतरस्तु दक्षिणायनमध्यवर्तित्वाद्द्वितीय-विषुवत्काल इति ॥

ஸூதஸம்ஹிதை ॥

மேலே காட்டிய பிரமாணங்களால் விஷுவம் என்பது மூன்றன் சம்பந்தம் என்று ஏற்படுகின்றது. இத்தகைய விஷுவங்கள் ஏழு: அவை:—

1. பிராணவிஷுவம், 2. மந்த்ரவிஷுவம், 3. நாடவிஷுவம், 4. பிரசாந்தவிஷுவம், 5. சக்திவிஷுவம், 6. காலவிஷுவம், 7. தத்வ விஷுவம் என்பனவாகும்.

प्राणात्ममानसानां संयोगः प्राणविषुवाख्यः ॥ ४३ ॥

1. பிராணவிஷுவம் :—

(தா - ம்) பிராணன் மனம் ஆத்மா இவைகளின் சேர்க்கையே பிராணவிஷுவ மாகும். க்ஷ கார்ரவடிவ பிராணமே (வாயுவே) பிராண விஷுவமென்று சிலர் கூறுவர்.

குறிப்பு :—

प्राणविषुवम् :—

मूलधारे ब्रह्मेति प्रसिद्धस्य रवस्य वायु कुण्डली संयोगात्तद्व्युत्पत्तिः । स ऐव रवोनाभिपर्यन्तमागत्य, पवनेन मनसा च युज्यते । स एव च हृदयमागतः पवनेन बुद्ध्या च संयुज्यते । अतः स एव स्थानत्रये, परा, पश्यन्तो, मध्यमेति नामत्रयं क्रमेणभजत इति तु सौभाग्य भास्करे वर्णितं श्रीभास्कररायेण ॥

इदमेव च प्राणविषुवपदवाच्यमिति स्थानत्रये मिलित्वा एकाभावना इति ज्ञेयम् ॥ तेन आत्मशब्दोऽत्र बुद्धिपरोद्रष्टव्यः ॥

மூலாதாரத்தில் பிரஸித்தமான சப்தப் பிரஹ்மமானது அதிஸூக்ஷ்மமானவாயுவோடும், குண்டலினியோடும் சேரும்போது ரவம் (நாதம்) உண்டாகின்றது. இந்த நாதம் நாபி வரையில் வியாபித்து, வாயுவோடும், மனத்தோடும், சேருகின்றது. பிறகு அந்த நாதமே ஹிருதயம் வரையில் வந்து, வாயுவோடும், புத்தியோடும், சம்யோகப்படுகின்றது. ஆகையினால் ஒரே நாதம் மூன்று ஸ்தானங்களிலும், அதாவது மூலாதாரம், நாபி, ஹிருத்யம் இவைகளில் சேரும்போது பரை, பஶ்யந்தி, மத்யமை என்னும் நாமங்களைப் பெறுகின்

றது, என்பதை ஸ்ரீ பாஸ்கரராயரால் இயற்றப்பட்ட ஸௌபாக்யபாஸ்கரத்தில் அறிக. இதுதான் பிராணவிஷுவம் ஆகும். இங்கு ஆத்மா என்றது புத்தியை : பிராணனுகும் வாயுவை மனத்தோடும், புத்தியோடும் சேர்த்து அபேதமாய்ப் பாவித்தலே ப்ராண விஷுவம் ஆகும் என்பது திரண்ட பொருளாகும். (43)

2. மந்த்ரவிஷுவம் :—

प्राथमिककूटनादे त्वनाहताद् ब्रह्मरन्ध्रान्ते ।
व्याष्टिसमष्टिविभेदाद्बीजचतुष्कस्य च स्वस्य ॥ ४४ ॥
ऐक्येन नादमयताविभावनं मन्त्रविषुवाख्यम् ।

(தா - ம்) வித்தையின் முதல் கூடத்தின் இறுதியிலுள்ள நாதத்தோடு, அநாஹதம் (ஹ்ருதயம்) முதல் பிரஹ்மரந்திரம் வரையில் வியாபித்துள்ள இரண்டாவது மூன்றுவது கூடங்களின் வியஷ்டி-ஸமஷ்டி யென்னும் பேதத்தினுல் நான்காயுள்ள பீஜங்களின் நாதத்தையும் தனது (ஸாதகனது) மூலாதாரத்திலிருந்து வெளிக்கிளம்பும் நாதத்தையும் ஐக்கியம் செய்தல் மந்த்ரவிஷுவம் எனப்படும்.

குறிப்பு :—இரண்டாவது கூடத்தின் ஸமஷ்டி हसकहलह्रीं என்பது, இரண்டாவது கூடத்தின் வியஷ்டி ह - स - क - ह - ल - ह्रीं என்னும் தனித்தனி வர்ணங்கள்.

இத்தனித்தனி வர்ணங்களின் கர்ப்பத்திலும் (ஆந்தரத்திலும்), வெளியில் முன்னும் பின்னும், மணிமாலையில் கயிறு வியாபித்திருப்பதுபோல், நாதம் வியாபித்திருக்கும் என்று முன் கூறப்பட்டது. மூன்றுவது கூடத்தின் ஸமஷ்டி सकलह्रीं, வியஷ்டி स - क - ल - ह्रीं. இங்ஙனம் இரண்டு கூடங்களின் வியஷ்டி பீஜங்கள் 2, ஸமஷ்டி பீஜங்கள் 2 ஆக நான்கு

பீஜங்களின் நாதத்தோடு முதல் கூடத்தின் நாதத்தையும், தனது மூலாதாரத்திலிருந்து கிளம்பும் சப்தபிரஹ்மவடிவ நாதத்தையும் ஐக்கியம் செய்வது மந்த்ர விஷுவமாம் என்பது கருத்து. आधारोत्थितनादे तु लीनं बुद्ध्वाऽऽत्मरूपकम्। संयोगेन वियोगेन मन्त्राणां महेश्वरि ॥ अनाहताद्याधारान्तं नादात्मत्वविचिन्तनम्। विषुवम् என்னும் காதிமதவசனம் (யோகினீ ஹ்ருதயம்) இங்கு அறிதற்பாலது. (44—44½)

3. நாடீவிஷுவம் :—

**आधारोत्थितनादस्योच्चाराद्ब्रह्मरन्ध्रान्तम् ॥ ४५ ॥**
**षट्चक्राणां ग्रन्थीन्द्वादश भिन्दन्सुषुम्णयैव पथा।**
**नाडीनादार्णानां संयोगो नाडिकाविषुवम् ॥ ४६ ॥**

(தா - ம்) ஒவ்வொரு சக்கிரத்திற்கும் கீழும் மேலும் இரண்டு வீதம், மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு சக்கிரங்களுக்கும், பன்னிரண்டு கிரந்திகளுள்ளன. மூலாதாரத்திலிருந்து புறப்பட்ட நாதமானது அவற்றைப் பேதித்துக்கொண்டு சுழும்நாநாடியின் மூலமாய் மூலாதாரத்திலிருந்து பிரஹ்மரந்திரத்தை அடைகிறது. இங்ஙனம், ஸுஷும்நாநாடியானது நாதங்களுக்கும், வித்தையின் வர்ணங் (எழுத்து) களுக்கும் சம்பந்தப்பட்டிருப்பதாகப் பாவித்துக்கொண்டு உச்சரித்தல் நாடீவிஷுவமெனப்படும். (45, 46)

4. பிரசாந்த விஷுவம் :—

**रेफे कामकलायां हार्दकलायां च बिन्द्वादौ।**
**नादान्तावधि नादः सूक्ष्मतरो जायते तत्र ॥ ४७ ॥**
**शक्तेर्मध्ये तल्लयचिन्तनमुदितं प्रशान्तविषुवाख्यम्।**

(தா - ம்) (மூலாதாரத்திலிருந்து புறப்பட்ட) நாதமானது, (மூன்றாவது கூடத்தின்) ரேபம் அதாவது र காரம், முதல் (1) ई காரம், (2) ஹார்த்தகலை (म காரம்), (3) பிந்து, (4) அர்த்த சந்திரன், (5) ரோதினி, (6) நாதம், (7) நாதாந்தமென்னும் ஏழு ஸ்தானங்கள் வரையிலும் மிகவும் சூக்ஷ்மமாயிருக்கும். இந்த நாதம் சக்தியின் மத்தியில் லயமானதாய்ப் பாவித்தல் பிரசாந்தவிஷுவம் என்று கூறப்படும். இந்த நாதத்தின் த்வனியானது, வெண்கலத்தினாற் செய்த தாளத்தை யடித்த பிறகு, அந்நாதமானது கிரமமாய் வியாபித்து, படிப்படியாய்க் குறைந்து, கடைசியில் லயமாவது போல் இருக்கும். नादयोग: प्रशांतस्तत्प्रशांतेंन्द्रियगोचरम् । वह्निं मायां च कालश्चेतनामर्धचन्द्रकं रोधिनी नादनादान्ताच्छक्तौलीनान्विभावयेत् ॥ इति ॥ नादयोगो - नाडी संबद्धोनादो - यस्मात्कारणात् शक्तौ प्रशान्तो लीनोभवति, तत्तस्मात् कारणात् इदं प्रशान्तविषुवमित्युच्यते

(उत्तरचतुश्शती - 193 श्लो - व्याख्या)

ஸுஷும்நா நாடீஸம்பந்தமான நாதமானது எந்தக் காரணத்தால் र காரம், ई காரம், म காரம் (ஹார்த்தகலை) பிந்து, அர்த்தசந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம் முதலிய ஸ்தானங்களில் நன்றாய்வியாபித்துப் பிறகு சக்தி யென்னும் ஸ்தானத்தில் நன்றாய் லயத்தையடைந்து சாந்தியடைகின்றதோ, அந்தக்காரணத்தால் பிரசாந்த விஷுவம் என்னும் பெயரைப் பெறுகின்றது, என்று உத்தர சதுஶ்ஶதியில் கூறப்பட்டிருப்பது இங்கு அறியத்தக்கது. (47, 47½)

5. சக்திவிஷுவம் :—

**शक्त्यन्तर्गतनादं समनायां भावयेल्लीनम् ॥ ४८ ॥**

(தா - ம்) சக்திக்குள் சாந்தியடைந்த நாதம் மிகவும் சூக்ஷ்மமாய் வியாபிகையை அதிக்கிரமித்து ஸமனையில் லயமடைந்ததாகப்பாவித்தல் சக்தி விஷுவமாகும். (48)

6. கால விஷுவம்:—

समनागतमुन्मन्याम् एते द्वे शक्तिकालविषुवाख्ये ।

(தா - ம்) ஸமனைக்குப் பரமமாய் மிகவும் ஸூக்ஷ்மமாய் உந்மநியில் லயமாகும் நாதம் காலவிஷுவமென்று கூறப்படும். (48½)

7. தத்வ விஷுவம்:—

श्रीविद्याकूटावयवेषु ककारादिषून्मनान्तेषु ॥ ४९ ॥
अकुलादिकोन्मनान्तप्रदेशसंस्थेषु सकलेषु ।

अध्युष्टनिमेषोत्तरसप्तदशाधिकशतत्रयत्रुटिभिः ॥ ५० ॥

उच्चरिते नादे सति तस्यान्ते तत्त्ववेदनं भवति ।
तदिदं चैतन्याभिव्यक्तिनिदानं तु तत्त्वविषुवाख्यम् ॥ ५१ ॥

(தா - ம்) பஞ்சதசீ மந்த்ர வர்ணங்களான க காராதிகள் மூலாதாரத்திலிருந்து உந்மநி வரையில் உள்ள மூன்று கூடங்களின் அவயவங்களாகும். இவைகளை அகுலாதி உந்மநி அந்த பிரதேசங்களில், 3½ நிமேஷம் 317 த்ருடியுமான காலத்தில் (அதாவது 10817 த்ருடிகாலம் நாதத்தை) யுச்சரிக்கையில் தத்வஞானம் உண்டாகின்றது. பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமான இவ்வித உச்சாரணமே தத்வவிஷுவ மென்று கூறப்படுகிறது.

முற்கூறிய 32 பதுமங்களில் கீழுள்ள இரண்டும், எல்லாவற்றிற்கும் மேலுள்ளதும் அகுல பதுமங்களாகும். மீதி பத்மங்கள் குல பத்மங்களென்று கூறப்படும். யோசித்துப் பார்க்குமிடத்து மூலாதாரமென்னும் அகுல பத்மத்திலிருந்தே ஸ்ரீ பஞ்சதசீ மந்த்ரத்தின் ஆரம்பம் கூறப்படுகின்றது. இங்ஙனமாயினும் சக்ரராஜத்தின் ஸகள பாவனை

யானது மூலாதாரத்திற்கும் கீழுள்ள (अध) ஸஹஸ்ரார கமலத்திலிருந்தே ஆரம்பிக்கவேண்டுமென்று "अकुले विषुसंज्ञे च" என்று (வாமகேச்வர தந்திரம் ஸேது பந்தத்தில்) கூறப் பட்டிருப்பதனுலும், சக்கிரத்திற்கும் மந்த்ரத்திற்கும் அபேத மிருப்பதனுலும், மந்த்ரத்தின் ஆரம்பம் கீழ்ஸஹஸ்ராரத் திலிருந்தே செய்தல் வேண்டுமென்று தந்த்ரசாஸ்திரங் களில் கூறப்பட்டிருக்கிறது. அத்யுஷ்டம் என்றால் 3½, நிமேஷமென்றால் கண்ணிமைப் பொழுது. 3000 த்ருடிகள் கொண்டது ஒரு நிமேஷம். "स्वस्थे नरे समासीने यावत्स्फन्दति लोचनम् । तस्य त्रिंशत्तमोभागस्तत्परः परिकीर्तितः । तत्परस्य शतांशस्तु त्रुटिरित्यभिधीयते ॥" இந்த வசனரீதியாய் ஒரு மனிதன் நிச் சிந்தையாய் உட்கார்ந்திருக்கும்போது கண்ணிமையானது எவ்வளவு காலத்தில் தாழ்த்தப்படுமோ அந்தகாலமே நிமேஷ மாகும். அந்த நிமேஷத்தில் முப்பதில் ஒரு பாகம் தத்பரம் என்று பெயர்பெறும். அந்த தத்பரத்தில் நூறில் ஒரு பாகம் த்ருடியாகும். இங்ஙனம் 3½ நிமேஷம் 317 த்ருடி களுக்கு 10817 த்ருடிகளாகின்றன. இவ்வளவு காலத்தில் மந்த்ரத்தின் அவயவங்களையும் ஸ்தானங்களையும் சேர்த்துப் பாவனை செய்து நாதத்தை யுச்சரிக்கையில் தனக்கும் பிரஹ்மத்திற்கும் அபேதரூப போதம் ஏற்படுகின்றது. இதுவே தத்வ விஷுவம் என்று கூறப்படும். (49, 50, 51)

**ऐवमवस्थाशून्यविषुवन्ति चक्राणि पञ्च षट् सप्त ।**
**नव च मनोरर्थाश्च स्मरतोऽर्णोच्चारणं तु जपः ॥ ५२ ॥**

(தா - ம்) இங்ஙனம் 5 அவஸ்தைகள், 6 சூன்யங்கள், 7 விஷுவங்கள், 9 சக்கிரங்கள், மந்த்ரத்தின் 15 அர்த்தங் கள் இவைகளை ஸ்மரித்துக் கொண்டு அக்ஷரங்களை யுச்சரிப்

பதே ஜபமாகும். மந்த்ரத்தின் 15 வகையான அர்த்தங்கள் இரண்டாவது அம்சத்தில் கூறப்படும்.

மூன்று நாதங்களையும் மூன்று சக்கிரங்களாகப் பாவித்தல் வேண்டுமென்று முன்னரே கூறப்பட்டது. "யோகினீ ஹ்ருதயம்" சக்கிரஸங்கேதத்தில் ஸகள, நிஷ்கள, ஸகள நிஷ்கள மென்று சக்கிரபாவனை மூன்று விதமாகவும் கூறப்பட்டிருக்கின்றது.

மூலாதாரத்திற்குக் கீழுள்ள அகுல ஸஹஸ்ராரம், மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி என்னும் ஆறு சக்கிரங்களிலும், உள்நாக்கு, புருவ மத்தி (ஆக்ஞை), பிந்து (நெற்றிநடு) ஆகிய ஒன்பது ஸ்தானங்களிலும் முறையே 1. த்ரைலோக்ய மோஹனம், 2. ஸர்வாசாபரிபூரகம், 3. ஸர்வஸம்க்ஷோபணம், 4. ஸர்வ ஸௌபாக்யதாயகம், 5. ஸர்வார்த்தஸாதகம், 6. ஸர்வ ரக்ஷாகரம், 7. ஸர்வரோகஹரம், 8. ஸர்வஸித்திப்பிரதம், 9. ஸர்வாநந்தமயம் என்னும் ஒன்பது சக்கிரங்களையும் பாவித்தல் ஸகள பாவனை யெனப்படும்.

நெற்றி நடுவேயுள்ள பிந்துஸ்தானத்திலிருந்து பிந்து, அர்த்தசந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை, உந்மநி என்னும் ஒன்பது ஸ்தானங்களிலும் பாவித்தல் நிஷ்கள பாவனையாம்.

உந்மநிக்கு மேலுள்ள மஹாபிந்துஸ்தானத்திலேயே மேற்கூறிய ஒன்பது சக்கிரங்களையும் பாவித்தல் ஸகளநிஷ்கள பாவனையாகும்.

இங்ஙனம் மந்த்ரத்தின் அர்த்தங்களைப் பாவிப்பவர்க்கு, மந்த்ரத்திலுள்ள 58 வர்ணங்களில் முதல் இரண்டு கூடத்திலும் உள்ள பிந்து முதல் உந்மநீ வரையிலுள்ள 18 வர்

ணங்களையும் நீக்கி, மீதியுள்ள 40 வர்ணங்களை மாத்திரம் உச்சரித்தல் வேண்டும். இதுவே ஜபமாகும். (52)

भास्कररायेण, गुरोः करुणावशतः, समुन्मिषिते ।
वरिवस्यातिरहस्ये पूर्वांशः पूर्णतामगमत् ॥ ५३ ॥

(தா - ம்) தனது குருவின் கருணைவிசேஷத்தால் பாஸ்கரராயரால் இயற்றப்பட்ட வரிவஸ்யாரஹஸ்யத்தில் முதலம்சம் முற்றுப்பெற்றது. (53)

इति श्रीनृसिंहानन्दनाथचरणाराधकेन भास्कररायापरनाम्ना भासुरानन्दनाथेनोन्नीते वरिवस्यारहस्ये प्रथमोंशः ॥

இங்ஙனம் ஸ்ரீ நரஸிஹ்மாநந்தநாதரின் பாதசேவகரானவரும், ஸ்ரீ பாஸுராநந்தரென்னும் தீக்ஷாநாமத்தையுடையவருமான ஸ்ரீ பாஸ்கரராயரால் இயற்றப்பட்ட வரிவஸ்யாரஹஸ்யத்தில் முதலம்சம் முற்றிற்று.

முதல் அம்சம் முற்றிற்று.



श्री रस्तु

श्री गुरुभ्यो नमः

# श्री वरिवस्यारहस्ये द्वितीयोंशः



## ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யம் இரண்டாவது அம்சம்.

(அவதாரிகை) முதலம்சத்தில் ஸ்ரீ பஞ்சதசீ வித்தையின் உத்தாரம், வர்ணங்களின் ஸ்வரூபம், உச்சாரணகாலம், பிரயத்னம் முதலியவைகளும், ஜபம் செய்யும் போது பாவிக்கவேண்டிய அவஸ்தை, சூன்யம், விஷுவம் முதலியவையும் கூறப்பட்டன. இனி இரண்டாவது அம்சத்தில் மேற்படி ஸ்ரீ வித்தையின் அர்த்த விசேஷங்கள் முதலியன கூறப்படுகின்றன.

१. अर्थज्ञानस्यावश्यिकतानिर्वाहः

नार्थज्ञानविहीनं शब्दस्योच्चारणं फलति ।
भस्मनि वह्निविहीने न प्रक्षिप्तं हविर्ज्वलति ॥ १ ॥

अर्थमजानानानां नानाविधशब्दमात्रपाठवताम् ।
उपमेयश्चक्रीवान्मलयजभारस्य वोढैव ॥ २ ॥

पुरुषार्थानिच्छद्भिः पुरुषैरर्थाः परिज्ञेयाः ।
अर्थानादरभाजां नैवार्थः प्रत्युतानर्थः ॥ ३ ॥

அர்த்தஞானம் அவசியம் வேண்டுமென்று கூறுதல்.

(தா - ம்.) *அக்கினியில்லாத சாம்பலில் சொரியப்பட்ட ஹவிஸ்ஸா (அவியா) னது, எங்ஙனம் பயனற்ற தாகுமோ, அங்ஙனமே அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளாமல் சப்தத்தை யுச்சரிப்பது பயனற்றதாகும்.* (1)

*அர்த்தஞானமில்லாமல் அநேக சப்தங்களை மாத்திரம் படிப்பவர்கள், எங்ஙனம் சந்தனக்கட்டையைச் சுமக்கும் கழுதையானது, அச்சந்தனத்தின் பரிமளத்தை அறியாதோ அங்ஙனம் அவர்கள் அப்படிப்பின் பயனை யறியமாட்டார்கள். அர்த்தஞான மில்லாமல் படிப்பவர்களுக்கு அப்படிப்பு யாதொரு பயனையும் தாரது.* (2)

*புருஷார்த்தங்களை (தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம்) இச்சிப்பவர் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளல் வேண்டும். அர்த்த ஞானத்தை அநாதரவை (உபேக்ஷை) செய்பவர் களுக்குப் புருஷார்த்த சித்தியும் இல்லை; அநர்த்தங்களும் உண்டாகும்.* (3)

२. अर्थानामुद्देशक्रमः

**अथातः पूर्णगायत्र्याः प्रतिपाद्योऽर्थ आदिमः ।**
**भावार्थः संप्रदायार्थो निगर्भार्थस्तुरीयकः ॥ ४ ॥**

**कौलिकार्थो रहस्यार्थो महातत्त्वार्थ एव च ।**
**नामार्थः शब्दरूपार्थश्चार्थो नामैकदेशगः ॥ ५ ॥**

**शाक्तार्थः सामरस्यार्थः समस्तसगुणार्थकौ ।**
**महावाक्यार्थ इत्यर्थाः पञ्चदश्याः स्वसंमिताः ॥ ६ ॥**

(தா - ம்.) *முதலாவது பூர்ணகாயத்திரியின் அர்த்தம். 2. பாவார்த்தம், 3. ஸம்ப்ரதாயார்த்தம், 4. நிகர்ப்பார்த்தம்,*

5. கௌளிகார்த்தம், 6. ரஹஸ்யார்த்தம், 7. மஹாதத்வார்த்தம், 8. நாமார்த்தம், 9. சப்தரூபார்த்தம், 10. நாமைகதேசார்த்தம், 11. சாக்தார்த்தம், 12. ஸாமரஸ்யார்த்தம், 13. ஸமஸ்தார்த்தம், 14. ஸகுணார்த்தம், 15. மஹாவாக்யார்த்தம் எனப்பதினைந்து வகையான அர்த்தங்கள் பஞ்சதசீ மந்த்ரத்திற்குள்ளன. (4, 5, 6.)

३. गायत्र्यर्थनिरूपणम्

காயத்ரீ-பஞ்சதசீ-மந்த்ரங்களின் அர்த்தம்.

**कामयते स ककारः कामो ब्रह्मैव तत्पदस्यार्थः ।**
**सवितुर्वरेण्यमिति वै सवितुः श्रेष्ठं द्वितीयवर्णार्थः ॥ ७ ॥**
**सर्वान्तर्यामि दधद्भर्गो देवस्य धीति तुर्यार्थः ।**
**पृथ्वी मही लकारस्तृतीयतुर्याङ्घ्रिबोधिका माया ॥ ८ ॥**

(தா - ம்.) காயத்ரீ மந்த்ரத்திலுள்ள तत् என்னும் பதத்திற்குப் பிரஹ்மம் என்பது பொருள். இதற்கு ओं तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः என்னும் வாக்கியம் பிரமாணமாம். பிரஹ்மமானது ஓம், தத், ஸத், என்னும் மூன்று பதங்களால் நிர்த்தேசம் பண்ணப்படுகின்றது. மேலும் तदिति ब्रह्म शाश्वतम् என்பதும் பிரமாணமாம். பஞ்சதசீயிலுள்ள क காரத்திற்கும் பிரஹ்மமென்பதே அர்த்தம். कं ब्रह्म என்னும் ஶ்ருதி இதற்குப் பிரமாணமாம். कामः காமேஶ்வரனே பிரஹ்மமாம்.

तत्=क

सवितुः ஸவித்ருசப்தத்திற்குப் பிராணிகளின் உற்பத்திக்குக் காரணமான யோநி என்பது பொருளாம். அப்படிப்பட்ட காரணம் மிகவும் சிறந்ததாகையால், " वरेण्यं " சிரேஷ்டம் என்று கூறப்பட்டது. " सवितुर्वरेण्यं " என்னும் இரண்டு

பதங்களால் சிரேஷ்டமான பிரபஞ்சகாரணம் என்னும் பொருள் சித்தித்தது. ஆதலின், அத்தகைய சிறந்த காரணம் ஸ்ரீகாமேஸ்வரியேயாகும். "ए" காரத்திற்கு யோனி என்று அர்த்தம். இதன் வடிவம் முக்கோணம். सवितुर्वरेण्य-मिति । 'षूञ् प्राणिप्रसवे'; 'सविता प्राणिनः सूते' इत्युपक्रम्य, 'त्रिकोणा शक्तिरेकारेण महाभगेन प्रसूते तस्मादेकार एव गृह्यते' इत्यादि ஸ்ருதிகளும், "यदेकादशमाधारं बीजं कोणत्रयात्मकं । ब्रह्माण्डादि कटाहान्तं जगद्यापि दृश्यते" ॥ என்னும் ஸ்மிருதியும் இதற்குப் பிரமாணங்களாம்.

## सवितुर्वरेण्यं = ए

भर्गोदेवस्यधी = தேவ பதத்திற்கு ஸர்வாந்தர்யாமியென்றும், धी என்பதற்கு ஜகதாதாரமென்றும், भर्गः என்னும் பதத்திற்கு தேஜஸ் என்றும் பொருள். ஆதலின் ஸர்வாந்தர்யாமியாகவும் ஸமஸ்தப்பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகவும் ஸ்வயம்பிரகாச வடிவமாகவுமுள்ள சிவமென்பது பொருள். ई காரத்திற்கும் மேற்கூறியதே பொருள். "भर्गोदेवस्य" इत्याद्युपक्रम्य, तुरीयमक्षरं सर्वांतर्भूतं 'तस्माद्भर्गोदेवस्यधीत्येवमीकारः' என்பது ஸ்ருதிப்பிரமாணம். ई காரம் பஞ்சதசீ மந்த்ரத்தில் மூன்றாவது எழுத்தாயிருந்தபோதிலும் अ காராதி மாத்ருகைகளில் நான்காவது ஸ்வரம் ஆதலால் துரீய எழுத்து என்று கூறப்பட்டது.

## भर्गोदेवस्यधी = ई

मही என்னும் பதம் பூமண்டலமென்னும் பொருளுடையது. பெரிது, கடினமானது என்னும் பொருள்களுமதற்குண்டு. பூமி என்பதால் மற்ற ஆகாசம், வாயு, அக்னி, ஜலமென்னும் நான்கு பூதங்களையும் உபலக்ஷணமாகக் கொள்ளுதல் அவசியம்; ल காரத்திற்கும் இதுவே பொருள்.

महीयस्य व्याख्यानं என்பது முதல் "ससागरं सकाननं" इत्यादिना भूमण्डलं प्रतिपाद्य, "भूमण्डलमेवोक्तं लकारेण" என்பது வரையிலுள்ள ஶ்ருதி இதற்குப் பிரமாணமாம்.

## मही=ल

धियोयोनः प्रचोदयात् என்னுடையதும் மற்றவர்களுடையது மான புத்திகளை, நிர்க்குணப் பொருளை யடையும் விஷய மாய்ப் பிரேரணை (தூண்டுதல்) செய்துகொண்டு பரதத்வ விஷயமான அறிவையுண்டு பண்ணுவது என்பது பொருள். परोरजसे सावदों (காயத்ரீயின் நான்காவது பாதம்). परोरजसे என் னும் பதம் ரஜோ குணத்திற்கு அதீதமான சுத்தமென்று வது, நிர்க்குண மென்றுவது பொருள்படும். सावदों என் னும் பதத்திற்கு, ஓங்காரம், பிரஹ்மத்தைச் சொல்லுவதற் குக் கூடுமான தென்றுவது, கூடாத தென்றுவது இருவித மாய்ப் பொருள்படும். பரதத்துவ (பிரஹ்ம)த்தில் சப் தங்களுக்கு விஷயமாகும் தருமம் இன்மையால், அது சப்தங் களாலும், அர்த்தக்கிரமத்தாலும் செப்புவதற்குக் கூடாததா கும்; ஆயினும் சத்தியம், ஞானம், முதலிய சப்தங்களுக்கு அர்த்தமாய்த்தாதான்மிய சம்பந்தத்தினுல் அது பிரகாசித் துக் கொண்டிருக்கிறது. ஆதலால் லக்ஷணையினுல் கூறப்படு கின்றது. "यतोवाचोनिवर्तते" "वेदैश्च सर्वैरहमेव वेद्यः" என்னும் ஶ்ருதிகள் இதற்குப்பிரமாணங்களாம். 'लक्ष्यार्था लक्षणागम्या' என்பது ஸ்ம்ருதிப் பிரமாணமாம். இங்ஙனம் பரதத்துவத் தைக் கூறுமல் கூறும் ஓங்காரம் தனது அவயவங்களாகும் அகார, உகார, மகாரங்களால் கூறப்படும், பிரம்மா, விஷ்ணு ருத்ரர்களின் வடிவமேயாகும்.

ह्रीं என்பதற்கும் மேலே கூறப்பட்ட விஷயமே பொரு ளாகும். ஹ்ருதயமென்னும் கிரகத்தில் ह्रीं காரம் இருக்கின் றது. 'हृदयागारवासिनी हृल्लेखा' என்பது ஶ்ருதிப்பிரமாணமாம்.

## धियोयोनः प्रचोदयात् - परोरजसे सावदों=ह्रीं

திரண்ட பொருள்—பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கவேண்டு மென்னு மிச்சையுடைய காமேஶ்வரனும், அதற்குக்காரண மான காமேஶ்வரியும், ஸர்வாந்தர்யாமியும் எல்லாவற்றிற்கும் ஆதாரமானதும் ப்ரகாச விமர்சவடிவமானதும் பஞ்சமஹா பூதங்களின் பரிணாமத்திற்குக் காரணவடிவமானதும், பிரஹ்மவிஷயகமான நிர்விகல்ப ஞானத்தை யுண்டுபண்ணு வதும், குணங்களற்றதும், தோஷமற்றதும், மற்றொருவிதத் தினல் அடையக்கூடாததும் பிரஹ்மவிஷ்ணு ருத்ர வடிவ மானதுமான பிரஹ்மமே பூர்ணகாயத்ரியின் பொருளாகும். இதுவே அர்த்தந்தான் பஞ்சதசியின் முதல் கூடத்திற்கா கும்.

| गायत्री | | पञ्चदशी |
|---|---|---|
| १. तत् | — | क |
| २. सवितुर्वरेण्यं | — | ए |
| ३. भर्गोदेवस्यधी | — | ई |
| ४. मही | — | ल |
| ५. धियोयोनः प्रचोदयात् परोरजसे सावदों | | ह्रीं |

(7, 8)

(அவ - கை) இரண்டாவது மூன்றுவது கூடங்களின் அர்த்தம் விசாரிக்கப்படுகின்றன :—

त्रिपदी त्रिवर्णबोध्या तुर्यस्तदुपरिषडक्षरीगमकः ।
अथ तार्तीये वर्णाद्वितयं त्रिपदीषडक्षरीगमकम् ॥ ९ ॥

कूटद्वितये शेषं पूर्ववदुन्नेयमिति तु विद्यायाः ।
गायत्र्यर्थस्त्रिपुरोपनिषदि कथितस्तथैव भागवते ॥ १० ॥

(தா - ம்) காயத்ரியிலுள்ள तत् सवितुः वरेण्यं என்னும் மூன்று பதங்களுக்கும் மேற்கூறிய அர்த்தமே பஞ்சதசியின் இரண்டாவது கூடத்திலுள்ள ह - स - क என்னும் மூன்று பீஜங்களுக்கும் முறையே அர்த்தமாகும். எங்ஙனமெனின், तत् = (பிரஹ்மம்) ह, सवितुः = स, वरेण्यं = क, "तदिति परमात्म" इत्यारभ्य "हकाराक्षरं शिवरूपम्" इत्याद्युक्त्वा अंते तत्पदव्यावृत्तिमादाय "शक्तिं दर्शयति" என்னும் ஶ்ருதிப்படி பரமாத்ம ஸ்வரூபத்தை முன்னர் கூறி "ह" காரத்திற்குச் சிவரூபம் என்றும், அதுவே "तत्" என்னும் பதத்திற்கு அர்த்தம் என்றும் கொள்ளப் பட்டது.

तत् सवितुः वरेण्यं என்னும் மூன்று பதங்களுக்கும் முறையே இரண்டாவது கூடத்திலுள்ள ह - स - क என்பதற்குப் பொருளாமென்று கூறி, மேல் நான்காவதாயுள்ள ह காரத்திற்கு ஆறு அக்ஷரரூபமாயுள்ள "भर्गोदेवस्यधी" என்பதே பொருளாகும் என்றும், முதல் கூடத்தில் கூறிய படியே "महि" என்பது ल காரமென்றும் "धियोयोनः प्रचोदयात् परोरजसे सावदों" என்பதற்கு இரண்டாவது கூடத்தின் ह्रीं என்பது பொருளாகும் என்றும் கூறப்படும்.

பஞ்சதசியின் இரண்டாவது கூடத்திற்குத் துரீய பாதத்தோடு கூடிய பூர்ண காயத்ரீயின் அர்த்த விளக்கம்.

| गायत्री | | पञ्चदशि द्वितीयकूटं |
|---|---|---|
| १. तत् | = | ह |
| २. सवितुः | = | स |
| ३. वरेण्यं | = | क |
| ४. भर्गोदेवस्यधी | = | ह |
| ५. मही | = | ल |
| ६. धियोयोनः प्रचोदयात् परोरजसे सावदों | = | ह्रीं |

மூன்றாவதாகும் சக்தி கூடத்திற்கும், நான்கு பாதங்களோடு கூடிய பூர்ண காயத்ரிக்கும் ஒற்றுமை கூறப்படுகின்றது :—"तत् सवितुर्वरेण्यमिति सकाराक्षरः समन्वितः। भर्गोदेवस्य-धीत्यनेन ककारोऽपि समन्वितोभवति। महीत्यनेन लकारः समन्वितः इति ज्ञेयः। शेषम् - धियोयोनः प्रचोदयात् - परोरजसे सावदोमिति - काम्यं रमणीयं दृश्यं काम्यं रमणीयं हृल्लेखाऽऽपि समन्विताऽस्यात्॥ एवं शक्तिकूटमपि स्पष्टीकृतम्" என்னும் பிரமாணப்படி,

| गायत्री | | त्रितीयकूटं |
|---|---|---|
| १. तत्सवितुर्वरेण्यं | — | स |
| २. भर्गोदेवस्यधी | — | क |
| ३. महि | — | ल |
| ४. धियोयोनः प्रचोदयात् परोरजसे सावदों | — | ह्रीं |

இங்ஙனம் பஞ்சதசியின் ஒவ்வொரு கூடத்திற்கும் ஒரு பூர்ண காயத்ரியின் அர்த்தம் சித்திப்பதால், மூன்று கூடங்களும் சேர்ந்தபஞ்சதசியை ஒரு முறை ஜபம் செய்வதால், மூன்று முறை பூர்ண காயத்ரியை ஜபம் செய்த பலன் சித்திக்கின்றது. இங்ஙனம் பஞ்சதசீ (வித்தை)க்கு காயத்ரியின் அர்த்தமேயென்று த்ரிபுரா தாபினீ உபநிஷத்திலும், தேவீ பாகவதத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. பாகவதம் என்னும் பதத்திற்கு "பகவதீ ஸம்பந்தமுடையது" என்று பொருளாகிறது. தேவீ பாகவதத்தில் முதல் சுலோகம் காயத்ரீ வடிவமாயுள்ளது. அது "सर्वचैतन्यरूपांतां आद्यां विद्यां च धीमहि। बुद्धिं यानः प्रचोदयात्" என்பதாகும். (மூன்று பாதங்களையுடைய) காயத்ரிரூப எந்தவித்தை, எங்கள் புத்தியை ஸத்கர்மங்களில் பிரேரணை செய்கின்றதோ அத்தகையவித்தையை (மிகப்பிரஸித்தமாயும் ஸமஸ்தஞானஸ்வரூபமாயுமுள்ள மந்த்ரராஜத்தை) உபாஸிக்கிறேன், என்பது தாத்

பரியமாம். மேற்கூறிய ச்லோகத்தினால் ஸ்ரீவித்தைக்கும் காயத்ரீக்கும் வித்தையென்னும் பெயர் சித்திக்கின்றதென்றும், அதுவே பிரஹ்மஸ்வரூபமென்றும் சித்திக்கின்றது.

भागवत लक्षणं:—"हयग्रीवब्रह्मविद्या यत्र वृत्रवधस्तथा। गायत्र्या च समारंभस्तद्वै भागवतं विदुः" "எங்கே ஸ்ரீ ஹயக்ரீவபிரஹ்மவித்தையும், வ்ருத்ராஸுர வதமும், காயத்ரீ மந்த்ர ரூபத்தினால் கிரந்தத்தின் ஆரம்பமும் உள்ளனவோ அந்தக்கிரந்தம் பாகவதம் என்று கூறப்படும்." இந்த லக்ஷணம் தேவீபாகவதத்திற்கே பொருந்துகின்றது. "जन्माद्यस्ययतः" என்னும் ச்லோகத்தை ஆதியாகவுடைய கிரந்தத்தில் மேற்கூறிய லக்ஷணம் பொருந்தாமையினால் அக்கிரந்தம், பாகவத சப்தத்திற்கு அர்த்தமாவதில்லையென்று அறிதல் அவசியம். (9, 10)

(அ - கை) யோகினீஹ்ருதயத்தில் கூறப்பட்டபடி, பாவார்த்தம் முதலிய ஆறு அர்த்தங்கள் கூறப்படுகின்றன:—

४. भावार्थ निरूपणं

பாவார்த்தம் கூறப்படுகிறது.

**वामेच्छे ब्रह्मभारत्यौ ज्येष्ठाज्ञाने हरिक्षिती।**
**रौद्रीक्रिये शिवापर्णौ इत्येतन्मिथुनत्रयम् ॥ ११ ॥**

**त्रिभिः कूटैः क्रमाद्वाच्यमीकारत्रितयेन तु।**
**एतत्त्रयसमष्ट्यात्म वाच्यं शान्ताम्बिकात्मकम् ॥ १२ ॥**

(தா - ம்) பிரகாசத்தின் அம்சபூதங்களான வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ என்னும் மூன்று சக்திகளும், பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் என்னும் மூன்று புருஷரூபங்களாயிருக்கின்றன. இவற்றின் ஸமஷ்டிசக்தி சாந்தையென்பதாகும்; இது துரீயம். விமர்சத்தின் அம்சபூதங்களான இச்சா, ஞான, கிரியை யென்னும் மூன்று சக்திகளும் முற்கூறிய

பிரஹ்மாதி மூன்று மூர்த்திகளின் மனைவிகளாகிற ஸரஸ்வதி, பிருதிவீ, பார்வதி என்னும் பிரஸித்தமான ஸ்திரீரூபங்களாக இருக்கின்றன. இவற்றின் ஸமஷ்டிசக்தி அம்பிகையெனப்படும்; இது துரீயம்.

இவற்றில், முதல் மூன்று மிதுனங் (தம்பதி)களும் ஈ்காரம் நீங்கலாக, மூன்று கூடங்களுக்கும் அதாவது ஒவ்வொரு கூடத்திற்கும் ஒவ்வொரு மிதுனமாகக்கொள்ளல் வேண்டும். ஈ்காரத்திற்குத் துரீய மிதுனமாகிய சாந்தாம்பிகையைப் பொருளாகக் கொள்ளல்வேண்டும்.

இனிமேல் கூறப்படும் சாக்தார்த்தத்திலோவெனில், ஒவ்வொரு கூடத்திற்கும் ரேபம் அதாவது ர் காரம் வரையில் (क. ए. ई. ल. ह्. र्.) (ह. स. क. ल. ह्. र्.) (स. ह. क. ल. ह्. र्.) உள்ள ஆறு வர்ணங்களுக்கும் மும்மூன்று மிதுனங்களைப் பொருளாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. இத்தகைய பேதம் பாவார்த்தத்திற்கும் சாக்தார்த்தத்திற்கும் உளது. இதற்கு யோகினீ ஹ்ருதயத்தில் "अक्षरार्थोहि भावार्थः केवलः परमेश्वरी । योगिनीभिः तथावीरैः वीरेन्द्रैः सर्वदाप्रिये ॥ शिवशक्तिसमायोगाज्जनितोमन्त्रराजकः"। என்னும் ஶ்லோகத்தில் ஸரஸ்வதி முதலிய யோகினிகளோடும், வீரேந்திரராயும், உபாஸகராயுமுள்ள பிரஹ்மாதிகளோடும், சிவசக்திகளின் ஸமஷ்டியோடும், மந்த்ரராஜம் தோன்றிற்று என்று கூறப்பட்டிருக்கின்றது. உபாஸகர்கள் மூன்று வகையினராவர். அவர் ஸகலர், பிரளயாகலர், விஞ்ஞானகேவலர் ஆவர். अहमि प्रलयं कुर्वन्निदमः प्रतियोगिनः । पराक्रमपरो भुङ्क्ते स्वात्मानमशिवापहम् ॥ என்னும் பராபஞ்சாசிகைப் பிரமாணப்படி, "இதம்சப்தார்த்தமான ஸகல பாஹ்யவஸ்துக்களையும், தன்னிடத்தில் லயம் செய்யும் ஆற்றலுள்ள வீரன் மிக்க பராக்கிரமமுடையவனாய், ஸமஸ்தமான அமங்களங்களையும் போக்கடிக்கக்கூடிய ஆத்மரூபத்தை அநுபவிக்கின்றான்" என்று ஏற்படுகின்றது. இது

முதலிய ப்லோகங்களினாலும் வீரசப்தத்திற்கு உபாஸகர்கள் என்று பொருள்செய்யப்பட்டது. ஆதலின் பிரஹ்மாமுதலிய வீரேந்திரர்கள் மூவர்; ஸரஸ்வதி முதலிய யோகினிகள் மூவர்; ஸகலர் முதலிய உபாஸகர்கள் மூவர்; ஆகிய இவர்கள் ஹ்ரீங் காரம் நீங்கலாக எஞ்சிய (மூன்று கூடங்களிலுள்ள) பீஜங்களால் கிரமமாய்க் கூறப்படுகின்றார்கள் என்பது கருத்து. ह्रीङ्कार उभयात्मकः என்னும் வசனப்படி ஹ்ரீங் காரங்களுக்குச் சிவசக்திகளின் ஸமஷ்டி ரூபமான நான்காவது மிதுனம் என்பது பொருள். இந்த மந்த்ரராஜமானது இங்ஙனம் யோகினிகள் முதலியவர்களோடு கூடிக்கொண்டிருக்கிறதென்பது திரண்டபொருளாம். (11, 12)

**यद्वा गीःसकलब्रह्मप्रभृतीनां त्रयं त्रयम् ।**
**त्रिकूटवाच्यं मायायास्तुरीयं मिथुनं मतम् ॥ १३ ॥**

(தா - ம்) அல்லது, மேற்கூறிய வீரபதம் பாரதீ முதலிய யோகினிகளுக்கே விசேஷணம் ஆகும்; அன்றிப் பெண்பாலைக் குறிப்பது மாத்திரமன்று. ஆகையாற்றான், பிரஹ்மன் முதலியவர்களுக்கு, வீரர்களின் பர்த்தாக்கள் என்று பொருள் படத்தக்க வீரேந்திரசப்த விவகாரம் உண்டாயிருக்கிறது. சாக்தார்த்தத்திலோவெனில், பாரதீ முதலியவர்களைக் கூறும் ஆறு அக்ஷரங்களை, யோகினீ, வீரேந்திர பதங்களாகக் கிரஹித்தல் வேண்டும். சிவசக்தி ஸமாயோக மென்னும் பதத்தினால், "காமகலை" கூறப்பட்டது. காமகலையில் சிவசக்திகளின் ஸாமரஸ்யம் விரிவாய் இனிக் கூறப்படும். ஒவ்வொரு முறை (ஆவிருத்தி)க்கு எவ்வேழு அக்ஷரங்கள் வீதம் மூன்று ஆவிருத்திகளுடையதாய் மந்த்ரராஜம் விளங்கும். அந்த மந்த்ரராஜமானது ஏழுதேவதைகளின் ரூபாந்தரம் அதாவது வேற்றுருவமாதலின் அது தேவதாஸ்வரூபமே யென்று கூறத்

தரும். மந்த்ரத்திற்குப் பிறப்பையங்கீகரித்த போதிலும் மந்த்ரம் அநாதி யென்று கூறுவதற்கு ஆக்ஷேபணை இல்லை. நிர்க்குணப்பிரஹ்மத்தைவிட அந்நியமாயுள்ள ஸமஸ்தமும் சாஸ்திரப்பிரமாணத்தின்படி உற்பத்தியுள்ளனவேயாகும். பிறப்புற்றதும் அநாதியுமான சிற்சக்தியைப்போல் மந்த்ரம், பிறப்பற்ற அநாதியென்று கூறமுடியாது; ஆயினும், பிறப்பை யுடைய அநாதியென்று கூறலாம். உற்பத்தியை அங்கீகரித்தாலும், அது, பாம்பரையாக அநாதியென்று கூறுவதில் பாதகம் இல்லை. ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபங்களையுடைய ஸர்வகாரியங்களும் உண்டாவதற்கு முன்னேயும் காரணத்தில் அதிஸூக்ஷ்ம ரூபமாய் இருக்கின்றன. ஆதலால், காரியங்களை நித்தியமென்று அங்கீகரிக்க "பிரவாக அநாதித்வம்" என்று கூறும் பிரமாணங்களுக்கும் பங்கமில்லை; அன்றி இவ்விரண்டு பக்ஷங்களிலும் கூறப்பட்ட பிறப்பு முதலிய அர்த்தங்கள் ஒப்பத்தக்கனவல்ல. மேல் கிரந்தத்தில் "பாரதி முதலிய ஏழுபேர்களின் ஸமஷ்டிவடிவமாகும் பரதேவதை யானது மந்த்ரத்தை விடவேறன்று" என்று கூறுவது சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் பேதமில்லை என்று வாதிக்கும் ஸத்கார்யவாத மதத்திற்கு விரோதமானதன்று. இதற்குப் பிரமாணம் கூறப்படுகின்றது. तन्मयीं परमानन्दनन्दितां स्पन्दरूपिणीम् । निसर्गसुन्दरीं देवीं ज्ञात्वा स्वैरमुपासते ॥ யோகினீ, வீர, வீரேந்திர, ஸமஷ்டி ரூபமென்று கூறப்படுவனவற்றிற்கு அபேதமானவளும், துக்கமென்பது ஒரு சிறிதும் கலவாத நித்தியாநந்த ஸ்வரூபமானவளும், சிவதத்வம் முதல் பிரிதிவீ தத்வம் இறுதியாகவுள்ள முப்பத்தாறு தத்வரூபமாயும் அத்தத்வாதீதமாயும் உள்ளவளும், சுபாவமாகவே அழகுள்ளவளுமான பரதேவதையை மந்த்ரத்திற்கு அபின்னமாகவும், பிரபஞ்ச ரூபமாகவும் அறிந்து உபாஸித்தல் வேண்டும். இங்ஙனம் பிரபஞ்சத்திற்கு அபின்னமான தேவதையே

மந்த்ரம்; மந்த்ரமே தேவதை; என்று மந்த்ரப் பிரபஞ்சங்களுக்கு அபேதத்தைக் கூறி மந்த்ர சப்தத்திற்கு வியுத்பத்தி கூறப்படுகின்றது. शिवशक्त्यात्मसंघट्टरूपे ब्रह्मणि शाश्वते । तत्प्रथाप्रसराश्लेषशालिन्यैन्द्रोपलक्षिते ॥ ज्ञातुर्ज्ञानमयाकारकरणान्मन्त्ररूपिणीम् । तेषां समष्टिरूपेण पराशक्तिस्तु मातृका ॥ ஆதியந்தமற்ற சிற்சக்தியானது காகாக்ஷிநியாயமாய்ச் சகுணரூபத்தோடு பக்தர்களுக்கு அபீஷ்டங்களை யருளியநுக்கிரகிக்கும் வடிவத்தைப் பெற்று, சற்குருவால் உபதேசிக்கப்பட்ட ஞானரூபத்தை யநுசந்தானஞ் செய்பவர்களை, அவ்வகண்ட ஞானத்தில் நிலைப்பெறச் செய்து, பயமற்றவர்களாய் ஆக்கி ரக்ஷிப்பதனால் பரதேவதைக்கு மந்த்ரரூபம் கூறப்படுகிறது. मननात् त्राणरूपत्वात् मन्त्रइत्यभिधीयते ॥ மநநஞ்செய்யும் ஹேதுவினால் உபாஸகர்களைப் பயரூபமான த்வைதப் பிரபஞ்சத்தினின்றும் ரக்ஷிப்பதனால், மந்த்ரம் என்று கூறப்படுகின்றது என்பதும் இங்கு அறியத்தக்கது.

பராதி முதலிய ஸமஸ்த தேவதைகளின் ஸமஷ்டிரூபமே மந்த்ர ராஜமெனப்படும்.

"தத்வரூபி = தத்வங்களைவிட வேறாகாதவள்" என்று கூறுவதால் தேவதாரூபமாகும் பிரபஞ்சத்திற்கும் மந்த்ரத்திற்கும் பேதமில்லையென்று ஸூசிக்கப்பட்டது. இங்ஙனம் மந்த்ரம், தேவதை, பிரபஞ்சம் இம்மூன்றிற்கும் பேதமில்லையென்று தியானஞ் செய்துகொண்டு ஜபம்செய்தல் வேண்டுமென்பது விதி.

மந்த்ர பதத்திற்கு அவயவசக்தி கூறப்படுகின்றது:

ஒன்றோடொன்று கலந்துள்ள சிவசக்திகளின் ஸாமரஸ்ய ரூபமானதும் ஆதியந்தமற்றதும், பிரஹ்மத்தின் விஸ்தார ரூபமுமான பிரபஞ்சமானது, பிரஹ்மத்தின் சம்பந்தத்

தினால் பிரகாசித்துக் கொண்டிருப்பினும், ஜகத்தின் ஐசுவர்யத்தோடு பிரஹ்மம் சிறிதும் சம்பந்தப்படவேயில்லை. ஸத்து, சித்து, ஆனந்தம் முதலிய தர்மங்களோடு கலந்த சுத்தப் பிரஹ்ம மொன்றனையே விஷயமாய்க் கொண்ட நிர்விகல்ப ஞானத்தினையுடைய உபாஸக சிரேஷ்டனுக்கு, ஞானமாகும் எந்தப் பிரஹ்மாகாரமுண்டோ, அத்தகைய ஆகாரமாய்ச் செய்யுங் காரணத்தினால், பயகாரணமாகும் துவைதத்தை யொழித்து அவனை ரக்ஷிக்கின்றது என்பதாம். (13).

(அ - கை) மேற்கூறிய கடைசியர்த்தத்தையே சித்தாந்தமாய்க் கூறுகின்றார் :

**वामेच्छाद्याः षडीकार इति सप्तभिरक्षरैः ।**
**त्रिरावृत्तैरियं विद्या संजाता तेन तन्मयी ॥ १४ ॥**

**वामादिसप्तशक्तीनां समष्टिः परदेवता ।**
**षट्त्रिंशत्तत्त्वरूपाऽस्मान्मात्रयाऽपि न भिद्यते ॥ १५ ॥**

(தா - ம்) வாமா, இச்சா முதலிய சக்திகளைக் கூறும் ஆறு அக்ஷரங்களும், ஈ காரமும் கூடி ஏழு அக்ஷரங்களாகின்றன. இங்ஙனம் மூன்று முறை (ஆவிருத்தி)களையுடையது இந்த பஞ்சதசீ மஹாமந்த்ரமாகும். ஆதலின் இது தேவதா ஸ்வரூபமாம். இங்ஙனம் ஏழுசக்திகளையுடைய ஸமஷ்டி வடிவமும், முப்பத்தாறு தத்வ வடிவமுமான பராதேவதைக்கும் பஞ்சதசீ மந்த்ரத்திற்கும் எள்ளளவும் பேதமின்று. பஞ்சதசியில் மூன்றாவதான ஈ காரமானது ஜேஷ்டா சக்தியைக் கூறுவதால், வாமா முதலிய ஆறு சக்திகளோடு கூடியிருப்பதாலும், ஹ்ரீம் காரங்களிலுள்ள ஈ காரங்களையே கூறியிருப்பதாலும் மூன்று ஆவிருத்திகள் என்பதற்கு விரோதமில்லை. வாமா முதலிய ஆறு சக்திகளுக்கும் ஈ காரத்திற்கும்

பேதமில்லை யென்று சாக்தார்த்தத்தில் கூறப்பட்டிருக்கின்றது (ஹ்ரீம் காரத்திலுள்ள) ஈ காரம் ஈறாகவுள்ள ஏழு அக்ஷரங்களோடு பேதமற்ற மந்த்ரத்திற்கும், முப்பத்தாறு தத்வங்கள் வடிவமாயுள்ள பரதேவதைக்கும் பேதமில்லை யென்பது பாவார்த்தமாம். ஆதலின் சாக்தார்த்தம் பாவார்த்தம் இவைகளுக்கு அதிகபேதமுண்டு.

அல்லது, மந்த்ர ராஜமென்னும் சிவசக்திகளின் ஸமாவேச (கூட்ட)த்தினாலேயே ஸகல மந்த்ரங்களும், ஸகல சராசரங்களும், உத்பன்னமானவை யாதலின், சிவசக்திகளின் வியஷ்டி ரூபமான, ஜகத்திற்கும், மந்த்ரங்களுக்கும், பரதேவதைக்கும் பெயர்மாத்திரத்தில் பேதமேயன்றி, வாஸ்தவத்தில் பேதமில்லை யென்று அறிவதே மற்றொரு வகையான பாவார்த்தமாகும். शिवश्शक्त्यायुक्तो यदिभवति शक्तः प्रभवितुं ॥ சிவம் சக்தியோடு கூடியே ஜகத்தைச் சிருஷ்டி செய்யும்; சக்தியோடு கூடாதபோது ஒன்றையும் செய்யமுடியாதென்று ஸ்ரீசங்கர பகவத்பாதர், ஸௌந்தர்ய லஹரியில் முதல் ச்லோகத்தில் கூறியுள்ளார். ஆதலின் ஸம்ஸார சக்கிர ரூபமாகும் (பிரபஞ்ச) சிருஷ்டிக்கு சக்தியே மஹா காரணமென்று அறிதல் அவசியம்.

சித்சக்திவிசிஷ்ட பிரஹ்ம பரிணாமமாகும் சிருஷ்டியானது அர்த்தமயம், சப்தமயம் என்னும் பாகுபாட்டால் இருவகைப்படும். சக்கிரமயம், தேஹமயம் என்று மற்றும் இருவகை சிருஷ்டிகளுண்டு. ஆயினும் பின்னர் கூறிய இருவகை சிருஷ்டிகளும், பாலர் விளையாட்டாகச் சிற்றில்களையியற்றுவது போல்வனவாகும். ஆதலின், சக்கிர தேகமய சிருஷ்டிகள், அர்த்த சிருஷ்டியிலேயே அடங்கும்.

சப்தமெதுவும் அர்த்தத்தை விட்டிராது. ஆதலின் அர்த்தத்தைப் போதித்துக்கொண்டு பார்வதீ பரமேச்வரர்

களைப்போன்று அவிநாபாவரூபமாய் உள்ள சப்த, அர்த்தங்களுக்கு எள்ளளவும் பேதமில்லை.

இந்த நான்கு வித சிருஷ்டிகளுக்கும் பிந்துவே காரணம் (மூலம்). இதற்கும் முன்னர் மிகவும் ஸூக்ஷ்மமான நிற்குண பரப்பிரஹ்மமேயிருந்தது; சக்தி சகிதமான இந்தப் பிரஹ்மம், சிருஷ்டிகாலத்தில் பிரஹ்ம, விஷ்ணு, வாயு, ஆகாசம் முதலிய நாமங்களால் விவகரிக்கப்படுகின்றது. ஆயினும் சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் பேதமின்மையால் சப்தப்பிரஹ்மமென்று நிர்த்தேசிக்கப்படும். இந்த சப்தப் பிரஹ்மம், பரை, பஸ்யந்தி, மத்யமை, வைகரியென்று நான்கு வகைப்படும். இங்ஙனம், சப்தப்பிரஹ்ம மயமாய், அநேக நாமங்களால் நிர்த்தேசிக்கப்படினும், கற்பித விசேஷணங்கள் மித்யையாதலினாலும் பிரகாச வடிவம் ஒன்றேயாதலினாலும் "अशब्दमस्पर्शमरूपमव्ययम्" என்னும் ஸ்ருதிப்பிரமாணப்படி பிரஹ்மம் அநிர்த்தேஸ்யம் (இத்தகையதென்று கூறமுடியாதது) என்று ஏற்படுகின்றது.

சப்த சிருஷ்டிக்கு அர்த்த சிருஷ்டி மூலமாதலினால், அது, பிரகாச ஏகரூபமாகும் நிற்குணப்பிரஹ்மத்தைவிட அந்நியமன்று. கேவலப்பிரகாசமும் கேவலவிமர்சமும் சிருஷ்டிகாரணமாகா. கேவலசிவமாவது அல்லது கேவல சக்தியாவது சிருஷ்டிகர்த்தர்கள் ஆகமாட்டார்கள். "சிவசக்திகளின் ஸமஷ்டியே சிருஷ்டிகாரணம்" என்று காமகலா விலாஸ வியாக்யானத்தில் நன்கு கூறப்பட்டிருக்கின்றது. அ காரம் சிவஸ்வரூபம்; சிவவாசகம். ह காரம் சக்திஸ்வரூபம்; சக்திவாசகம். இந்த அ கார ह காரங்களின் ஸமஷ்டியே பரையின் வடிவமென்றும், மிகவும் ஸூக்ஷ்மமென்றும் கூறப்பட்டிருக்கின்றது. பரை முதலியவற்றின் சிருஷ்டிக்குக் காரணமாகும் பீஜபிந்துவானது வியக்தம், அவ்வியக்தம்,

விலக்ஷணம் என்று மூன்று வகையாய்க் கூறப்படும். பிந்து வைத்தோற்றுவிக்கும் பரப்பிரஹ்மம் அவ்வியக்த (ஸ்பஷ்டமல்லாத) அவயவங்களையுடைய சூன்ய ரூபமென்றுகூறப்படும். " यतोवाचोनिवर्तन्ते " என்பனவாதிஶ்ருதிகளில் " எந்தப் பிரஹ்ம ஸ்வரூபத்தினின்றும், வாக்குகள் கூட (கூறமுடியாமல்) திரும்புகின்றனவோ " என்று கூறப்பட்டிருப்பதனால் அது நிர்க்குண ஸ்வரூபமென்று சித்திக்கின்றது. இந்த ஶ்ருதியில் " वाच: " என்னும் பன்மை பரைமுதல் வைகரி வரையிலுள்ள நான்கு வாக்குகளைக்குறிக்கும். அங்ஙனமே " अहमित्येकमद्वैतं यत्प्रकाशात्मविभ्रम: । अकार: सर्ववर्णाग्रय: प्रकाश: परम: शिव: ॥ हकारोऽन्त्य: कलारूपो विमर्शाख्य: प्रकीर्तित: । अनयो: सामरस्यं यत्परस्मिन्नहमिस्फुटम् ॥ " என்னும் ஸ்மிருதியில் अहं என்பது ஒரு ஒப்பற்ற அத்விதீய வஸ்துவென்றும், எல்லா எழுத்துக்களிலும் முதலாவதாகிய अ காரமே பிரகாசரூபமான பரமசிவமென்றும், கடைசி அக்ஷரமாகிய ह காரம், கலை, விமர்சம் என்னும் நாமங்களையுடைய சக்தியென்றும், இவ்விரண்டு அக்ஷரங்களின் ஸமஷ்டி (சேர்க்கை)யே மேலானதாகிய " अहं " என்றும் விளக்கப்பட்டது. பகவத்கீதையிலும் अक्षराणां अकारोस्मि (10-33) " அக்ஷரங்களில் அகாரவடிவினனாய் இருக்கிறேன் " என்று கூறப்பட்டிருக்கின்றது. யோகினீ ஹிருதயத்திலும் " शून्याकाराद्विसर्गान्ताद्बिन्दुप्रस्पन्दसंविद: " என்னும் ஶ்லோகத்தில் உயிரெழுத்துக்களில் பதினாறுவதாகிய अ: அக்ஷரத்தின் இறுதியிலுள்ள சூன்யஸ்வரூபமான விஸர்க்கத்தினாலேயே பிந்து விசேஷம் உத்பத்தியானதென்று கூறப்பட்டிருக்கின்றது. விஸர்க்கங்கள் உச்சாரணையில் விளக்கமற்ற ह காரத்தோடு ஒத்து விளங்குவதனாலும், अ காரம் அங்கேயே இருப்பதனாலும் பதினாறுவது அச்சை (உயிரெழுத்தைக்) கூறுவதாயிற்று. அகார ஹகாரங்கள் இரண்டினையும் பிந்து (நிற்குண) ரூபங்களாய் அறிதல் வேண்டும்.

சிருஷ்டிக்கிரமமாவது :—சூரியனுக்கெதிரேயுள்ள கண்ணாடியில் பிரவேசித்த சூரிய கிரணங்கள், அக்கண்ணாடி சற்று கோணியபோது அதிற்பிரதிபலித்த கிரணங்கள் சுவறு முதலியவற்றில் ஸ்புரிப்பதுபோல், பிரகாசரூபமான பிரஹ்மம் சிருஷ்டியைச் செய்யக்கருதித் தனது சக்திக்கு எதிர்முகமானபோது அந்தப் பிரஹ்மமே சுக்கிலபிந்து வடிவமாகவும், தனது சக்தி ரக்தபிந்து வடிவமாகவும் ஏற்பட்டு ஒன்றோடொன்று கலந்து மிஶ்ர (கலந்த) பிந்துவாயிற்று. அங்கே "ह" என்பதன் அர்த்த (பாதி) கலைவடிவமான ஒரு பதார்த்தம் உற்பத்தியாகும். அநிர்வசநீய (வாச்சியமல்லாதான - சொல்லால் சொல்லக்கூடியதன்றான) அப்பதார்த்தம் சற்குருவின் கிருபையொன்றாலேயே கிரகிக்கவேண்டுமேயன்றி இங்கே எழுதமுடியாது. அத்தகைய பிந்து ஸமஷ்டி வடிவத்தால் ஒன்றாயிருந்து "சிவசக்திகளின் ஸாமரஸ்யம்" என்னும் விளக்கமான நாமத்தைப்பெற்று, "कामोरविरग्नीषोमीयात्मकः" என்னும் பிரமாணப்படி அது அக்னி சந்திரர்களின் ஸமஷ்டிரூபமான காமனென்றும், சூரியனென்றும் விவகரிக்கப்படும். இந்த ஸமஷ்டி பிந்துவே வியஷ்டிரூபத்தினால் இரண்டாய்ப் பிரிந்தபோது, சுக்கிலபிந்து சந்திரனென்றும், ரக்த (சிவப்பு) பிந்து அக்னியென்றும் இவ்விரண்டு பிந்துக்களின் ஸ்வரூபம் விஸர்க்க (ः) மென்றும் விவகரிக்கப்படுகின்றது. ஆதலாற்றான் "சூரியன் இரவில் அக்னியிலும், அமாவாசையில் சந்திரனிலும் பிரவேசிக்கின்றான்" என்று கூறும் ஶ்ருதிவாக்கியத்தின்படி, ஸமஷ்டி பிந்துவுக்குச் சூரியன் என்னும் பெயர் சித்திக்கின்றது.

இங்ஙனம் "காமன்" என்னும் பெயரையுடைய மிஶ்ர பிந்துவானது விஸர்க்கங்களோடுகூடி "ஹ" என்பதன் அர்த்த (பாதி) கலையென்னும் மூன்று அவயவங்களையுடைய ஒரு பதார்த்தம் ஆகின்றது. இதுதான் காமகலை என்று

கூறப்படுகின்றது. இதுவே ஸமஸ்த பிரபஞ்சத்திற்கும் சிருஷ்டிபீஜமாகும்.

இந்த பிந்துவுக்கு மூலபூதமான பிரஹ்மம் நான்காவதான பிந்துவென்று கூறப்படும். अ கார ह காரங்களால் கூறப்பட்டு, ரூபாஹிதமான பிரஹ்மம் அல்லது காமகலை, வியக்த அவ்யக்தங்களுக்கு விலக்ஷணமாய் "अहं" என்னும் சொல்லால் குறிப்பிக்கப்படும். अहं என்னும் சப்தத்திற்கு अ கார ह காரங்களின் சேர்க்கை (ஸமஷ்டி)யும், சிவசக்திகளின் ஸமஷ்டியும் முக்கியமாகிய அர்த்தமாம். ஆகையினாற்றான் ஸமஸ்தமான சிருஷ்டிகளும் अहं சப்தத்தினால் கூறப்படுகின்றன. ஆலம் விதையிலிருந்து உண்டான இலைகள் புஷ்பங்கள், பழங்கள் முதலியவை, பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) பேதமுடையனவாயினும், அவைகளுக்கு ஆலிலை, ஆலம்பூ, ஆலம்பழம் என்று கூறும் விவகாரம் எங்ஙனம் உண்டாயிற்றோ, அங்ஙனமே, "ब्रह्मवाइदमग्र आसीत् । तदात्मानमेवावेदाहं ब्रह्मास्मीति" ॥ इति बृहदारण्यके, "त्वं वा अहमहं वै त्वम्" इत्यैतरेयके, "कस्त्वमित्यहमिति होवाच त्वमेवेदं सर्वं तस्मादहमिति सर्वाभिधानम्" इति तापनीये । என்னும் ஶ்ருதிகளில் பிரபஞ்சமானது अहं சப்தத்தினால் கூறப்பட்டது. வியாகரண பாஷ்யகாரரான பாணினியாலும், ஸர்வநாமமான अस्मत् சப்தத்திற்கு "எல்லாம்" என்னும் பொருள் கூறப்பட்டது. உபநிஷத்துக்களில் மற்றோரிடத்தில் "तद्वा एतद्ब्रह्माद्वयं" என்பனவாதி ஶ்ருதி வாக்கியங்களாலும், अहं சப்தத்திற்குப்பொருள் பிரஹ்மம் என்றுகூறி, அந்த பிரஹ்மத்தின் உபாஸனையானது பூர்ணாஹம்பாவனா ரூபமான தென்று "हंसः; सोऽहम्" என்பனவற்றால் நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

அத்தகைய உபாஸனாக்கிரமம் அதிரகஸ்யமாதலின், குருசரணங்களாலேயே அடையப்படும். சாங்கேதார்க்கிய உப

நிஷத்தில் "अहमेवाधस्तादहमुपरिष्टादहंपश्चादहंपुरस्तादहंदक्षिणतोऽहमुत्तरतो-ऽहमेवेदं सर्वम्" என்று அஹம் சப்தத்திலேயே சுத்தப்பிரஹ்ம ஸ்வரூபம் கூறப்பட்டிருக்கின்றது. விரூபாக்ஷ பஞ்சாசிகை என்னும் நூலிலும் स्वपरावभासनक्षम आत्मा विश्वस्य यः प्रकाशोऽसौ। अहमिति स एक उक्तोऽहंतास्थितिरीदृशी तस्य॥ ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதனால் தன்னைத்தானே விளக்கிக்கொண்டு, பிறவற்றையும் பிரகாசிப்பிக்கச்செய்யும் ஆற்றலுள்ள எந்த ஆத்மா உண்டோ அதுவே அஹம் என்று கூறுவதற்குப் பல்லாயிரம் பிரமாணவசனங்கள் உண்டு. பிந்துவில் அதன் அவயவங்களாகிற अ கார ह காரங்கள் வெளிப்படையாய்ப் புலப்படாவாயினும், சாஸ்திர நிதரிசனப்படி, ஸூக்ஷ்மரூபமாய் இருக்கின்றன வென்று அறிதல்வேண்டும். इ காரத்திற்கு ஹார்தகலையின் சம்பந்தம் உண்டாகும்போது தீர்க்கம் (நெடுமை) ஏற்படுகின்றது. ஆதலாற்றான் ई காரம் காமகலா ரூபமெனப்படுகின்றது. अ கார ह காரங்களின் ஸ்வரூபமே காமகலையாகும்.

இக்காமகலையினால் உண்டான மந்த்ரத்தில் இதரமான ஸகல அக்ஷரங்களும் ஸ்பஷ்டமாய்ப் புலப்படாவிடினும், ஆலம்விதையில் அம்மரத்தின் கிளைகள் இலைகள் பழங்கள் முதலியவை எங்ஙனம் அதிஸூக்ஷ்மமாயிருக்கின்றனவோ அங்ஙனமே அதிஸூக்ஷ்மமாய் இருக்கின்றனவென்று அறிதல் வேண்டும். இது மிகவும் ரகஸ்யம். இதை விளக்கமாய் அறியவேண்டுபவர் யோகினீ ஹ்ருதயம், காமகலாவிலாஸம் முதலிய நூல்களைச் சற்குரு முகமாய்க் கேட்டு அறிக. (14 - 15)

**अहंकारौ शिवशक्ती शून्याकारौ परस्पराश्लिष्टौ।**
**स्फुरणप्रकाशरूपावुपनिषदुक्तं परं ब्रह्म॥ १६॥**

(தா - ம்) अ கார ह கார ஸ்வரூபர்களும், பிந்து ஸ்வரூபர்களும், ஸ்புரண (விமர்ச) ப்ரகாச வடிவினர்களும், ஒருவருக்கொருவர் ஐக்கிய பாவத்தையுடையவர்களுமாகிய சிவ சக்திகளே உபநிஷத்துக்களில் கூறப்பட்ட பரப்பிரஹ்மமென்று அறிதல்வேண்டும். (16)

विश्वसिसृक्षावशतः स्वार्धां शक्तिं विलोकयद्ब्रह्म ।
बिन्दुर्भवति तामिन्दुं प्रविशति शक्तिस्तु रक्तबिन्दुतया ॥ १७॥

(தா - ம்) பிரபஞ்சத்தைச் சிருஷ்டி செய்யும் விருப்பத்தோடு தனது பாதிபாகமான சக்தியை நோக்கி நிற்கும் சிவன், சுக்கில (வெண்மை) பிந்துவடிவமாகின்றான். சக்தி, ரக்தபிந்துவாய் அச்சுக்கில பிந்துவில் பிரவேசிக்கின்றனள். சிவபிந்து வெண்மையாயிருக்குங்காரணத்தினால் சந்திர ஸ்வரூபத்தையும், பிண்ட உருவத்தையும் அடைகின்றதென்று கூறக்கிடக்கின்றதாதலின், பிந்துவென்னும் பதத்திலுள்ள ब காரம் நீங்கி, இந்துவென்னும் பெயரையடைகின்றது. ஆதலின் இந்துவென்னும் பதத்திற்குச் சந்திரன் என்று அர்த்தமாகின்றது. (17)

एतत्पिण्डद्वितयं विसर्गसंज्ञं हकारचैतन्यम् ।
मिश्रस्तु तत्समष्टिः कामाख्यो रविरकारचैतन्यम् ॥ १८ ॥

(தா - ம்) ரக்த சுக்கில பிந்துக்கள் இரண்டும் விஸர்க்கம் என்று சொல்லத்தகும். அந்த விஸர்க்கம் (ঃ) ह காரத்தின் வேற்றுருவமாகும். மிஸ்ரபிந்து காமனென்றும், ரவி (சூரியன்) என்றும் கூறப்படும். அது अ காரத்தின் வேற்றுருவமாகும். ஆதலின் अ கார ह காரங்கள் உத்க்ருஷ்டமான பிந்து ரூபங்கள். (18)

एषाऽहंपदतुर्यस्वरकामकलादिशब्दनिर्देश्या ।
वागर्थसृष्टिबीजं तेनाहंतामयं विश्वम् ॥ १९ ॥

(தா - ம்) அஹம் என்னும் பதத்தினும், நான்காவது ஸ்வரமாகிய ஈ காரத்தினும், காமகலையென்பனவாதிகளா லும் நிர்த்தேசிக்கப்படும் பிரஹ்மமே, சப்தரூபமாயும் அர்த்த ரூபமாயும் உள்ள சிருஷ்டிக்குப் பீஜமாகும். ஆதலின் ஸர்வப் பிரபஞ்சமும் அஹந்தா ஸ்வரூபமாய் விளங்குகின்றது. (19)

**अन्त्यप्रथमे मध्यचतुर्थे मन्त्रेऽपि तौ व्यक्तौ ।**
**तेनाम्बामनुजगतामभेद एवात्र भावार्थः ॥ २० ॥**

(தா - ம்) கடைசி கூடத்தின் முதலக்ஷரமாகிய स காரத் தினுள்ள अ காரத்திலும், மத்திய கூடத்திலுள்ள நான்காவது அக்ஷரமாகிய ई காரத்திலும் சிவசக்திகள் விளக்கப்பட்டிருக் கின்றனர். ஆதலின் தேவிக்கும் மந்த்ரத்திற்கும் பிரபஞ்சத் திற்கும் அபேதம் கூறுவதே பாவார்த்தமாகும். இது மூன்று வது விதமாகும்.

பாவம் என்பதற்குப் பிறப்பென்பது பொருளாகும். ' भावः सत्तास्वभावाभिप्रायचेष्टात्मजन्मसु " என்பது நிகண்டு. பிறப் பைத்தெரிவிப்பது பாவார்த்தம் எனினும் ஆம். (20)

## ५. संप्रदायार्थ निरूपणम्

ஸம்ப்ரதாயார்த்தம் கூறப்படுகின்றது.

**व्योमादिजनकहकरसलार्णैर्घटनेन पञ्चभूतमयी ।**
**पञ्चचतुस्त्रिद्व्येकगशब्दादिगुणात्मपञ्चदशवर्णा ॥ २१ ॥**

(தா - ம்) பஞ்சதசீமந்த்ரமானது ह, क, र, स, ल என் னும் அக்ஷரங்களோடு கூடியிருப்பதால் பஞ்ச மஹாபூதங்க ளின் ஸ்வரூபமாய் அப்பூதங்களோடு பேதமின்றி விளங்கு கின்றது. பிரகாச விமர்சங்களின் ஐக்கியத்தினுலேயே சப் தார்த்தங்களின் சிருஷ்டி கூறப்பட்டது. பிரகாசாம்சத்தி னல் அர்த்தசிருஷ்டியும் விமர்சாம்சத்தினல் சப்தசிருஷ்டி யும் உண்டாகும்.

அவற்றுள் ஒன்றிற்கு மற்றொன்றின் அபேக்ஷை அத்தியாவசியமாய்வேண்டியிருப்பதினால், தத்தம் காரியங்களையுண்டுபண்ணும்போது, மற்றொன்று அக்காரியத்திற்குக் காரணமாகும். இவ்விஷயம் ஶ்ருதி ஸ்மிருதிகளில் மிகப்பிரசித்தமாம். ஆதலின் காரணத்திற்கும் விசேஷண விசேஷ்யபாவத்திற்கும் நியமமின்மையால், பிரகாச விமர்சங்கள் இரண்டும், ஒன்று மற்றொன்றுக்குக் காரணமாகின்றது. முன்னர் அர்த்த சிருஷ்டியிலிருந்து சப்த சிருஷ்டியுண்டாயிற்றென்று கூறப்பட்டது; ஆதலின் அர்த்தமானது சப்தத்திற்குக் காரணமாகின்றது. மற்றோரிடத்தில் சப்தம் அர்த்தத்திற்குக் காரணம் என்று சொல்லப்பட்டுள்ளது. "शब्द इति चेन्नातः प्रभवात्प्रत्यक्षानुमानाभ्याम्" ॥ (1-3-28) என்னும் வியாஸஸூத்திரத்தில் ஜகத்தானது சப்தத்திலிருந்து உண்டாயிருக்கிறதென்று சொல்லப்பட்டிருக்கின்றது. முன்னர் விமர்சசக்தியிலிருந்து ह கார, क கார, ரேப (र கார), स கார, ल காரங்கள் பிறந்தன. பின்னர் பிரகாசாம்சத்தினால் ह காரத்திலிருந்து ஆகாயமும், क காரத்திலிருந்து வாயுவும், ரேப (र கார)த்திலிருந்து அக்கினியும், स காரத்திலிருந்து ஜலமும், ल காரத்திலிருந்து பூமியும் பிறந்தன. ஆதலின் விமர்சசக்தியோடு கூடிய பிரகாசமே ஆகாசாதிகாரியங்களைக் குறித்துக் காரணமாதலினால் ஆகாச பீஜமாகும் ह காரத்திற்குப் பிரகாசமும்கூடக் காரணமேயாகும். இங்ஙனமே மற்ற பூதங்களுக்கும் ஆம் என்றறிதல் அவசியம்.

குணங்களின் விவரம் :—

ஆகாசத்தில் சப்த குணம் ஒன்றே. வாயுவில் சப்தம், ஸ்பரிசம் என்னும் இரண்டு குணங்களுள. சப்தம், ஸ்பரிசம், ரூபமென்னும் மூன்று குணங்கள் அக்னிக்குண்டு. ஜலத்திற்குச் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம் என்னும் நான்கு

குணங்களுண்டு. பூமிக்கு சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தமென்னும் ஐந்து குணங்களுண்டு. ஆகவே, பஞ்சபூதங்களிலும் உள்ள சப்த குணங்கள் ஐந்து, ஸ்பரிச குணங்கள் நான்கு, ரூபகுணங்கள் மூன்று, ரஸகுணங்கள் இரண்டு, கந்தகுணம் ஒன்று ஆகமொத்த குணங்கள் பதினைந்து - இப்பதினைந்து குணங்களும் பஞ்சதசீ மந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தினாற் கூறப்படுகின்றன. (21)

तत्तज्जनकैर्वर्णैस्तत्तत्संख्यैस्तु तद्गुणा जाताः ।
कामकलाभिश्चतसृभिरासीत्स्पर्शश्चतुर्विधो न तु कैः ॥ २२ ॥

(தா - ம்) அந்த அந்த பூதங்களைப் பிறப்பிக்கும் ह कार, क कार, ரேப (र), स कार, ल காரங்களிலிருந்து பஞ்சமஹாபூதங்களிலுள்ள சப்தாதி பதினைந்து குணங்கள் பிறந்தன. பஞ்சதசீயிலுள்ள ஐந்து ह காரங்களிலிருந்து (இரண்டாவது கூடத்தில் இரண்டு ह காரங்கள், ह्रीं காரங்களில் மூன்று ह காரம்) பஞ்ச பூதங்களிலுள்ள ஐந்து சப்த குணங்கள் பிறந்தன. ஆதலின் ह காரங்களுக்குச் சப்தங்களே அர்த்தங்களாம்.

குறிப்பு :—வாஸ்தவத்தில் சிவசக்திகளின் ஸ்வரூபத்திற்கு மூல பீஜங்களான अ கார ह காரங்கள் இரண்டும் மிகவும் ஸூக்ஷ்மரூபங்கள் என்று கூறப்பட்டிருக்கின்றன. மேற்கூறிய சப்த குணங்களைத் தெரிவிக்கும் ह காரங்கள் மிகவும் ஸ்தூலமானவை என்றறிதல் அத்தியாவசியம். அன்றியும் இரண்டாவது கூடத்தின் நான்காவது அக்ஷரமாகிய ह காரத்திலுள்ள நாதாம்சம் பரப்பிரஹ்மத்தையும், வர்ண (எழுத்து) அம்சம் சப்தத்தையும் தெரிவிப்பதென்று அறியவும்.

வாயுவைப் பிறப்பிக்கும் ஈ காரங்கள் நான்கு விதங்களாய் நான்குவித ஸ்பரிச குணங்களையுண்டாக்குவது முக்கியமாம். ஆயினும், வித்தையில் (பஞ்சதசீ மந்த்ரத்தில்) நான்கு ஈ காரங்கள் இல்லையே யென்னும் சங்கையுதிக்க மேற்படி ப்லோகத்தின் பின்பாதியால் சமாதானங் கூறப்படுகின்றது.

ह्रीं காரத்திலுள்ள மூன்று ईं காரங்களாலும் ஸ்ரீ வித்தையின் மூன்றாவது எழுத்தான ई காரத்தாலும் நான்கு ஸ்பரிச குணங்கள் பிறந்தனவேயல்லாமல் ஈ காரங்களால் பிறக்கவில்லை. "महामायात्रयेणापि कारणेन च विन्दुना । वाय्वग्निजलभूमीनां स्पर्शानां च चतुष्टयम् । उत्पन्नं भावयेद्देवि स्थूलसूक्ष्मविभेदतः" என்னும் ப்லோகத்தினால் மேற்கூறிய அர்த்தமே சித்திக்கின்றது. ईं காரங்கள் பிந்து ரூபங்கள். "विन्दुना" என்னும் பதம் நான்கு ईं காரங்களுக்கும் விசேஷணம் - ईं காரங்கள் நான்காவது பிந்துவினால் உற்பன்னமானவை. இதனால் வாயுமண்டலத்திற்கு பிந்துரூப சின்ஹ (அடையாள) முண்டாயிற்று என்று அறியத்தக்கது. வாயுவிலுள்ள ஸ்பரிசம் ஸ்தூலமானது. அக்னி, ஜல, பூமிகளிலுள்ள ஸ்பரிசங்கள் ஸூக்ஷ்மமானவை.

ह्रीं காரங்களிலுள்ள மூன்று ரேப (र கார)ங்களாலும் மூன்று விதங்களான ரூபங்கள் உண்டாயின—"रूपाणांत्रितयं तद्वत्त्रिभीरेफैर्विभावितम् ॥" என்பது இதற்குப் பிரமாணமாம்.

"विद्यास्थैश्चन्द्रबीजैस्तु स्थूलः सूक्ष्मो रसः स्मृतः ॥" என்னும் பிரமாணப்படி வித்தையிலுள்ள சந்திர பீஜங்களான स காரங்களால் ஸ்தூல ஸூக்ஷ்மங்களான இரண்டு ரஸங்கள் உண்டாயின. ஜலத்திலுள்ள ரஸம் (சுவை) ஸ்தூலமானது; பூமியிலுள்ள ரஸம் ஸூக்ஷ்மமானது.

"वसुन्धरागतोगन्धः तल्लिपिर्गन्धवाचिका" என்னும் வாக்கியத்தின்படி தரணீ பீஜமாகும் ल காரத்தினின்றும் கந்த குணம் பிறந்தது. (22)

(அவதாரிகை) ஒரு ल காரத்தினாலேயே கந்தகுணம் சித்தித்திருக்க வித்தையிலுள்ள மற்ற இரண்டு ल காரங்களுக்குப் பயன் என்னை? எனின், கூறப்படுகின்றது :—

**भुवनत्रयसंबन्धादासीत्त्रेधा लकारोऽपि ।**
**ये ये यद्यज्जनकास्तेषां तेषां त एवार्थाः ॥ २३ ॥**

(தா-ம்) மூவுலகங்களோடுள்ள சம்பந்தத்தினால் மூன்று ल காரங்கள் வித்தையில் இருக்கின்றன. எந்த எந்த அக்ஷரங்கள் எந்த எந்த பூதங்களைப் பிறப்பிக்கின்றனவோ அந்த அந்த அக்ஷரங்களுக்கு அந்த அந்த பூதத்தின் குணங்களே அர்த்தமாம். இங்கே "भुवनत्रयसंबन्धात्त्रिधात्वं तु महेश्वरि ॥" என்பது பிரமாணமாம். (23)

(அவதாரிகை) क காரங்களுக்கு வாயுவைக் குறிக்கும் அர்த்தமேயன்றி மற்றொரு அர்த்தத்தையும் கூறுகின்றார்.

**ककारत्रयवाच्यास्तु सकलाः प्रलयाकलाः ।**
**विज्ञानकेवलाश्चेति त्रिमकारा उपासकाः ॥ २४ ॥**

(தா - ம்) வித்தையிலுள்ள மூன்று क காரங்களாலும், ஸகலர், பிரளயாகலர், விஞ்ஞானகேவலர், என்னும் மூத்திறத்தனராயுள்ள உபாஸகர்கள் கூறப்படுகின்றனர். அன்றியும், பசுக்கள், ஸாதகர், பிரமாதாரர் என்றும், அல்லது அசுத்தர், மிச்ரர், சுத்தர் என்றும், அல்லது அதமர், மத்திமர், உத்தமர் என்றும் உபாஸகர் மூத்திறத்தினராவர். இவர்களில் சிவோஹம் பாவனையின்றி பேததிருஷ்டியோடு கர்மத்திலேயே ஆஸக்தியுள்ளவர்கள் அதமர்கள். இருவினையொப்பு

மலபரிபாகம் உடையவராய் " चितिश्चैत्यं च चैतन्यं चेतनं द्वयकर्मच । जीवः कला शरीरंच सूक्ष्मं पुर्यष्टकं भवेत् ॥ " என்னும் ச்லோகத்திற் கூறியபடி ஸூக்ஷ்மபுர்யஷ்டக சம்பந்தத்தினால் பிரகாசிப்ப வராய்க் கர்மமார்க்கத்திலும் ஞானமார்க்கத்திலும் ஸமதிருஷ்டி யுடையவராய் உள்ளவர் மத்திமர். பேதபுத்தி ஒரு சிறிது மின்றி எங்கும் சிவபாவத்தையுடைய பூர்ண ஞானிகள் உத்த மர். இவ்வர்த்தம் ஸ்வச்சந்த ஸங்கிரஹமென்னும் கிரந்தத்தில் மிகுவிரிவாய் விளக்கப்பட்டிருக்கின்றது. " अशुद्धशुद्धमिश्राणां प्रमातृणां परंवपुः । क्रोधीशत्रितयेनास्य विद्यास्थेन प्रकाश्यते ॥ " என்னும் வசனம் மேற்கூறிய அர்த்தத்தையே போதிக்கின்றது. வித் தையிலுள்ள உயிர்மெய்யெழுத்துக்களிலுள்ள அ காரங் களுக்கு வேறு அர்த்தம் இனிமேல் கூறப்படும். ह, क, முத லியவற்றில் மெய்யெழுத்துக்களுக்கே மேற்கூறிய அர்த்தம் கூறப்பட்டது. (24)

अकारैर्दशसंख्याकैरुच्यन्ते जीवराशयः ।
विद्यायाः प्राणभूतः संस्तद्वाच्येकादशः स्वरः ॥ २५ ॥

(தா - ம்.) பஞ்சதசியில் இரண்டாவது மூன்றாவது அக்ஷரங்களையும், ஹ்ருல்லேகைகள் மூன்றையும் விட்டுவிட்டு எஞ்சிய பத்து அக்ஷரங்களில் (அகாமேறிய உயிர்மெய் களில்) பத்து அ காரங்களிருக்கின்றன. இந்தப் பத்து அ காரங்களாலும் ஜீவராசிகள் கூறப்படுகின்றனர். எங்ஙன மெனின், ஆலம்வித்தையிலிருந்துண்டான மரத்தை ஆலமரம் என்று அழைப்பதுபோல் அ காரரூப மூலபீஜமாகிய பிரஹ்ம மத்திலிருந்துண்டான ஜீவர்கள் அ கார வாச்சியர்கள் என்ப தற்கு யாதொரு சந்தேகமுமின்றாம். உயிரெழுத்துக்களில் ए என்னும் அக்ஷரம் வித்தைக்குப் பிராணஸ்வரூபமாய்ப் பரப் பிரஹ்மத்தைக் குறிக்கின்றது.

ஜீவர்கள் ஒரு அ காரத்தாலேயே கூறத்தக்கவராயிருக்கப் பத்து அ காரங்களால் கூறப்படுவது எதற்கெனின், ஜீவர்கள் பலர் என்று ஸூசிப்பதற்கே அங்ஙனங் கூறியது என்றறிதல் வேண்டும். மூன்றுவது கூடத்திலுள்ள ஸ காரத்திலுள்ள அ காரம் மூலபீஜமென்று பாவார்த்தப் பிரகரணத்தில் த்வன்யர்த்தமாய்க் கூறப்பட்டிருப்பதால் அதற்கு இங்கே விரோதமில்லை.

" ஏ " என்னும் வித்தியாஸ்வரூபமாகும் மூலபீஜத்திலிருந்துண்டான விருக்ஷத்திற்கு, அது, பிராண ரூபமாயிருக்கின்றது. எங்ஙனம் ஒரு சரீரத்தில் பிராணன் உள்ளேயிருந்து கொண்டு அதற்குச் சிறப்பைத் தருகின்றதோ, அங்ஙனமே, ஏ காரமானது வித்யா சரீரத்திற்கு (பஞ்சதசீ மஹாமந்த்ரத்திற்கு)ப் பிராண ரூபமாயிருந்து அதற்குச் சிறப்பைத் தருகின்றது. " यदेकादशमाधारं " என்பது இதற்குப் பிரமாணமாம். (25)

बिन्दुभिस्त्रिभिरुच्यन्ते रुद्रेश्वरसदाशिवाः ।
शान्तिः शक्तिश्च शंभुश्च नादत्रितयबोधनाः ॥ २६ ॥

(தா - ம்.) மூன்று பிந்துக்களாலும் ருத்ரன், ஈம்வரன், ஸதாசிவன் என்பவர்களும், மூன்று நாதங்களாலும் சாந்தி, சக்தி, சம்புவென்னும் மூவரும் கூறப்படுகின்றனர். ருத்ரன் தேஜஸ்தத்வம். அதனுல் புருஷ, நியதி, கால, ராக, (அ)வித்யா, கலா, மாயா என்னும் ஏழும் தேஜஸ்தத்வமெனக் கிரகிக்கப்படும். ஸ்வச்சந்த ஸங்கிரகத்தில் " पुरुषादिकमायान्तं तेजस्तत्त्वं महेश्वरि ॥ " என்னும் வாக்கியமும், " रुद्रो वा एष यदग्निः " என்னும் ம்ருதியும், ருத்ரனை அக்னியாகக் கூறுகின்றன. சாந்தி, ப்ரக்ருதி, சுத்தவித்தை என்பனவும், அர்த்தசந்திரன் முதல் உந்மநீ யீறாகவுள்ள எட்டும் நாதபதத்தால் கூறப்படும். (26)

**एवं सप्तत्रिंशत्संख्याकपदैर्महाविद्या ।**
**षट्त्रिंशत्तत्त्वानां तत्त्वातीतस्य चाभिधात्रीयम् ॥ २७॥**

(தா - ம்.) கீழே உள்ள ஆறும்ஸ்லோகங்களாலும் பஞ்சதசீ மஹாவித்தையில் ஆகாசபீஜங்களான ह காரங்கள் 5, காமகலைகள் (ई காரங்கள்) 4, ரேபங்கள் (र காரங்கள்) 3, சந்திர பீஜங்களான स காரங்கள் 2, ल காரங்கள் 3, क காரங்கள் 3, பிந்துக்கள் 3, நாதங்கள் 3, अ காரங்கள் 10, ए காரம் ஒன்று, ஆகமொத்தம் 37 அக்ஷரங்கள் உள்ளனவென்று நிர்த்தாரணஞ் செய்யப்பட்டுள்ளன. இவை முப்பத்தாறு தத்வங்களையும், தத்வாதீதமான அத்விதீய பரப்பிரஹ்மத்தையும் குறிப்பனவாகுமென்று அறிதல் அவசியம்.

முப்பத்தாறு தத்வங்களாவன :—சிவம் - சக்தி - ஸதாசிவம் - ஈச்வரன் - சுத்தவித்தை - மாயை-கலை-(அ) வித்தை-ராகம் - காலம் - நியதி, புருஷன், பிரகிருதி, அஹங்காரம்-புத்தி - மனம் - சுரோத்திரம் - துவக்கு - நேத்திரம் - ஜிஹ்வை (நாக்கு) - கிராணம் - வாக்கு - பாணி - பாதம் - பாயு - உபஸ்தம் - சப்தம் - ஸ்பரிசம் - ரூபம் - ரஸம் - கந்தம் - ஆகாசம் - வாயு, அக்னி, ஜலம் - பூமி - என்பன முப்பத்தாறு தத்வங்களாம். இவற்றின் ஸ்வரூப விவரணம், உற்பத்திக் கிரமம் முதலியன ஸௌபாக்கிய ஸூர்யோதயம் என்னும் நூலில் பரக்கக் காணலாம். விரிவஞ்சி இங்கே எழுதப்படவில்லை.

இவற்றில் (முப்பத்தாறு தத்வங்களில்) சிவ, சக்தி, சுத்தவித்தை, பிரகிருதி என்னும் தத்வங்கள் நான்கும், பிரதி பிந்துவின் அர்த்தமாம். ஸதாசிவதத்வம் முதல் புருஷதத்வமீறாகவுள்ள பத்து தத்வங்களில் சுத்தவித்தை பிந்துவின் அர்த்தத்தில் சேர்க்கப்பட்டமையால் அது நீங்கலாக ஒன்பது தத்வங்களும நாதத்தின் அர்த்தமாகும்.

சப்தாதி ஐந்தும், ஆகாசாதி ஐந்தும், சுரோத்திராதி ஐந்தும், வாக்காதி ஐந்தும், ஆக இருபது தத்வங்களும் ஈ காரம் முதலியவற்றின் அர்த்தமாகும். அஹங்காரம், புத்தி, மனம், என்னும் மூன்று தத்வங்களும் மூன்று ஈ காரங்களுக்கும் பத்து அ காரங்களுக்கும் அர்த்தமாம். ஏ காரத்தின் அர்த்தம் தத்வாதீதமான பிரஹ்மம் என்றறியவும்.

ஈ காரம் முதலிய அக்ஷரங்களுக்கு சப்தாதிகள் அர்த்தமென்று கூறியதுபோல, இந்திரியங்கள் முதலியன இன்ன இன்ன அக்ஷரத்திற்கு அர்த்தமென்று விளக்கமாய்க் கூறப்படவில்லை. ஆயினும் "அச்சுக்கள் (உயிர்) ஹல்லுக்கள் (மெய்கள்) என்னும் பாகுபாட்டின்கீழ் முப்பத்தாறு தத்வங்களையும் தத்வாதீதமான பிரஹ்மத்தையும் குறிப்பாகப் போதிக்கும் இந்த மஹாவித்தையானது என்னல் உபாஸிக்கப்படுகின்றது" என்று பொருள்படும் "स्वरव्यंजनभेदेनसप्त-त्रिंशत्प्रभेदिनी । सप्तत्रिंशत्प्रभेदेन षट्त्रिंशत्तत्वरूपिणी । तत्वातीतस्वभावाच विद्येषा भाव्यतेमया ॥ என்னும் பிரமாணத்தினல், முற்கூறிய அர்த்தம் பொருத்தமுடையதே ஆகும்.

இதன் தெளிந்த பொருள் யாதெனின்—

மந்த்ரத்தின் மீது அக்ஷரங்களுக்கு வாச்யார்த்தத்தாலாவது, லக்ஷ்யார்த்தத்தாலாவது கூறப்பட்ட 36 தத்வங்களும் ஏ காரத்தினல் குறிப்பிக்கப்பட்ட தத்வாதீத பிரஹ்மத்தைவிட வேறன்று என்று அறிதல் வேண்டு மென்பதேயாம்.

மந்த்ரத்தின் அவயவங்களால்' கூறப்படும் (முப்பத்தாறு) தத்வமயமான பிரபஞ்சம் மந்த்ரத்தை விட வேறன்று. மண்ணினின்றும் உண்டான கடமானது மண்ணைவிட வேறுகாதல்லவா? இங்ஙனமே வாச்யமாகிய அர்த்தம் (பொருள்) வாசகமான சப்தத்தைவிட வேறல்ல. யானையென்னும்

(பதம்) சப்தம், யானையென்னும் பொருளை விட்டுப் பின்னமா யிராது.

இங்ஙனமே பிரஹ்மத்திலிருந்து பிறந்த "ஏ கார" வாச்சியமான உலகம் ஏ காரத்தைவிட வேறான அக்ஷரங்களுக்கு வாச்சியமாயிருப்பினும், பிரஹ்மத்திற்கும், உலகத்திற்கும் அபேதமே யென்றும், அவ்வுலகத்திற்கும் வித்தைக்கும் அபேதமே யென்றும் அறிதல்வேண்டும். இந்த ரகஸ்யமான அர்த்தத்தைக் குருசிஷ்ய பரம்பரா ஸம்பிரதாயத்தாலேயே அறிதல்வேண்டுமென்பது பரமஸித்தாந்தமாம். (27)

**जन्यजनकयोर्भेदाभावाद्वाच्यस्य वाचकेनापि ।**
**ब्रह्मणि जगतो जगति च विद्याऽभेदस्तु संप्रदायार्थः ॥२८॥**

(தா - ம்.) வாசகவாச்சியங்களாகும் சப்தார்த்தங்களைப் போலவே பிறந்ததற்கும் பிறப்பித்ததற்கும் பேதமில்லாமை யால் பிரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் வித்தைக்கும் அபேதங் கூறுதலே ஸம்ப்ரதாயார்த்தமாம். சற்குரு பாரம்பரியக்கிரம மாய்ப் போதிக்கப்படும் அர்த்தமாதலின் இது ஸம்ப்ரதா யார்த்த மென்று கூறப்படும். (28)

## ६. निगर्भार्थ निरूपणम्

## நிகர்ப்பார்த்தம்

**परमशिवे निष्कलता तदभिन्नत्वं स्वदेशिकेन्द्रस्य ।**
**तत्करुणातः स्वस्मिन्नपि तदभेदो निगर्भार्थः ॥ २९ ॥**

(தா - ம்.) பரமசிவனாகிய பிரஹ்மத்தில் நிர்க்குணத் வமும், அந்நிர்க்குணப் பிரஹ்மத்திற்கும் தனது குருவுக்கும் உள்ள ஐக்கிய (அபேத) பாவமும், அத்தகைய குருவின் கருணகடாக்ஷத்தினால் தனக்குச் சிவகர்ப்பத்தில் பிரவேசிக் கும் பெருமைகிடைத்தகாரணத்தினால் குருவுக்கும் தனக் கும் அபேதமும் நிகர்ப்பார்த்த மெனப்படும். (29)

## ७. कौलिकार्थ निरूपणम्
## கௌளிகார்த்தம்

(அ - கை.) பரதேவதைக்கும், மந்த்ரத்திற்கும், ஸ்ரீசக்கிரத்திற்கும், தனக்கும், பேதமில்லை யென்பதே கௌளிகார்த்தமெனப்படும். உலகத்திலுள்ள ஸர்வவஸ்துக்களுக்கும், பிரஹ்மத்தோடு அபேத முண்மையின் ஸஜாதீயபாவம் உண்டு. ஸஜாதீயபாவமே குலம் என்னும் பதத்தின் பொருளாகும். "सजातीयैः कुलं यूयम्" என்பது நிகண்டு.

மேற்குறித்த தேவதா, மந்த்ர, சக்கிர, குரு, ஸாதகர்களாகிய இந்த ஐந்தினுடைய தர்மம் சமானமாயிருத்தலின் பேதமில்லை. தந்த்ரராஜம் என்னும் கிரந்தத்தில் "गणेश ग्रहनक्षत्रयोगिनीराशिरुपिणीं - देवीं मन्त्रमयीं नौमि मातृकापीटरुपिणीं" என்னும் ஸ்லோகத்தினால் கணேசன் முதல் ஆறு, அதாவது கணேசன், கிரஹங்கள், நக்ஷத்திரங்கள், யோகினிகள், ராசிகள், பீடங்கள் இவற்றிற்குப் பரதேவதையோடு அபேதம் கூறப்பட்டிருப்பதால் ஸமான தர்மமென்று சித்திக்கின்றது.

முதலில், பரதேவதையிடத்தில் கணேசாதி தன்மைகளைக் கூறுகின்றார்.

**माता निरुपमतेजोमय्याः स्वस्या मरीचिरूपाणाम् ।**
**आवरणदेवतानामीशत्वादुच्यते गणेशीति ॥ ३० ॥**

(தா - ம்.) உவமையற்ற தேஜஸ்ஸையுடைய பரதேவதை, தன் கிரணங்களாகிற நாற்றுப்பதினோராவரண தேவதைகளையும், தந்த்ர பேதத்தால் இன்னும் சில இதர தேவதைகளையும் நியமிப்பதனால், கணேசி யென்று கூறப்படுகின்றாள். (30)

**इच्छादित्रिसमष्टिर्गुणत्रयाढयाऽनलेन्दुरविनेत्रा ।**
**एवं नवभियोगाद् ग्रहरूपेत्युच्यते माता ॥ ३१ ॥**

(தா - ம்.) சூரியன் அக்னி சந்திரர்களென்னும் நேத்திரங்கள் மூன்றும், ஸத்வ, ரஜஸ் தமோகுணங்கள் மூன்றும், இச்சா, ஞான, கிரியா சக்திகள் மூன்றும் ஆக ஒன்பதும் பரதேவதையைக் கிரஹரூபிணி என்று குறிப்பிடுகின்றன. (31)

इन्द्रियदशकेनान्तः करणचतुष्केण विषयदशकेन ।
प्रकृतिपुरुषगुणतत्त्वैर्जाता नक्षत्ररूपिणी माता ॥ ३२ ॥

(தா - ம்.) சுரோத்திரம், துவக்கு, நேத்திரம், ஜிஹ்வை, கிராணம் என்னும் ஐந்து ஞானேந்திரியங்கள், வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்கள், ஆக இந்திரியங்கள் பத்து, மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும் அந்தக்கரண சதுஷ்டயம் (4), சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம், பேசுதல், நடத்தல், கிரஹித்தல் (ஒரு வஸ்துவைப் பெறுதல்) விஸர்ஜனம் செய்தல் - ஆநந்தித்தல் முதலிய ஞான கர்மேந்திரியங்களின் விஷயங்கள் பத்து, ஸத்வம், ரஜஸ், தமஸ், ஆகிய குணங்கள் மூன்று அல்லது பிரகிருதி, புருஷன், குணங்கள் - என்னும் மூன்று தத்வங்கள் ஆக இருபத்தேழும் பிரதி (ஒவ்வொரு) புருஷனிடத்திலும் உள்ளவையாதலின் ஜகந்மாதாவாகிய பரதேவதை நக்ஷத்திரரூபிணி யாவள். (32)

नरपतिरविकाष्ठाषट्समुद्राद्रिसंख्यै-
रकडबवहपूर्वैरक्षरैर्वेष्टिताभिः ।
डरलकसहवर्णाद्याकिनीभिस्तु षड्भि-
र्घटिततनुरितीयं कथ्यते योगिनीति ॥ ३३ ॥

(தா - ம்.) अ காராதி அச்சுக்கள் (உயிர்கள்) 16, क காரம் முதல் ठ காரம் வரை 12, ड காரம் முதல் फ காரம் வரையில்

10, व முதல் ल வரை 6, व முதல் स வரை 4, ह - क्ष 2, ஆக 50 அக்ஷரங்களோடும் डाकिनी, राकिनी, लाकिनी, काकिनी, साकिनी, हाकिनी, என்னும் ஆறு சக்திகளோடும் கூடியுள்ள சரீரத்தை யுடையவள் ஆதலின் பரதேவதை யோகினி யென்று கூறப் படுகின்றனள்.

नरपति - 16, रवि - 12, काष्ठा - திக்குகள் 10, समुद्रा - 4.

### யோகினிகளின் விவரம்.

I. பதினாறு தளங்க (இதழ்க)ளையுடைய விசுத்தி சக்கி ரத்தில் துவக்கி (சர்மத்தி) ன் அதிதேவதையாகிய डाकिनी சக்தி अ காராதி 16 அச்சுக்களைப் பீஜமாயுடைய अमृतादि சக்திக்கூட்டங்களால் சூழப்பட்டு, ஒரு முகத்தோடும் மூன்று கண்களோடும் விளங்குவள். ग्रीवाकूपेविशुधौनृपदलकमलेश्वेतवर्णां त्रिनेत्रां हस्तैः खट्वांगखड्गौत्रिशिखमपिमहाचर्मसंधारयंतीं । वक्त्रेणैकेनयुक्तां पशुजनभयदांपायसान्नैकसक्तां त्वक्स्थां वन्देऽमृताद्यैः परिवृतवपुषां डाकिनीं वीरवन्द्यां ॥ என்னும் சுலோகம் இங்கு அறியத்தக்கது.

II. பன்னிரண்டு தளங்களை யுடைய அநாஹத சக்கி ரத்தில் இரத்தத்திற்குப் பிரபுவாகிய राकिनी சக்தி क காராதி பன்னிரண்டு அக்ஷரங்களைப் பீஜங்களாக வுடைய कालरात्री முதலிய சக்திக் கூட்டங்களோடு சூழப்பட்டு இரண்டு முகங் களோடும் மூன்று கண்களோடும் விளங்குவாள். हृत्पद्मे भानुपत्रे द्विवदनलसितां दंष्ट्रिणीं श्यामवर्णां चक्रं शूलं कपालं डमरुमपि भुजैर्धारयन्तीं त्रिनेत्राम् । रक्तस्थां कालरात्रिप्रभृतिपरिवृतां स्निग्धभक्तैकसक्तां श्रीमद्वीरेन्द्रवंद्याम- भिमतफलदां राकिनीं भावयामि ॥ என்பது இதற்குப் பிரமாணமாம்.

III. பத்துத் தளங்களையுடைய மணிபூரக சக்கிரத்தில் மாம்ஸத்திற்கு நாயகியாகிய लाकिनी சக்தி ड காரம் முதல் பத்து அக்ஷரங்களைப் பீஜங்களாகவுடைய डामरी முதலிய பத்து சக்திகள் புடைசூழ மூன்று முகங்களோடும் பிரகாசிப்

பாள். दिक्पत्रे नाभिपद्मे त्रिवदनविलसद्दंष्ट्रिणीं रक्तवर्णां शक्तिं दम्भोलिदण्डा-वभयमपिभुजैर्धारयन्तीं महोग्राम्। डामर्याद्यैःपरीतां पशुजनभयदां मांसधात्वैकनिष्ठां गौडान्नासक्तचित्तां सकलसुखकरीं लाकिनीं भावयामि॥ என்பது இதற்குப் பிரமாணமாம்.

IV. ஆறு இதழ்களையுடைய ஸ்வாதிஷ்டான சக்கிரத்தில் மேதஸுக்கு அதிஷ்டான தேவதையாகிய काकिनी சக்தி ब முதல் ल வரையிலுள்ள ஆறு எழுத்துக்களைப் பீஜங்களாகவுடைய बंदिनी முதலிய சக்திகளோடு சூழப்பட்டு நான்கு முகங்களோடும் சூலம் முதலிய ஆயுதங்களோடும் விளங்குவள். இதற்குப் பிரமாணமாவது:—स्वाधिष्ठानाख्यपद्मे रसदललसिते वेदवक्त्रां त्रिनेत्रां हस्ताभ्यां धारयन्तीं त्रिशिखगुणकपालाभयान्यात्तगर्वाम्। मेदोधातुप्रतिष्ठामलिमदमुदितां बन्धिनीमुख्ययुक्तां पीतां दध्योदनेष्टामभिमतफलदां काकिनीं भावयामि॥

V. நான்கு தளங்களையுடைய மூலாதார சக்கிரத்தில் அஸ்தி (எலும்பு)களுக்கு அதிபதியாகிய साकिनी சக்தி व காரம் முதல் स காரம் வரையிலுள்ள நான்கு அக்ஷரங்களைப் பீஜங்களாகவுடைய वरदा முதலியசக்திக்கூட்டங்கள் புடைசூழப்பஞ்ச முகங்களோடு வீற்றிருப்பாள். இதற்குப் பிரமாணமாவது:— मूलाधारस्थपद्मे श्रुतिदललसिते पञ्चवक्त्रां त्रिणेत्रां धूम्राभामस्थिसंस्थां सृणिमपि कमलं पुस्तकं ज्ञानमुद्राम्। बिभ्राणां बाहुदण्डैः सुललितवरदापूर्वशक्त्यावृतां तां मुद्गान्नासक्तचित्तां मधुमदमुदितां साकिनीं भावयामि॥

VI. இரண்டு தளங்களையுடைய ஆக்ஞா சக்கிரத்தில் மஜ்ஜை (கொழுப்பிற்கு)க்கு அதிதேவதையாகிய हाकिनी சக்தி ह, क्ष என்னும் பீஜங்களை யுடைய हंसवती, क्षमावती என்னும் சக்திகளோடும் ஆறுமுகங்களோடும் விளங்குவள். இதற்குப் பிரமாணமாவது:—भ्रूमध्ये बिन्दुपद्मे दलयुगकलिते शुक्लवर्णां कराब्जैर्बिभ्राणां ज्ञानमुद्रां डमरुककमलामक्षमालां कपालम्। षड्वक्त्राधारमध्यां

त्रिनयनलसितां हंसवत्यादियुक्तां हारिद्रान्नैकसक्तां सकलसुखकरीं हाकिनीं भावयामि ॥

இங்ஙனம் டாகினீ முதலிய சக்திகளோடும் ஆவரண தேவதைகளோடும் கூடி விளங்கும் சரீரத்தை யுடையவள் ஆதலின் பரதேவதையே யோகினி யென்று கூறப்படுகின்றாள்.

தாதுக்கள் ஏழு என்பது பிரசித்தமாம். இங்ஙனம் பிரசித்தமான ஸப்த தாதுக்களில் துவக்கு, ரக்தம், மாமிசம், மூளை (மேதஸ்), எலும்பு, மஜ்ஜைகளுக்கு அதிதேவதைகளாய் டாகினீ முதலிய சக்திகள் மூலாதாராதி ஷட்சக்கிரங்களில் கூறப்பட்டன. ஏழாவதாகிய சுக்கில தாதுவிற்குப் பிரபுவாய் விளங்கும் யாகினீசக்தி ஸமஷ்டி சக்தியாகும். இச் சக்தி ஸஹஸ்ரதள பத்மத்தில் ஐம்பது பீஜாக்ஷரங்களோடும் எல்லாச் சக்திகளோடும் விளங்குவாள் என்பது மிகப் பிரசித்தமாம். मुण्डव्योमस्थपद्मे दशशतदलके कर्णिकाचन्द्रसंस्थां रेतोनिष्ठां समस्तायुधकलितकरां सर्वतोवक्त्रपद्मां। आदिक्षान्तार्णशक्तिप्रकटपरिवृतां सर्ववर्णां भवानीं सर्वान्नासक्तचित्तां परशिवरसिकां याकिनीं भावयामि ॥ என்பது இதற்குப்பிரமாணமாம். (33).

**पञ्चभिर्नागकूर्माद्यैः प्राणापानादिपञ्चभिः ।**
**जीवात्मपरमात्मभ्यां चैषा राशिस्वरूपिणी ॥ ३४ ॥**

(தா - ம்) நாக, கூர்ம, கிருகர, தேவதத்த, தனஞ்சயமென்னும் உபவாயுக்கள் ஐந்து, பிராண, அபான, வியான, உதான, ஸமான, மென்னும் முக்கிய வாயுக்கள் ஐந்து, ஜீவாத்மா ஒன்று, பரமாத்மா ஒன்று ஆகப் பன்னிரண்டின் வடிவமுடைமையால் பரதேவதை ராசிரூபிணியாவாள்.

குறிப்பு:—பரதேவதை பீடரூபிணி (पीठरूपिणि) யென்று தனியாய் விளக்கப்படவில்லை, ஏனெனின் கணேசாதிகளுக்

குப் போலவே, பீடா திகளுக்கும் சங்கியை சமானமாதலின் கணேசரூபிணியென்று விளக்கப்பட்ட முறையே, அவள் பீடரூபிணி யென்று சொல்வதற்கும் போதுமானதென்றறியவும். இங்ஙனம் பரதேவதையானவள், கணேச, கிரஹ, நக்ஷத்திர, யோகினீ, ராசி, பீடரூபிணியா யிருக்கின்றனள் என்று கூறப்பட்டது. (34)

இனிப் பஞ்சதசீமஹா வித்தைக்குக் கணேசாதி ரூபங்கள் கூறப்படுகின்றது.

வித்தைக்குக் கணேசத்வங் கூறுதல்

**अकथादिकषोडशाक्षरात्मकतार्तीयककामवाग्भवैः ।**
**घटिता च परादिवाग्गणैरिति विद्याऽपि गणेशरूपिणी ।२५।**

(தா - ம்) வித்தை மந்த்ராக்ஷர ஸ்வரூபமானதாதலின் அது அநேக சப்தகணங்களுக்கு ஈசியாய் விளங்குகின்றது. எங்ஙனமெனின், அ காராதி பதினாறு ஸ்வர ரூபமானது வித்தையின் மூன்றாவதாகிய சக்திகூடமாகவும், க காராதி த காராந்தமான பதினாறு வியஞ்சனங்களோடு கூடியது மத்தியம காமராஜகூடமாகவும், थ காராதி स காராந்த பதினாறு வியஞ்சனங்களோடு கூடியது முதலாவதாகிய வாக்பவகூடமாகவும், ஏற்பட்டுள்ளது. பரா, பஸ்யந்தீ, மத்யமா, வைகரீ என்னும் வாக்குகளும், வியஷ்டி ஸமஷ்டி பேதங்களாக மேற்கூறிய மூன்று கூடங்களின் வடிவமேயாகும். ஆதலின், சப்த காரணங்களாகிற நான்கு வாக்குகளும், காரியங்களாகிற ஸகல சப்தகணங்களும் கூடத்ரய வடிவ மஹாவித்தையாய் விளங்குவதனால் வித்தைக்குக் கணேசத்வம் நிர்விவாதமாம். (35)

வித்தைக்குக் கிரஹத்வம் கூறப்படுகின்றது

**बिन्दुत्रयनादत्रयतदन्यकूटत्रयैर्ग्रहत्वमिह ।**

(தா - ம்) மூன்று கூடங்களிலுமுள்ள மூன்று பிந்துக்களும், மூன்றுநாதங்களும் (பிந்து நாதங்கள் நீங்கலாக) மற்ற பீஜங்களோடு கூடிய மூன்று கூடங்களும் ஆக ஒன்பதும் உடைமையால், வித்தை கிரஹரூப முடையதாகும். "बीज-बिन्दुध्वनीनांचत्रिकूटेषु ग्रहात्मिका" என்பது இதற்குப் பிரமாணமாம். (36/1)

வித்தை நக்ஷத்திரரூப முடையதெனல்

**नक्षत्रत्वं च दशाकाराणां व्यञ्जनैरपार्थक्यात् ॥ ३६ ॥**

(தா - ம்) ஸம்ப்ரதாயார்த்தப்பிரகரணத்தில் வித்தையில் வியஞ்சனங்களின் (ஹல்லுக்களின்) மீதுள்ள அ காரங்கள் பத்து என்று கணித்து முப்பத்தேழு அக்ஷரங்கள் கணக்கிடப்பட்டன. அங்ஙனம் அ காராதிகளைப் பிரிக்காவிடின் 27 அக்ஷரங்களாகின்றன. இவையே வித்தைக்கு நக்ஷத்திரத்வ சித்திக்குக் காரணமாகின்றன.

இங்ஙனம் கூறுவதற்குப் பிரமாணம் யாதெனில், "हृल्लेखात्रयसंभूतैस्तिथिसंख्यैस्तथाऽक्षरैः। अन्यैर्द्वादशभिर्वर्णैरेषा नक्षत्ररूपिणी ॥" மூன்று ஹ்ருல்லேகைகளிலும் பதினைந்து வர்ணங்கள் உண்டு. எப்படியெனின், ஒரு ह्रीं காரத்தில் ह्, र्, ई, பிந்து, நாதம் என ஐந்து வர்ணங்கள் வீதம் மூன்றில் பதினைந்து வர்ணங்கள். ஹ்ரீங்காரங்கள் நீங்கலாக மீதி எழுத்துக்கள் (क, ए, ई, ल, ह, स, क, ह, ल, स, क, ल.) பன்னிரண்டு. ஆகமொத்தம் இருபத்தேழு என்பதாகும். (36/2)

வித்தைக்கு யோகினீ ராசி ரூபங்கள் கூறப்படுகின்றன.

**हृल्लेखाभिस्तिसृभिस्तदन्यकूटैश्च योगिनी योगात् ।**
**राशीभूताऽप्येषा तिसृणां पूर्वाक्षरैरैक्यात् ॥ ३७ ॥**

(தா - ம்) ஹ்ருல்லேகைகள் மூன்று, இவற்றிற்கு அந்நியமான கூடங்கள் மூன்று, ஆக ஆறு ஆதலின் யோகினீ

ரூபம் பொருந்தும். மூன்று ஹ்ரீங்காரங்களையும், ஹ்ரீங்காரங்களுக்கு முன்னுள்ள மூன்று ल காரங்களோடு சேர்த்துக் கணக்கிடின் பன்னிரண்டு ஆகும். எங்ஙனமெனின், வித்தையிலுள்ள பதினைந்து அக்ஷரங்களில் மூன்று கூடங்களிலுள்ள மூன்று ल காரங்களையும், மூன்று ஹ்ருல்லேகைகளோடு ஐக்கியம் செய்யின் பன்னிரண்டு என்னும் சங்கியை ஏற்படுகின்றது.

| | | | |
|---|---|---|---|
| क ए ई | (ल ह्रीं) | 4 | 12 |
| ह स क ह | (ल ह्रीं) | 5 | |
| स क | (ल ह्रीं) | 3 | |

ஆதலின் வித்தைக்கு ராசித்வம் சித்திக்கின்றது. (37)

**देव्या रूपान्तरत्वेन विद्यायास्तदभेदतः ।**
**गणेशग्रहनक्षत्रयोगिनीराशिपीठता ॥ ३८ ॥**

(தா - ம்) வித்தை பராதேவதையின் ரூபாந்தரம்; ஆகையால் தேவியைப் போலவே வித்தையும், கணேச, கிருஹ, நக்ஷத்திர, யோகினீ, ராசி, பீடங்களின் ஸ்வரூபமேயாகும்.

குறிப்பு:—வித்தைக்குப் பீடத்வம் இங்கு தனிமையாய்க் கூறப்படவில்லை. தேவிக்குப் பீடத்வம் கூறியபடியே இதற்கும் பொருந்தும் என்று அறியவும். (38)

ஸ்ரீ சக்கிரத்திற்குக் கணேசாதி ரூபங்களைக் கூறுதல்

**रेखादलकोणगणैर्घटनाच्चक्रे गणेशत्वम् ।**
**त्रैलोक्यमोहनाद्यैर्नवभिश्चक्रैर्ग्रहत्वं च ॥ ३९ ॥**

(தா - ம்) रेखा = சதுரஸ்ரங்கள் 3, விருத்தங்கள் 3, தளங்கள் 24, கோணங்கள் 43, இருப்பதினால் சக்கிரத்திற்குக் கணேசத்வம் உள்ளது. த்ரைலோக்ய மோஹன சக்

கிரம் முதல் ஸர்வாநந்தமய சக்கிரம் வரையில் ஒன்பது சக்கிரங்கள், ஆதலின் ஸ்ரீ சக்கிரம் கிரஹ ஸ்வரூபம் ஆகும். (39)

वृत्तत्रयधरणीत्रयमन्वश्राणां विभज्य गणनेन ।
सप्तभिरितरैश्चक्रैश्चक्रे नक्षत्ररूपत्वम् ॥ ४० ॥

(தா - ம்) ஸ்ரீ சக்கிரத்தில் விருத்தங்கள் 3, பூபுரங்கள் 3, சதுர்த்தசாரகோணங்கள் 14, இதர சக்கிரங்கள் (ஷோடசதளம், அஷ்டதளம், பஹிர்த்தசாரம், அந்தர்த்தசாரம், அஷ்டகோணம், த்ரிகோணம், பிந்து) ஏழு, ஆக இருபத்தேழு உள்ளனவாதலின் அது நக்ஷத்திர ரூபமாகும். (40)

स्थितिसंहृतिचक्रे द्वे पद्मे द्वे वृत्तभूगृह च द्वे ।
एवं षड्भिर्योगाच्छ्रीचक्रं योगिनीरूपम् ॥ ४१ ॥

(தா - ம்) பிந்து, த்ரிகோணம், அஷ்டகோணம் இம்மூன்று சக்கிரங்களும் ஸம்ஹாரசக்கிரமென்றும், அந்தர்த்தசாரம், பஹிர்த்தசாரம், சதுர்த்தசகோணம் இம்மூன்று சக்கிரங்களும் ஸ்திதிசக்கிரமென்றும், மற்ற அஷ்டதள பத்மம், பதினாறு தள பத்மம், பூபுரம் இம்மூன்று சக்கிரங்களும் ஸிருஷ்டிசக்கிர மென்றும் யோகினீ ஹ்ருதயம் சக்கிர ஸங்கேதத்தில் ஸ்பஷ்டமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இவற்றில் ஸம்ஹார சக்கிரத்தில் ஒன்று, ஸ்திதி சக்கிரத்தில் ஒன்று, இரண்டு பத்மங்களில் இரண்டு, முவ்வலயத்தில் ஒன்று, பூபுரத்தில் ஒன்று, ஆக ஆறிலும் ஆறு யோகினிகளைப் பொருத்துதல் வேண்டும். இங்ஙனம் பொருத்துதலால் ஸ்ரீ சக்கிரம் யோகினீ ரூபமாகும். (41)

पञ्चचतुःशक्त्यनला बिन्दुर्वृत्तं च भूबिम्बम् ।
एवं द्वादशसंख्यैर्घटनाच्चक्रस्य राशित्वम् ॥ ४२ ॥

(தா - ம்) ஸ்ரீ சக்கிரத்தில் சக்தி சக்கிரங்கள் அதாவது தனக்கு அபிமுகமாயுள்ள அக்ரகோணங்களையுடைய (கீழ் நோக்கிய) முக்கோணங்கள் 5, சிவசக்கிரங்கள் அதாவது மேல் நோக்கிய அக்ரங்களையுடைய அக்னி சக்கிரமென்னும் முக்கோணங்கள் 4, பிந்து 1, விருத்தம் 1, பூபுரம் 1 ஆக பன்னிரண்டுள்ளன. ஆதலின் அதற்கு ராசித்வம் சித்திக்கின்றது. (42)

**चक्रं विद्यात्त्वैरेव जननात्तदभेदवत् ।**
**देव्या रूपान्तरत्वाच्च तेन युक्तोक्तरूपता ॥ ४३ ॥**

(தா - ம்) ஸ்ரீ சக்கிரம் பஞ்சதசீவித்தியாக்ஷரங்களிலிருந்து பிறந்ததனாலும், பரதேவதையின் ரூபாந்தரமாகி மந்த்ரத்தோடு அபேதமாயிருத்தலினாலும் சக்கிரத்திற்கும் பரதேவதா ஸ்வரூபமுடைமை யுக்தமேயாகும். (43)

**यावन्मातृकमुदितान्येकसमेतानि पञ्चाशत् ।**
**पीठानि पुनर्गणितान्योजापूकानि चत्वारि ॥ ४४ ॥**

(தா - ம்) மாத்ருகாக்ஷரங்களைப் போலவே பீடங்களும் ஐம்பத்தொன்றேயாம். இவையன்றி ஒட்டியாண, ஜாலந்தர, பூர்ணகிரி, காமரூபம் என்னும் நான்கு பீடங்களும் உண்டு. (44)

**गणपग्रहभादीनां शशिनिधितारर्तुसूर्यसंख्यानाम् ।**
**मेलनतः पीठानि ज्ञेयान्येतेषु पञ्चपञ्चाशत् ॥ ४५ ॥**

(தா - ம்) கணேசன் 1, கிரஹங்கள் 9, நக்ஷத்திரங்கள் 27, யோகினிகள் 6, ராசிகள் 12, ஆகமொத்தம் 55. இவைகளே 51 மாத்ருகா பீடங்களும் 4 ஒட்டியாணதி பீடங்களுமா மென்றறியவும். (45)

(அ - கை) சக்கிரராஜம் மந்த்ரத்தின் அக்ஷரங்களால் பிறந்தது என்று இரண்டு சுலோகங்களால் கூறப்படுகின்றது.

कत्रितयादीकाराद्बिन्दुर्जातस्तदग्रिमे चक्रे ।
ह्रल्लेखाभिस्तत्परचक्रत्रितयं हकाराभ्याम् ॥ ४६ ॥
एकारेण च तत्परचक्रे जाते सकाराभ्याम् ।
चतुरश्राणि लकारैरेवं विद्याक्षरेण चक्रजनिः ॥ ४७ ॥

(தா - ம்) ஸ்ரீ சக்கிரத்திலுள்ள பிந்துவானது ஈ காரத்தினும் மூன்று க காரங்களாலும், திரிகோணவஸு கோணங்கள் இரண்டும் மூன்று ஹ்ரீ காரங்களாலும், அந்தர்த்தஸார, பஹிர்த்தஸார, சதுர்த்தஸாரங்கள் ஆகிய மூன்றும் இரண்டு ह காரங்களாலும் ए காரத்தினும், அஷ்டதள ஷோடசதள பத்மங்கள் இரண்டும் இரண்டு स காரங்களினும், சதுரஸ்ரமாகிய பூபுரம் மூன்று ल காரங்களினும் பிறந்தன. ஆதலின், வித்தியாக்ஷரங்கள் பதினைந்தினும் ஸ்ரீ சக்கிரத்தின் உற்பத்தியை அறிக.

வித்தியாக்ஷரங்களுக்கும் சக்கிரத்திற்கும், ஐக்கியம் தந்த்ர பேதத்தினல் பலவகைப்படும். வித்தையில் ஒன்பது அக்ஷரங்களே யுள்ளன. இவற்றின் ஸமஷ்டியே மேருமந்த்ரம் எனப்படும்.

| | | | |
|---|---|---|---|
| (1) | लकार | प्रकृतिकम् | चतुरश्रम् |
| (2) | सकार | — — | षोडशदलम् |
| (3) | हकार | — — | अष्टपत्रम् |
| (4) | ईकार | — — | मन्वश्रम् |
| (5) | एकार | — — | बहिर्दशारम् |
| (6) | रेफ | — — | अंतर्दशारम् |
| (7) | ककार | — — | अष्टकोणम् |

| | | | |
|---|---|---|---|
| (8) | नाद | प्रकृतिकम् | त्रिकोणम् |
| (9) | बिंदुभिन्नम् | — — | बिंदु |

இதற்குப் பிரமாணம். ஞானார்ணவம் 10 வது படலம், 40 வது ஶ்லோகம் முதல் 48 வது ஶ்லோகம் வரையில்,

लकारः पृथिवीबीजं तेनभूबिम्बमुच्यते ।
सकारश्चन्द्रमा भद्रे कलाषोडशकात्मकः ॥
तस्मात्षोडशपत्रं तु हकारः शिव उच्यते ।
अष्टमूर्तिः सदा भद्रे तस्माद्वसुदलं भवेत् ॥
ईकारस्तु महामाया भुवनानि चतुर्दश ।
पालयंती परा तस्माच्छक्रकोणं भवेत्प्रिये ॥
शक्तिरेकादशस्थाने स्थित्वा सूते जगत्रयम् ।
विश्वयोनिरिति ख्याता सा विष्णुर्दशरूपकम् ॥
रकारात्परमेशानि चक्रं व्याप्य विजृम्भते ।
दशकोणकरी यस्माद्रकारो ज्योतिरव्ययः ॥
कलादशान्वितो वह्निः दशकोणप्रकारकः ।
ककारान्मदनो देवि शिवश्चाष्टस्वरूपकः ॥
योनिवश्यं तदा चक्रे वसुयोन्यंकितं भवेत् ।
अर्धमात्रा गुणान्सूते नादरूपा यतस्ततः ॥
त्रिकोणरूपा योनिस्तु बिन्दुना बैन्दवं भवेत् ।
कामेश्वरस्वरूपं तु विश्वाकारस्वरूपकम् ॥
श्रीचक्रं तु वरारोहे श्रीविद्यावर्णसंभवम् ।
तत्र प्राङ्मुख आसीनश्चक्रराजं समालिखेत् ॥ என்று கூறப்பட்டிருப்பதை அறியவும். (46, 47)

**एतत्त्रितयाभिन्नः स्वगुरुस्तदभेदभावनादार्ढ्यात् ।**
**तेन गणेशादिमयस्तद्दयया च स्वयं तथारूपः ॥ ४८ ॥**

(தா - ம்) மந்த்ரம், தேவதை, சக்கிரம் என்னும் இம் மூன்றிற்கும் திடமான அபேத த்யானபலத்தினால் தனது

குருவும், மேற்கூறிய மூன்றினோடும் பேதமில்லாதவராயும், கணேச, கிரஹ, நக்ஷத்திர, யோகினீ, ராசி, பீடங்களின் ஸ்வரூபராயும் ஆவர். அத்தகைய ஸ்வரூப நிரூபண காரணராயுள்ள சற்குருவின் கிருபையால், தானும் (ஸாதகனும்) அத்தகைய ஸ்வரூப முடையவனே யாவன். (48)

इत्थं माता विद्या चक्रं स्वगुरुः स्वयं चेति ।
पञ्चानामपि भेदाभावो मन्त्रस्य कौलिकार्थोऽयम् ॥ ४९ ॥

(தா - ம்) இங்ஙனம், பரதேவதைக்கும், வித்தைக்கும், ஸ்ரீ சக்கிரத்திற்கும், தனது குருவுக்கும், தனக்கும் எள்ளளவும் பேதமில்லை யென்று கூறுவதே மந்த்ரத்தின் கௌளிகார்த்தமாம். (49)

८. रहस्यार्थ निरूपणम् ।

ரஹஸ்யார்த்தம்

द्वादशषोडशदशभिस्तपनशशिदहनकलाभिराकीर्णैः ।
पञ्चाशद्भिर्वर्णैरभिन्नदेहा कुलीनकुण्डलिनी ॥ ५० ॥
बिसतन्वी तडिदाभा मूलाधारस्थपद्मशृङ्गाटात् ।
भित्त्वा मूलह्रदाज्ञागतवह्निरवीन्दुमण्डलत्रितयम् ॥ ५१ ॥

(தா - ம்) ஸூர்ய கலைகளாகிற தபினீ முதலிய 12 கலைகளும் க காரம் முதல் அநுலோமமாய் (கிரமமாய்) 12 எழுத்துக்களோடும், भ காரம் முதல் விலோமமாய் (தலைகீழாய்) 12 எழுத்துக்களோடும், சந்திரகலைகளாகிற அம்ருதாதி 16 கலைகளும் அ காராதி 16 அச்சுக்க (உயிர்க)ளோடும், அக்னிகலைகளாகிற தூம்ரார்ச்சி முதலிய 10 கலைகள் य காராதி 10 அக்ஷரங்களோடும் கூடியிருக்கின்றன. இங்ஙனம் ஐம்பது அக்ஷரங்களோடும் ஐக்கிய முடையது குலகுண்டலினி யெனப்படும்.

அக்குண்டலினிசக்தி திரிகோணத்தின் மேல்பாகத்தில் மூன்றரைச் சுற்று வளைவுடையவளாய் அதோமுகமாய் இருப்பாள். அவள், யோக மரியாதையை அறிந்த யோகிகளால், ஊர்த்துவமுகமாய் எழுப்பப்படுகின்றாள். அக்குண்டலினிசக்தி தாமரைத்தண்டிற்குள் விளங்கும் மெல்லிய நூலைப்போல் அதிஸூக்ஷ்மமாய் மின்னல்கொடி போல் பிரகாசித்துக்கொண்டு மூலாதாரபத்மத்திலிருந்து புறப்பட்டு மூலாதார, அநாஹத, ஆக்ஞா சக்கிரங்களிலுள்ள அக்னி, சூரிய, சந்திரமண்டலங்களைப் பேதிக்கின்றனள். (50, 51)

व्योमनि चिच्छशिमण्डलमध्ये त्वकुलेन संगम्य ।
उभयाङ्गसङ्गजन्यं प्रवाहयन्ती सुधापूरम् ॥ ५२ ॥

(தா - ம்) மூலாதாரத்திலிருந்து புறப்பட்ட குண்டலினீசக்தியானது, பரமாகாசத்தில் ஞானசந்திர மண்டலத்தில் அதோமுக ஸஹஸ்ரதள கமல மத்தியிலுள்ள அகுல குண்டலினியோடு கலந்துகொண்டு குல, அகுல குண்டலினிகளின் சம்பந்தத்தினால் பெருகும் அம்ருததாரையைப் பிரவகிக்கச் செய்து டாகினி முதலிய யோகினீ மண்டலங்களை நனைக்கின்றனள். பரமாகாசமென்பது லலாடத்திற்குமேல், கபாலத்தின் ஊர்த்துவ பாகத்தின் இறுதியில், இரண்டங்குலத்திற்குமேல் உள்ள துவாதசாந்தமென்றும் பிரதேசமாகும். இவ்விஷயம் "द्वादशान्तं ललाटोर्ध्वं कपालोर्ध्वावसानकम् । द्व्यङ्गुलोर्ध्वं शिरोदेशं परं व्योम प्रकीर्तितम् ॥" என்னும் பிரமாணத்தால் அறிக. (52)

स्वयमपि तत्पानवशान्मत्ता भूत्वा पुनश्च तेनैव ।
मार्गेण परावृत्य स्वस्मिन् स्थाने सुखं स्वपिति ॥ ५३ ॥

(தா - ம்) தானும், அந்த அம்ருத பானஞ் செய்த காரணத்தினால், குண்டலினீசக்தியானவள், மநோன்மத்தையாய் மீண்டும் அந்த ஸுஷும்நா நாடி யார்க்கமாகவே கீழே இறங்கித் தனது (ஸ்வ) ஸ்தானத்தை (மூலாதாரத்தை) யடைந்து சுகமாய் நித்திரை செய்கின்றனள். இவ் விஷயம் யோகிகளது அநுபவம். சாஸ்திரத்தைப் பரோக்ஷமாய்த் தெரிந்துகொண்டு அநுபவம் (அபரோக்ஷ ஞானம்) இல்லாதவர்கள் குரு முகமாய் விசாரணை செய்தே அறியத் தக்கது. (53)

**साक्षाद्विद्यैवैषा नततो भिन्ना जगन्माता ।**
**अस्याः स्वाभिन्नत्वं श्रीविद्याया रहस्यार्थः ॥ ५४ ॥**

(தா - ம்) இக் குண்டலினீ சக்தியும் ஸ்ரீ வித்தியாஸ்வரூபமே. வித்தைக்கும், குண்டலினீ சக்திக்கும் பேதமே இல்லை. ஜகன்மாதாவான பரதேவதைக்கும், ஸ்ரீ வித்தை, குண்டலினீக்களுக்கும், பேதமில்லை. குண்டலினீ, பரதேவதை, ஸ்ரீ வித்தை, இவைகள், தனக்கு அபேதமா யிருக்கின்றனர் என்றறிவதே ஸ்ரீ வித்தையின் ரஹஸ்யார்த்தமாகும். (54)

९. महातत्त्वार्थ निरूपणम्

மஹா தத்வார்த்தம்

**वागिन्द्रियैरगम्ये तत्त्वातीते महत्तरेऽणुतरे ।**
**व्योम्नोऽप्युपरि स्थितिमति विश्वाभिन्ने चिदानन्दे ॥ ५५ ॥**
**ब्रह्मणि परे नियोज्यः स्वात्मा तदभेदसंप्राप्त्यै ।**
**एष महातत्त्वार्थः श्रीविद्यायाः शिवेनोक्तः ॥ ५६ ॥**

(தா - ம்) வாக்குகளாலும் இந்திரியங்களாலும் அறிவதற்குக் கூடாததாய், முப்பத்தாறு தத்வங்களுக்கும்

அதீதமாய், அதிஸூக்ஷ்மமாய், மிகப் பெரிதாய், ஆகாசத்தைக் காட்டிலும் பரமாய், பிரபஞ்சத்தைவிட வேறாகாததாயுள்ள சிதாநந்த பிரஹ்மத்தோடு, தனக்கு ஐக்கியத்தைச் சம்பாதிப்பதன் பொருட்டு உபாஸிக்கத் தக்க பரதேவதையே ஸ்ரீ வித்தையின் மஹா தத்வார்த்த மென்று பரமேஸ்வரனால் கூறப்பட்டது. (55-56)

१०. नामार्थ शब्दरूपार्थ निरूपणम्

நாமார்த்தம் சப்தரூபார்த்தம்

**तत्तद्वर्णार्थेयं तत्तद्वर्णस्वरूपेयम् ।**
**इति तु श्रीविद्याया नामार्थः शब्दरूपार्थः ॥ ५७ ॥**

(தா - ம்) வித்தையிலுள்ள அந்த அந்த அக்ஷரங்களுக்கு அர்த்த ரூபமாய்ப் பரதேவதையே விளங்குகிறாள் என்பது நாமார்த்தமாம். நாமார்த்தம் மூன்று வகை. 58 வர்ணங்களுடைய வித்தையாமென்பது ஒன்று; 37 வர்ணங்களுடையதென்பது இரண்டாவது; 15 வர்ணங்களுடையதென்பது மூன்றாவது.

அந்த அந்த வர்ணங்களின் சப்தங்களால் க்ஷகாரம் முதலிய 58 அல்லது 37 அல்லது 15 வர்ணங்களும் கிரகிக்கப்படுகின்றன. அந்த சப்தங்களின் அர்த்த ரூபமாயிருக்குந் தன்மை பரதேவதைக் குண்டு. இது தான் சப்த ரூபார்த்தமாகும்.

குறிப்பு:—மேற்கூறிய விஷயம் முதலம்சம் 14-ம் ஸ்லோகத்திலும், இரண்டாவதாம்சம் 27-ம் ஸ்லோகத்திலும் காண்க. (57)

११. नामैकदेशार्थ निरूपणम्

நாமைகதேசார்த்தம்

**कल्याण्येकाक्षर्यीशित्री चापि ललिता च ।**
**इत्थं नामत्रिशतीवाच्योऽर्थस्तत्तदक्षरस्यापि ॥ ५८ ॥**
**नामैकदेशमात्रे नामग्रहणस्य लोकसिद्धत्वात् ।**
**नामोपस्थितिगम्यः प्रोक्तो नामैकदेशार्थः ॥ ५९ ॥**

(தா - ம்) கல்யாணீ, ஏகாக்ஷரீ, ஈசித்ரீ, லலிதா என்று அந்த அந்த அக்ஷரங்களுக்கு வாச்யார்த்தம் த்ரிசதியில் கூறப்படுகின்றது. த்ரிசதி யென்பது வித்தையிலுள்ள பதி னைந்து அக்ஷரங்களில் ஒவ்வொன்றுக்கும் இருபது 'இருபது நாமங்கள் வீதம் முன்னூறாக ஏற்பட்டிருக்கின்றது. இந்த நாமங்கள் மந்த்ராக்ஷரங்களின் அர்த்தங்களைத் தெரிவிப்ப தற்காக ஏற்பட்டனவாகும். பரதேவதையின் பூர்த்தியான நாமம் ஸ்ரீ பஞ்சதசீ வித்தையாகும். கல்யாணீ, ஏகாக்ஷரீ, ஈசித்ரீ, லலிதா என்னும் நாமங்கள் ஸம்பூர்ணமான நாமமா கும் பஞ்சதசீயின் ஏகதேச (ஒருபாக) மான ஒரு எழுத்தை ஆதியாகவுடைய நாமமாதலால், கல்யாணீ முதலிய நாமங் கள் நாமைகதேசமாம். பீமஸேனனுக்கு பீமனென்னும் பத மும், ஸத்யபாமைக்கு ஸத்யை யென்னும் பதமும், நாமத் தின் ஏகதேசங்களாமென்பது உலகத்தில் மிகப் பிரஸித்த மாம். ஆதலால் कल्याणी, एकाक्षरी, ईशित्री, ललिता, ह्रीं, हादिविद्या, सर्वेशी, कामेशी, हंसगती, लतापूज्या, ह्रींकारिणी, समरसा, काव्यलोला, लब्धसुखा, ह्रींकारपरसौख्यदा, என்னும் நாமங்களின் அர்த்தமாய் விளங் கும் பரதேவதை மேற்படி வித்தையின் நாமைகதேசார்த்த மாகும் என்று அறிக.

த்ரிசதியில் ஒவ்வொரு பீஜாக்ஷரத்தின் முதல் நாமமா னது நாமார்த்தமாகவோ அல்லது சப்தரூபார்த்தமாகவோ

இருக்கும். ककाररूपा, एकाररूपा, முதலியவை நாமார்த்தங்களாகும். ककारार्था, हकारार्था, लकाराख्या, முதலியன சப்தரூபார்த்தங்களாகும்.

तिथिमितबिन्दुगणोत्तरगजरसगिरिदस्त्ररामसंख्याकाः ।
अर्था भवन्ति योगान्नाम्नो नामैकदेशस्य ॥ ६० ॥

(தா - ம்) நாமத்திற்கும் நாமத்தோடு ஏகதேசத்திற்கும் உள்ள சம்பந்தத்தினால் பதினைந்து பிந்துக்களை இறுதியிலுடைய 8,6,7,2,3, சங்கியைகளை யுடைய அர்த்தங்கள் ஏற்படுகின்றன. நாமார்த்தம், சப்தரூபார்த்தம், நாமைகதேசார்த்தம் என்னும் இம்மூன்றில் மூன்றுவதான நாமைகதேசார்த்தத்தில் நாமத்தில் கொஞ்ச பாகம் அதாவது ஏகதேசத்திலுள்ளதான ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் 19 விதங்களான அர்த்தங்கள் கூறப்படுவதனால் 327680000,0000, 0000,000 அர்த்த பேதங்கள் ஏற்படுகின்றன.

மேற்காட்டிய ஸங்கியையானது இருபதை இருபதால் பதினைந்து தடவை பெருக்கினால் ஏற்படுகின்றது. $20^{15}$ = 3276800,000,000,00,00,000.

குறிப்பு:— गज = 8, रस = 6, गिरि = 7, दस्त्र = 2, राम = 3. "अङ्कानांवामतोगतिः" எண்களெல்லாம் வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்தை நோக்கிச் செல்வன வென்பது நியாயமாதலின் 8,6,7,2,3 என்பதை 32768 என்று அறிந்து அவ்வெண்ணின் இறுதியில் பதினைந்து சுழிகள் சேர்க்கவும்.

இங்ஙனம் சேர்த்த எண்ணானது 327 பரார்த்தங்கள் 6 மத்யங்கள் 8 அந்தியங்களாகும்.

ஸ்தானங்களின் பெயர்கள் லீலாவதியில் கீழ்வருமாறு கூறப்பட்டிருக்கின்றன.

ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், லக்ஷம், பத்து லக்ஷம், கோடி, அர்ப்புதம், அப்தம், க(ख)ர்வம், நிக (ख)ர்வம், மஹா பத்மம், சங்கம், ஜலதி, அந்தியம், மத்யம், பரார்த்தம், என்று கிரமமாய் ஸ்தானங்களின் பெயர்களாம். (60)

१२. शाक्तार्थ निरूपणम्

சாக்தார்த்தம்

(அ - கை) சாக்தார்த்தம் இரண்டு வகை. ஒன்று அவயவார்த்தம்; மற்றொன்று சக்திஸமூஹார்த்தம். அவயவார்த்தமெனின் பரதேவதையின் அவயவங்களை வர்ணித்தலாம்.

1. அவயவார்த்தம் கூறப்படுகின்றது.

**वाक्कामशक्तिकूटैरवयवशो विग्रहो मातुः ।**
**प्रतिपाद्योऽत्राकण्ठादामध्यादाचपादाग्रात् ॥ ६१ ॥**

(தா - ம்) அவயவார்த்தத்தில் சிரஸு முதல் கண்டபரியந்தமும், கண்டம் முதல் இடுப்பு வரையிலும், இடுப்பு முதல் பாதம் வரையிலும் உள்ள அவயவ வடிவ சரீரமானது முறையே வாக்பவ, காமராஜ, சக்தி கூடங்களாகும். ஆதலின், வித்தையானது பரதேவதையின் அங்க ரூபமாய் இருக்கின்றது. இங்ஙனம் கூறுவது சாக்தார்த்தத்தின் அவயவார்த்தமென்னும் விபாகமாகும். இதற்கு श्रीमद्वाग्भवकूटैकस्वरूपमुखपङ्कजा । कण्ठाधःकटिपर्यन्तमध्यकूटस्वरूपिणी ॥ शक्तिकूटैकतापन्नकट्यधोभागधारिणी । என்னும் ஸஹஸ்ரநாம வசனம் பிரமாணமாம். (61)

2. சக்திஸம்பூஹார்த்தம் கூறப்படுகின்றது.

**वेधोभारत्यौ माधवलक्ष्म्यौ रुद्रपार्वत्यौ ।**
**रेफान्तवर्णषट्कस्यार्थान्क्रमशो विजानीयात् ॥ ६२ ॥**

(தா - ம்) பஞ்சதசீ மஹா வித்தையில் ஒவ்வொரு கூடத்திலும் ஹ்ருல்லேகையிலுள்ள ரேபம் (ரகாரம்) வரையிலுள்ள ஆறு எழுத்துக்களுக்கும் முறையே பிரமன், ஸரஸ்வதி, விஷ்ணு, லக்ஷ்மி, ருத்ரன், பார்வதி என்பவர்கள் அர்த்தமாவர். (62)

**ता एताः सकला अपि कामकला एव न ततोऽन्याः ।**
**सामानाधिकरण्यादीकारेणायमर्थोऽस्य ॥ ६३ ॥**

(தா - ம்) வாணீபிரஹ்மாதிகளைக் குறிக்கும் ரேபாந்தமாகிய ஆறு வர்ணங்களோடு காமகலா ரூபமாகும் ஈகாரமானது ஸமாந அதிகரணத்தில் (ஒரு நிலைக்களத்ததாய்) மந்த்ரத்தில் கூறப்பட்டிருப்பதால், வாணீ முதலிய அறுவரும் காமகலா ரூபர்களே யன்றி வேற்றுமை யுடையவர்கள் அல்லர். (63)

**अयमेव कूटयोरपि परयोरर्थः परं तु तार्तीये ।**
**द्वैतीयीकद्वैतीयीकहकारः सकारतः पूर्वः ॥ ६४ ॥**

**अन्वयितव्योऽक्षरशः शक्तेः शाक्तैर्विभाव्यत्वात् ।**
**वामेच्छादिक शक्तिमयत्वोक्तेरेष शाक्तार्थः ॥ ६५ ॥**

(தா - ம்) இங்ஙனமே மற்றைய இரண்டு கூடங்களிலும் அர்த்தம் செய்தல் வேண்டும். ஆயினும் இரண்டாவது கூடத்தில் உள்ள இரண்டாவது " ह " காரம் மூன்றாவது கூடத்திலுள்ள 'स' காரத்திற்கு முன்னர் இருப்பதாய் அக்ஷரக்கிரமத்தில் அன்வயம் செய்தல் வேண்டும். இதனால் மூன்று

கூடங்களும் ஸமான வர்ணங்களை யுடையவனவாகின்றன. வாணீபிரஹ்மாதிகளைக் கூறும் இந்த ஆறு அக்ஷரங்களே வாமேச்சாதி சக்திரூபங்களாதலினால், மந்த்ரத்திற்கு இங்ஙனம் அர்த்தம் கூறுவது சக்திஸமூஹார்த்தமாகும். (64-65)

१३. सामरस्यार्थ निरूपणम्

ஸாமரஸ்யார்த்தம்

**कहयोर्लसयोरर्थौ शिवशक्ती शुद्धयोरचोः शक्तिः ।**
**उभयोः समरसभावो हृल्लेखायाः परं ब्रह्म ॥ ६६ ॥**

क कார ह காரங்களுக்குச் சிவனும், ल கார स காரங்களுக்குச் சக்தியும் அர்த்தமாகும்; கேவல உயிர்களாகிற ई, ए க்களுக்கு சக்தியே அர்த்தமாம். ह्रीं காரத்திற்குச் சிவசக்திகளின் ஸாமரஸ்யமே அர்த்தமாகும். சிவசக்தி ஸாமரஸ்யரூப ஹ்ருல்லேகையே பரப்பிரஹ்ம வாசகமாம். कत्रयं हृद्वयं चैव शैवोभाग: प्रकीर्तित: । शक्त्यक्षराणि शेषाणि ह्रींकार उभयात्मक: ॥ என்னும் த்ரிசதி ஸ்தோத்திரத்தின் ஸ்லோகம் இதற்குப் பிரமாணமாம். (66)

**ब्रह्मैव शिवः शक्तिश्चेति प्रत्येककूटार्थः ।**
**शिवशक्तिसामरस्याद्विद्याया एष सामरस्यार्थः ॥ ६७ ॥**

(தா - ம்) சிவசக்திகளின் ஸாமரஸ்யரூப பிரஹ்மமாயுள்ள ஹ்ருல்லேகையானது ஒவ்வொரு கூடத்தின் இறுதியிலும் சேர்க்கப்பட்டிருக்குங் காரணத்தினால், சிவசக்திகளே பிரஹ்மமென்பது ஒவ்வொரு கூடத்தின் பொருளாம். சிவசக்திகளின் ஸாமரஸ்யத்தினாலேயே வித்தைக்கும் இந்த ஸாமரஸ்யார்த்தம் ஏற்பட்டிருக்கின்றது.

இதன் விளக்கமாவது:—எங்ஙனம், மன்மத பீஜமாகிற க்லீ என்பதில், க - சிவம், ல - சக்தி, ஈ - ஸாமரஸ்யமாகவும், பாரப்ராஸாதபீஜமாகிற ஹ்ஸௌ: என்பதில், ஹ - சிவம், ஸ - சக்தி, ஔ: - ஸாமரஸ்யமாகவும், கூறப்பட்டிருக்கின்றதோ அங்ஙனமே, முதல் கூடத்தில் க - சிவம், ஏ - சக்தி, ஹ்ரீ - சிவசக்திகளின் ஸாமரஸ்யம், இரண்டாவது கூடத்தில் ஹ - சிவம், ஸ - சக்தி, ஹ்ரீ - ஸாமரஸ்யம், மூன்றாவது கூடத்தில் க - சிவம், ல - சக்தி, ஹ்ரீ - ஸாமரஸ்யம் ஆகும்.

ஹ்ரீ காரத்தில், ஹ காரம், ரேபம் (ர காரம்), ஈ காரம், பிந்து இவன்னும் நான்கு அவயவங்கள் உள்ளன. இவை முறையே பிரகாசம், க்ராஸம் (விழுங்கிவிடுதல்), ஸாமரஸ்யம், தாதாத்மியம் என்னும் நான்கு விதமான அர்த்தங்களைத் தெரிவிப்பனவாகும். ஆதலின் ஹ்ரீ காரம் பரப்பிரஹ்மமேயாகும் என்பது இங்கு அறியத்தக்கது. (67)

१४. समस्तार्थ निरूपणम्

ஸமஸ்தார்த்தம்.

**कन दीप्ताविति धातोः प्रकाशकत्वं ककारार्थः ।**
**अध्ययनार्थकतेङः स्यादेकारस्तदीयकरणार्थः ॥ ६८ ॥**

(தா - ம்) "கன" என்னும் தாதுவிற் (பகுதிக்)குப் பிரகாசமென்பது பொருள். இதனால் க காரத்திற்குப் பிரகாசமென்பது அர்த்தமாம். ஏ என்னும் அக்ஷரத்திற்கு பிரகாசிப்பிக்கச் செய்தலென்பது பொருளாம். (68)

**वर्णद्वयमेलनतः प्रकाशिका बुद्धिरित्यर्थः ।**
**ईव्याप्ताविति धातोस्तस्या व्याप्तिस्तृतीयवर्णार्थः ॥ ६९ ॥**

(தா - ம்) க, ஏ என்னும் இரண்டு அக்ஷரங்களால் பிரகாசிப்பிக்கச் செய்யும் புத்தி என்றர்த்தமாகின்றது. ஈ என்

ஹும் தாதுவிற்கு வியாபித்தல் என்பது பொருளாதலினால், பிரகாசகமாகும் புத்தியை வியாபிக்கச் செய்தலென்பது ஈ காரத்தின் அர்த்தமாகும். (69)

तस्य लहर्याधिक्यं तन्निर्माणं मकारार्थः ।
हन हिंसायामिति हं शौर्य प्रत्यर्थिहननकरणत्वात् ॥ ७० ॥

(தா - ம்) அத்தகைய புத்தியை அதிகமாக வியாபிக்கச் செய்தல் लहरीम् என்பதன் அர்த்தமாம். लहरीम् என்பது लहरीम् என்று ஆனது அ காரலோபத்தினால் என்றறியவும். हन என்னும் தாதுவிற்கு ஹிம்ஸை செய்தல் என்பது பொருளாம். ஆதலின் ह காரத்திற்குக் காமம், க்ரோதம் முதலிய ஆந்தர சத்துருக்களின் நாசத்திற்குக் காரணமாகும் பராக்கிரமம் என்பது பொருளாகும். (70)

सं भोगसाधनं धनमुपभोगार्थात्स्यतेः सुनोतेर्वा ।
कमु कान्ताविति धातोरिच्छाविषयोऽङ्गनादिः कम् ॥ ७१ ॥

(தா - ம்) விசேஷ போகங்களுக்குச் சாதனமான தனம் என்பது "सो" என்னும் தாதுவினாலாவது, "सु" என்பதனாலாவது பிறந்த स காரத்திற்குப் பொருளாம். "कमु" என்னும் தாதுவிற்கு இச்சையென்பது அர்த்தமாம். ஆதலின் "क" என்னும் வர்ணத்திற்கு இச்சையிற் சிறந்த விஷயமாகிய ஸ்திரீ முதலியன அர்த்தமாம். (71)

एषां गमनं प्रापणमोहाङ्गत्यर्थधातुजन्यं हम् ।
तस्यातिशयो लहरी तत्र श्लिष्टः सवर्णदीर्घेण ॥ ७२ ॥
ईकारस्तस्यार्थः कीर्तिः सर्वासु दिक्षु दीप्तत्वात् ।
ई दीप्ताविति धातोर्निर्मितिरनयोर्मकारार्थः ॥ ७३ ॥

(தா - ம்) பராக்கிரமம், தனம், ஸ்திரீ முதலியவற்றை அடைவிப்பதே (கத்யர்த்தமாகவுடைய) ह காரத்தின் அர்த்த

மாம். அவற்றை விசேஷமாய்க் கொடுப்பது "लहरी" என்னும் மூன்று அக்ஷரங்களின் ஸமஷ்டியர்த்தமாம். ஈ காரத்தில் ஸவர்ண தீர்க்கத்தினால் இரண்டு ஈ காரங்கள் கலந்திருக்கின்றன. அவற்றுள் ஒரு ஈ காரத்திற்குக் கீர்த்தியும், மற்றொரு ஈ காரத்திற்கு வியாப்தியும், म காரத்திற்கு இவற்றை வியாபிக்கச் செய்தலும் பொருளாம். (72, 73)

वाग्भवकूटस्यार्थः सूक्ष्ममतिव्यापनाधिक्यम् ।
शौर्यधनस्त्रीयशसामाधिक्यं कामराजार्थः ॥ ७४ ॥

(தா - ம்) ஸூக்ஷ்ம புத்தியை அதிகமாய் வியாபிக்கச் செய்தல் வாக்பவ கூடத்தின் பொருளாகும். பராக்கிரமம், தனம், ஸ்திரீ, கீர்த்தி முதலியவற்றின் ஆதிக்கியம் காமராஜ கூடத்தின் பொருளாம். (74)

एते सम्यक्कलयति सकला हरतेर्हकारः स्यात् ।
निखिलजगत्संहर्त्रीत्यर्थस्तस्यापि वर्णास्य ॥ ७५ ॥

(தா - ம்) இவ்விரண்டு கூடங்களின் அர்த்தத்தை நன்றாய் உண்டாக்குதல் "सकल" சப்தத்திற்கு அர்த்தமாம்; "ह" என்னும் தாதுவிற்கு ஹரித்தல் என்பது பொருளாதலின் ஸமஸ்த உலகங்களையும் ஸம்ஹரிப்பதென்பது ह காரத்தின் பொருளாகும். (75)

ईकारः प्रश्लिष्टः सृष्टिस्थितिरूपदीप्तिकर्त्र्यर्थः ।
यद्वा हृदि खे दहरे प्रकाशते तेन माता ह्रीः ॥ ७६ ॥

(தா - ம்.) எஞ்சிய ஈ காரத்திற்கு சிருஷ்டிஸ்திதி ரூபமான காந்தியைச் செய்தல் பொருளாம்; அல்லது ஹ்ருதயாகாசத்தில் பிரகாசிக்குங் காரணத்தால் பரதேவதை ह्रीः என்று கூறப்படுகின்றாள். (76)

सकलान्तेन पदेन ह्रीकारे कर्मधारयः कार्यः ।
तस्य विशेष्यो मः स्यान्नादार्थं संविदर्थो वा ॥ ७७ ॥

(தா - ம்) "सकल" சப்தமானது இரண்டாவது மூன்ருவது கூடங்களை ஒன்று சேர்க்கின்றதாகும். सम्यक् कलयतीति सकल; हरति इति हः ई दीप्तौ इति धातोः என்ருல் சிருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரம் முதலிய பஞ்சகிருத்தியங்களையும் செய்யும் பரதேவதை யென்பது ஹ்ரீ காரத்தின் பொருள் என்று முன்னமே கூறப்பட்டிருக்கின்றது. ह्रीश्च मश्च इति कर्मधारयः. ஹ்ரீ என்னும் பதத்திற்கு அந்தத்திலுள்ளது म. இந்த விசேஷ்யமாகும் म காரத்திற்கு நாதம் அல்லது ஞானம் என்பது அர்த்தமாம். ஆதலின் புத்தி, சௌர்யம், தனம், ஸ்திரீ, கீர்த்தி என்பனவற்றை விசேஷமாய்க் கொடுக்கத்தக்கதும், ஸமஸ்தமான ஜகத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாராதிகளைச் செய்யத்தக்கதும், ஹ்ருதயாகாசத்திற் பிரகாசிப்பதும், நாதஸ்வரூபமானதும், ஞானஸ்வரூபமானதுமான பிரஹ்மம் என்பது ஸ்ரீ பஞ்சதசீ மந்த்ரத்தின் திரண்ட பொருளாம். (77)

धातोर्बह्वर्थत्वाद्बहुलग्रहणात्पृषोदरादित्वात् ।
आकृतिगणपाठेन स्वेच्छानुगुणादुणादिकल्पनतः ॥ ७८ ॥
छन्दसि सर्वविधीनां वैकल्पिकतावशादमुष्य मनोः ।
सिद्धेः कथितेऽर्थेऽस्मिन्वैयाकरणानुशासनानुमतिः ॥ ७९ ॥

(தா - ம்) தாதுகளுக்குப் பலபொருள்கள் உளவாதலினலும், அநேக சப்தங்களைக் கிரகிப்பதனலும், ப்ருஷோதராதி ஆக்ருதி கணத்தில் படிப்பதனலும், தனது இச்சைக்கு அநுகுணமாய் "उणादि" ப்ரத்யயங்களைச் செய்வதனலும், சந்தஸ்ஸில் ஸமஸ்த சாஸ்திரங்களுக்கும் விகல்பங்கள் இருத்தலினலும், மந்த்ரத்திற்கு இந்த அர்த்தத்தைக் கூறுதல் வியாகரண சாஸ்த்ர சம்மதமாயிருக்கின்றது. (78, 79)

बहुतरसमासयोगात्समस्तपुरुषार्थसाधनत्वोक्तेः ।
संक्षेपात्सारोक्तेः श्रीविद्यायाः समस्तार्थः ॥ ८० ॥

(தா - ம்) அநேக ஸமாஸங்களின் சம்பந்தத்தினல் அநேக புருஷார்த்தங்களின் ஸாதனமாய்க் கூறப்படுவதனுலும், ஸம்க்ஷேபமான சப்தங்களால் ஸாரமான அர்த்தத்தை கூறுவதனுலும், ஸ்ரீவித்தைக்கு இது ஸமஸ்தார்த்தமாம்.

(குறிப்பு) 68-வது முதல் 80-வது ஶ்லோகம் வரையில் பிரதிபாதிக்கப்பட்ட ஸமஸ்தார்த்தமானது மிகவும் கடினமானது. இலேசாய் அறிதற்குக்கூடாதது. வடமொழி இலக்கணத்திலுள்ள தாதுக்கள் - ஸந்திகள் - ஸமாஸங்கள் - விசேஷண விசேஷ்யங்கள் - பிரத்யயங்கள் முதலியவற்றின் விளக்கமான ஞானம் இருப்பவர்க்கே மேற்கூறிய அர்த்தம் சுலபமானதன்று எனின், வடமொழி இலக்கண ஞானமின்றியவர்களுக்குக் கடினமானதென்று சொல்லவும் வேண்டுமா? (80)

(விசேஷக் குறிப்பு) மேற்கூறிய ஒருவகை ஸமஸ்தார்த்தமே யன்றி வேறுவகையான ஸமஸ்தார்த்தமும் ஒன்று உளது. அது இந்நூலில் கூறப்படாவிடினும், மஹான்களால் உத்தமாதிகாரிகளின் பொருட்டு அருளிச்செய்த உபதேசரூப அர்த்தமாதலின் இங்கே கூறப்படுகின்றது.

க - ए, பிரஹ்ம ஸம்பந்தமான மஹாமாயையே! ह्रीं - त्वद्रूपां वृत्तिं = உன்னுடைய மாயாரூப வ்ருத்தியை அதாவது பேத தர்சனத்திற்குக் காரணமான நாமரூப நாட்டத்தை, ईल - निवर्तय = நிவர்த்தி செய்வாயாக. இதுமுதல் கூடத்தின் அர்த்தமாகும்.

ह ल - हलस्य = व्यापकस्य, क - कस्य = ब्रह्मणः, ह्रीं = वृत्तिं, हस = प्रापय. அஸ்தி, பாதி, ப்ரியவடிவ அகண்டாகார

பிரஹ்மவ்ருத்தியை அடைவிப்பாயாக. இது இரண்டாவது கூடத்தின் அர்த்தமாம். सकलह्रीं = (பின்) அவ்வகண்டாகார வ்ருத்தியையும் (ईल - निवर्तय = நிவர்த்திப்பாயாக). ईल என்பது வருவிக்கப்பட்டது. இது மூன்றாவது கூடத்தின் பொருளாம்.

திரண்டபொருள் :—ஹே பிரஹ்மாவின்ன மஹாமாயையே ! பேதகாரணமான நாமரூப நாட்டமாகிய த்வைதப்ப்ராந்தியை நிவர்த்தி செய்வதன் மூலமாய் அஸ்தி, பாதி, ப்ரியரூப அதிஷ்டானப் பிரஹ்ம நாட்டத்தை யுண்டுபண்ணி (அகண்டாகார வ்ருத்தியைப் பவிக்கச்செய்து) பின், அவ்வகண்டாகார வ்ருத்தியையும் நீக்கி, ஸஹஜஸ்வரூப நிலையை (மோக்ஷத்தை) யடைவிப்பாயாக. இங்கே அடைவிப்பதென்பது உபசாரமாம். ஏனெனின், அபயரூப மோக்ஷநிலை நித்தியஸித்தமாய் இருக்கின்றதாதலின். இது ப்ரகாராந்தரமான ஸமஸ்தார்த்தமாம்.

## १५. सगुणार्थ निरूपणम्

## ஸகுணார்த்தம்

**को विधिरेकारो हरिरकार ईशः स्तवार्थमीडपदम् ।**
**द्विस्वरमध्यगतस्य डकारस्य लकार आदेशः ॥ ८१ ॥**

(தா - ம்) क காரம் பிரஹ்மனையும், ए காரம் விஷ்ணுவையும் अ காரம் சிவனையும் கூறும். அந்த अ காரம் ए காரத்தில் பூர்வரூபத்தினால் கலந்திருக்கின்றது. ईड என்பதற்கு ஸ்தோத்திரம் என்பது அர்த்தம். இரண்டு அச்செழுத்துக்களாகிய ई காரத்திற்கும், ( ड காரத்தின் மேலுள்ள) अ காரத்திற்கும் இடையில் உள்ள ड காரத்திற்கு, ल காரம் ஆதேசமாகும். अग्निमीडे என்பது अग्निमीळे என்றானது போல. (81)

तेनर्ग्वेदात्मत्वं सूचितमाद्यस्य कूटस्य ।
क्रमशोऽग्रिमकूटयुगे तेन यजुः सामता सिद्धा ॥ ८२ ॥

(தா - ம்) ஆதலில் முதல் கூடத்திற்கு ருக்வேதரூபம், ஸூசிப்பிக்கப்பட்டது; கிரமமாய், எஞ்சிய இரண்டு கூடங்களுக்கும் யஜுர்வேத, ஸாமவேத ரூபங்கள் சித்திக்கின்றன. (82)

ह्रीमिति नाम विशेष्यं नपुंसकं ब्रह्मलक्षकत्वेन ।
विधिहरिगिरिशैरीड्यं ब्रह्मेति प्रथमकूटार्थः ॥ ८३ ॥

(தா - ம்) ஹ்ரீம் என்னும் விசேஷ்யரூபமாயுள்ள நாமமானது பிரஹ்மத்தைக் கூறுவதனால், நபும்ஸகலிங்கமாகும். பிரஹ்மவிஷ்ணுசிவன்களால் ஸ்தோத்தரிக்கப்படும் பிரஹ்மம் என்பது முதல்கூடத்தின் பொருளாகும். (83)

हसकं तु हसद्वदनं मतं ककारस्य वदनवाचित्वात् ।
यद्वा हस आनन्दः कः सूर्यो हस्तु चन्द्रः स्यात् ॥ ८४ ॥
एतौ लौ नयने यस्य तत्तु कहलं रवीन्दुनेत्रमिति ।
तेन प्रकाशकत्वाच्चिद्रूपत्वं च निगदितं भवति ॥ ८५ ॥

(தா - ம்) "हस" என்னும் பதத்திற்குப் பிரகாசித்தல் என்பதும், "क" என்னும் பதத்திற்கு முகம் என்பதும் பொருளாம். ஆதலின் "हसक" என்பதற்குப் பிரகாசம் பொருந்திய முகம் என்னும் அர்த்தம் ஏற்படுகின்றது. அல்லது "हस" என்பது ஆநந்தமாம். क - ஸூரியன், ह - சந்திரன், ल - கண்கள், ह स क ह ल - ஸூரிய சந்திரர்களைக் கண்களாகவுடைத்தாய், ஆநந்தரூபமாய் விளங்கும் "ह्रीं" பரதேவதை யென்னும் அர்த்தமும் பொருந்துகின்றது. (84, 85)

विधिहरिगिरिशेडचले हेतू एते हसत्वकहलत्वे ।
तेनायमितानन्दं चिद्ब्रह्मेति द्वितीयकूटार्थः ॥ ८६ ॥

(தா - ம்) இரண்டாவது கூடத்தின் அர்த்தத்தினால் பரமேஶ்வரி, ஸூரிய சந்திரர்களைக் கண்களாக வுடையவளாய், ஆநந்தரூபியாயும், பிரஹ்மவிஷ்ணுசிவன்களால் போற்றப்படுபவளாயும் உள்ள சித்ரூப பிரஹ்மமென்று சித்திக்கின்றது. (86)

सकलकलाभिः सहितं सकलं ब्रह्म तु तृतीयकूटार्थः ।
इत्थं गुणगणकथनाद्विद्याया एष सगुणार्थः ॥ ८७ ॥

(தா - ம்) மூன்றாவது கூடத்திலுள்ள "सकल" என்பது, பரமேஶ்வரியானவள் ஸமஸ்தமான கலைகளோடுங் கூடிய பரப்பிரஹ்மமாமென்று கூறுகின்றது. இங்ஙனம் குண சமூகத்தைக் கூறுவதனால், வித்தைக்கு இது ஸகுணார்த்தமாகும். (87)

## १६. महावाक्यार्थ निरूपणम्

## மஹாவாக்யார்த்தம்

विधिहरिशिववचना अपि ककार एकारकोऽकारः ।
सृष्टिस्थितिभङ्गात्मकतत्तज्जनकत्वलाक्षणिकाः ॥ ८८ ॥

ईश्वरवाचीकारो वक्ति डकारः सदाशिवं ताभ्याम् ।
लक्षणया तत्र तिरोधानानुग्रहककृसता गदिता ॥ ८९ ॥

(தா - ம்) பிரஹ்ம விஷ்ணு ருத்ரர்களைக் கூறும் क காரம், ए காரம், अ காரங்கள், லக்ஷணையால், அவரவர்களின் காரியங்களான ஸிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களையும் கூறுகின்றன. ஈஶ்வரஸதாசிவர்களைக் குறிக்கும் ई காரம், ड காரங்கள் லக்ஷணையினால் திரோதான அநுக்கிரகங்களையும் கூறுகின்றன. ड காரத்திற்கு ल காரம் ஆதேசமென்பது முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. "यतो वा इमानि भूतानि जायन्ते" இச்

யாதி ஶ்ருதிகள் பிரஹ்மத்திற்குத் தடஸ்த லக்ஷணத்தைக் கூறுகின்றன. (88, 89)

हस आनन्दः सत्यं कं हमनन्तं च लं ज्ञानम् ।
इत्थं ब्रह्म तटस्थस्वरूपलक्षणयुगेन निर्णीय ॥ ९० ॥

तदभेदं जीवगणे वक्ति तृतीयेन कूटेन ।
जाग्रत्स्वप्नसुषुप्त्याख्यकलात्रितयेन साहित्यात् ॥ ९१ ॥

सकलपदं जीवपरं ब्रह्मपरं शक्तिबीजं स्यात् ।
सामानाधिकरण्यात्तल्लक्षितशुद्धयोरभेदार्थः ॥ ९२ ॥

(தா - ம்) हस என்னும் பதம் ஆநந்தம் என்னும் அர்த்தமுடையது. क ஸத்தியம். क காரத்திற்கு ஸத்தியம் என்னும் அர்த்தம் எங்ஙனம் ஏற்பட்டதெனின், "सखाकश्चबुधो प्रोक्तः" என்னும் நிகண்டின்படி क காரம், ஸகி அல்லது ஆப்தத்தன்மையைக் குறிக்கின்றது. ஆப்தத்தன்மை யதார்த்தத்தைச் சொல்லுதல் என்னும் இலக்ஷணத்தை யுடையதாதலால் क காரம் சத்தியமென்னும் பொருளுடையதாகும். ह = ஆநந்தம், * ल = ஞானம். இங்ஙனம் முதல் கூடத்தினால் பிரஹ்மத்தின் தடஸ்தலக்ஷணமும், இரண்டாவது கூடத்தினால் ஸ்வரூப லக்ஷணமுங் கூறப்பட்டது. ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தியென்னும் மூன்று கலைகளோடு கூடியிருத்தலால் सकल என்னும் சப்தத்திற்கு ஜீவர்களும், ह्रीं காரத்திற்குப் பிரஹ்மமும், அர்த்தங்களாகும். (90, 91, 92)

(அ - கை) ஜீவர்களுக்குப் பிரஹ்மத்தோடைக்கியம் மூன்றாவது கூடத்தினால் கூறப்படுகின்றது.

---

* प्रत्यक्षज्ञानजनकलोचनवाचिलकारः; பிரத்யக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணும் கண் என்பது லகாரத்தின் பொருள்.

अत्यल्पमिदं कथितं यत्सर्वं खल्विदं ब्रह्म ।
इत्येवं बोधयितुं सकलपदं वा तृतीयकूटगतम् ॥ ९३ ॥

(தா - ம்) 'सर्वंखल्विदंब्रह्म' என்னும் ஶ்ருதியால் கூறப்படும் அர்த்தத்தைக் குறைந்த அக்ஷரங்களோடு கூடிய மூன்றாவது கூடமாகிய 'सकलह्रीं' என்பதனல் கூறப்பட்டிருக்கின்றதென்று பொருள்படுத்தத்தக்கும். (93)

एवमवान्तरवाक्यैर्जीवब्रह्मस्वरूपमभिधाय ।
तदभेदो वर्णित इत्येष महापूर्ववाक्यार्थः ॥ ९४ ॥

(தா - ம்) இங்ஙனம் ஜீவ பிரஹ்மங்களுக்கு எள்ளளவும் பேதமில்லையென்று கூறுவதனல், இது மஹாவாக்யார்த்தமாகும். "तत्वमसि" என்னும் மஹாவாக்கியத்தில் தத்பதத்திற்கு காரணேஶ்வரனும், த்வம்பதத்திற்கு ஜீவனும், வாச்சியார்த்தங்களாம். இவ்விரண்டிற்கும் ஸாமாநாதிகரண்யத் தன்மையால் அபேதமே கூறப்படுகின்றது. இவ்வபேதம் வாச்சியார்த்தத்தினல் ஸம்பவிக்காமற் போயினும், லக்ஷ்யார்த்தத்தினல் ஸம்பவிக்காமற் போகாது. அவற்றில், தத்பதத்திற்கு, சிருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதானம், அநுக்கிரகங்களென்னும் பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் ஈஶ்வரனே வாச்சியார்த்தமாகும்; கிருத்தியங்களுக்கதீதமான நிர்க்குணப் பிரஹ்மம் லக்ஷ்யார்த்தமாகும். இங்ஙனமே த்வம்பதத்திற்கும், ஜாக்கிர, ஸ்வப்ந, ஸுஷுப்தி, துரீய, துரீயாதீதங்களென்னும் ஐந்து அவஸ்தைகளோடு கூடிய ஜீவன் வாச்சியார்த்தமாகும். அவஸ்தா பஞ்சகங்களுக்கு அதீதமான நிர்க்குண கூடஸ்தஸ்வரூப ஆத்மாவே லக்ஷ்யார்த்தமாகும். "यतोवाइमानि भूतानिजायंते" என்னும் ஶ்ருதி ஜகத்தின் சிருஷ்டி கர்த்தாவைக் கூறுகின்றது. "सत्यं ज्ञानमनंतं ब्रह्म, आनंदोब्रह्म" என்னும் ஶ்ருதி நிர்க்குணப் பிரஹ்மத்தைக் கூறுகின்றது.

" तद्यथाऽस्मिन्नाकाशे श्येनोवा, सुपर्णोवा, विपरिपत्य, श्रान्तः, संहृत्य पक्षौ, संलयायैव, ध्रियते, एवमेवायं पुरुष एतस्मा अन्ताय, धावति ॥ तद्यथामहामत्स्य:" ॥ ஆகாயத்தில் கருடபக்ஷியானது பறந்து பறந்து அயர்ந்து சிறகுகளை மூடிக்கொண்டு தனது இருப்பிடமாகிய விருக்ஷத்தை எங்ஙனம் அடையுமோ, அங்ஙனமே ஜீவனும், விஷயானுபவங்களில் அயர்ந்து தனது நிவாஸஸ்தானத்தை யடைகிறான் என்னும் அவாந்தர வாக்கியங்களால் ஜீவனது வாச்சியார்த்தமும், " न दृष्टेर्द्रष्टारंपश्ये: " எல்லாவற்றையும் பார்க்கும் கண்கள் ஆத்மாவைப்பார்க்கா - இத்தகைய அவாந்தர வாக்கியங்களால் லக்ஷ்யார்த்தமும் நிர்ணயிக்கப்பட்டிருப்பதனால் மஹாவாக்கியங்களில் லக்ஷ்யார்த்தங்களுக்கு அபேதம் கூறப்பட்டது.

(குறிப்பு) ஸ்ருதிகளில் ஈஸ்வரனுக்கு மூன்று கிருத்தியங்களும் ஜீவனுக்கு மூன்று அவஸ்தைகளுமே கூறப்பட்டிருக்கின்றன. ஆயினும் தந்த்ரங்க (ஆகமங்க) ளில் ஈஸ்வர ஜீவர்களுக்கு முறையே பஞ்சகிருத்தியங்களும் பஞ்சாவஸ்தைகளும் கூறப்பட்டுள்ளன. இது தேஜஸ், அப்பு, அன்னம் என்னும் த்ரிவ்ருத்கரணமே பஞ்சபூதாத்மக பஞ்சீகரணமானாற்போல வென்றறிக. மஹாவாக்கியார்த்த மென்பதற்கு எண்ணிறந்த பல அர்த்தங்கள் என்று பொருளாகின்றது. பல தந்த்ரங்களில் பல பல அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் ஈண்டு, உபலக்ஷணமாய்க் கொள்ளல் வேண்டுமென்று ஏற்படுகின்றது. " कूटत्रितययुक्तस्य सकलस्यमनोः पुनः । एतानिवाच्यरूपाणि कुलकौलमयानिच ॥ " என்னும் பிரமாணப்படி இந்நூலில் முதல் அம்சம் 33ம் ஸ்லோகத்தில் கூறப்பட்ட, புடம், தாமம், தத்வம், பீடம், அந்வயம், லிங்கம், மாத்ருகை முதலியவைகளில் நந்நான்காகக் கூறப்பட்டன வெல்லாம், மந்த்ரார்த்தங்களேயாமென்று அறிதல் அவசியம். இதில் 13 வித அர்த்தங்கள் ஏற்படுகின்றன. இவை யெல்

லாம் வாச்சியார்த்தங்களாகும்; இரண்டாவது அம்சத்தில் கூறப்பட்ட பதினைந்து வித அர்த்தங்களில், பாவார்த்தத்தில் நான்கு வகை, நாமார்த்தம் மூன்றுவகை, சாக்தார்த்தம் இரண்டு வகை, கௌளிகார்த்தம் மூன்றுவகை, மஹாவாக்யார்த்தம் இரண்டுவகை ஆக பதினொன்குவகை; பதினைந்து அர்த்தங்களில் மேலே கூறியதுபோக மீதியுள்ள அர்த்தங்கள் பத்து; ஆகக்கூடி, முப்பத்தேழு அர்த்தங்கள் இந்நூலிலேயே கூறப்பட்டுள்ளன. இங்ஙனமே இதர தந்த்ரங்களில் ஐம்பத்தெட்டு அர்த்தங்களும் கூறப்பட்டிருக்கும். பத்தாவதாகக் கூறப்பட்ட நாமைகதேச அர்த்தத்தில் 32768000000 000000000 அர்த்தங்களுண்டெனக் கூறப்பட்டுள்ளன. ஆதலின் பல சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த மஹான்களால் தான் அநேகவிதமான அர்த்தங்கள் கூறத்தகும்; கிரஹிக்கவும் கூடும்

இங்ஙனம் மூன்றுவது கூடத்திலுள்ள ஸகல என்னும் பதத்தினால் "கலைகளோடும் அவஸ்தைகளோடும் கூடியுள்ள ஜீவன்" என்று வாச்சியார்த்தம் கூறினும், லக்ஷ்யார்த்தம் கூறமுடியாததாதலின் குறைவு ஏற்படுகின்றது. இதற்காக, முதல் இரண்டு கூடங்களை ஆவிருத்தியினால் 'த்வ்' பதத்திற்கு வாச்சியார்த்த லக்ஷ்யார்த்தங்களென்று கூறத்தக்கதாயிருக்கின்றது. அல்லது தந்த்ரப்பிரதான மதநூலாகும் சாம்பவாநந்த கல்பலதையில் வாச்சியார்த்தங்களுக்குங்கூட அபேதம் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அதனால், முதல் கூடத்திற்கும் இரண்டாவது கூடத்திற்கும், முறையே, ஸிருஷ்டியாதி பஞ்சகர்த்ருத்துவம் முதலிய தர்மங்களோடு கூடிய ஈச்வரனும், ஜாக்கிராதி பஞ்சாவஸ்தை முதலிய தர்மங்களோடு கூடிய ஜீவனும் வாச்சியார்த்தங்களாம். இத்தகைய வாச்சியார்த்தரூப ஈச்வர ஜீவர்களுக்கும், பிரபஞ்சத்திற்கும் மூன்றுவது கூடத்தினால் அபேதம் கூறப்பட்டுள்ளது என்று

அறிதல் அவசியம். காதிமத சாஸ்திரமென்னும் ஸ்ரீ தந்த்ர ராஜத்தின் 35வது படலத்தில் 24-25-26 வது ஶ்லோகங்கள் * வியாகுலாக்ஷரங்களால் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றில் மூன்றாவது கூடத்தின் அர்த்தம் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது :—

அது வருமாறு:—

१. ललितायास्त्रिभिर्वर्णैः सकलार्थोऽभिधीयते ।
शेषेण देवीरूपेण तेन स्यादिदमीरितम् ॥

२. अशेषतो जगत्कृत्स्नं हृल्लेखात्सकमीरितम् ।
तस्याश्चार्थस्तु कथितः सर्वतन्त्रेषु गोपितः ॥

३. व्योम्ना प्रकाश्यमानत्वं ग्रस्यमानत्वमग्निना
तयोर्विमर्शईकारो विन्दुनातन्निभालनम् ॥

அதாவது பாதேவதையின் வித்தையில் மூன்றாவது கூடத்திலுள்ள "सकल" என்னும் மூன்று அக்ஷரங்கள், சாஸ்திரங்களில் கூறப்படும் எல்லாவிதமான அர்த்தங்களையும் குறிப்பிடுகின்றன; மூன்றாவது கூடத்தில் எஞ்சியுள்ள ह्रीं என்பது பரதேவதையின் ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகின்றது. எல்லாத் தந்த்ரங்களும், ரஹஸ்யமாய், ஸர்வ பிரபஞ்சமும் தேவீ ரூபந்தான் என்று கூறுகின்றன. ह्रीं என்னும் பீஜத்தில் ह् र् ई பிந்து என்னும் நான்கு அக்ஷரங்கள் உண்டு. ह् - ஸிருஷ்டி; र् - ஸம்ஹாரம்; ई - விமர்சம்; பிந்து - தாதாத்மியம். இங்கே ஸிருஷ்டியென்பது ப்ரகாசமாகும். ஸம்ஹாரமென்பது அத்தியாஸ

* வியாகுலாக்ஷர ஶ்லோகமென்றால் ஶ்லோகத்தில் ஒவ்வொரு பாதத்திலுள்ள எழுத்துக்களின் வரிசை மாறி இருப்பது. அக்ஷரங்கள் மாறியுள்ள பாதத்தில் 8-4-6-2-7-3-5-1- அக்ஷரங்களை ஒன்று சேர்க்கின் ஸரியான ஶ்லோகம் ஏற்படும் என்று அறியவும்.

மான மயக்கத்தை ஒழித்தலாம். பதார்த்தத்தின் விமர்சமே ஸாமரஸ்யமென்பதாகும். தாதாத்மியமென்பது தானே தானுயுள்ள ஆநந்த நிலை. இங்கே எவ்வளவு சொல்லக்கூடுமோ அவ்வளவும் சொல்லப்பட்டது. (94)

१७. शक्तिलक्षणान्यतरवोध्यार्थेष्वविवादोक्तिः

शक्त्या लक्षणाया वा ये येऽर्था दर्शिता मनोरस्य ।
तेषु न कोऽपि विवादः प्रत्यक्षेणैव सिद्धत्वात् ॥ ९५ ॥

(தா - ம்) வித்தைக்கு சக்திவிருத்தியினாலாவது, லக்ஷணாவிருத்தியினாலாவது எந்த எந்த அர்த்தங்கள் கூறப்பட்டிருக்கின்றனவோ அந்த அந்த அர்த்தங்களில், யாருக்கும், எவ்விதமான ஆக்ஷேபமும் இல்லை; ஏனெனின், அவைகள் பிரத்தியக்ஷமாய்ச் சித்தித்திருப்பதனால்; சக்தி விருத்தியும், சக்யஸம்பந்த ரூபமான லக்ஷணா விருத்தியும் வியாகரண சாஸ்திரப் பிரஸித்தமாயிருப்பதனால், அவை பிரத்தியக்ஷ ஸித்தமென்று கூறப்பட்டது. (95)

ये पुनरिह भावार्थादयः षडर्था मनोरुक्ताः ।
तेषु यदि शक्तिभक्ती न हि संभवतस्तदाऽपि का हानिः । ९६ ।

(தா - ம்.) இந்நூலில், பாவார்த்தம் முதலிய எந்த ஆறு அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளனவோ அவற்றில், சக்திவிருத்தி ரூபமானதும், லக்ஷணாவிருத்தி ரூபமானதும், வ்யங்கிய ரூபமானதுமான அர்த்தத் தன்மை எவ்வகையாலும் சம்பவிப்பதில்லை; ஆயினும் கூறப்பட்ட அர்த்தங்களுக்கு என்ன ஹானி? ஹானியே இல்லை; எங்ஙனமெனின், (96)

आस्तामन्या वृत्तिर्विलक्षणा तदुग्रहस्तु मनोः ।
शिववचनेन भविष्यति यद्वैषा शक्तिरेवास्तु ॥ ९७ ॥
एतस्मादयमर्थो बोद्धव्य इतीश्वरेच्छात्वात् ।

(தா - ம்) பஞ்சதசீவித்தைக்கு இந்நூலில் கூறப்பட்ட அர்த்தங்கள் மேலே கூறப்பட்ட சக்தி, லக்ஷணை, வ்யங்கியம் முதலியவைகளுக்கு விலக்ஷணமானது. அது எத்தன்மைத் தென்னின் "இதற்கு இந்த அர்த்தம் ஏற்படவேண்டு" மென்னும் பரமேஶ்வரனது இச்சையேயாகும். பரமேஶ்வரனது இச்சாரூபமான சக்தியே மேலே கூறப்பட்ட அர்த்தங்களுக்குப் பிரமாணமாம். (97, 97½)

प्रतिपदमर्थविशेषाज्ञानेऽप्यास्तामखण्डवाक्यस्य ॥ ९८ ॥
अर्थोऽप्यखण्डरूपो विशिष्टमतिरिक्तमिति हि सिद्धान्तः ।
आसेचनकव्याप्यादिपदवदास्तां पदत्वमपि ॥ ९९ ॥

(தா - ம்) ஒவ்வொரு பதத்திற்கும் இன்னது இன்னது அர்த்தம் என்று தெரியாமற் போனாலும், வாக்கியத்தின் அகண்டமான பொது தாத்பரியம் தெரிந்தால் போதுமானது. பிரதி பதார்த்தத்தைவிட அகண்டார்த்தம் வேறு என்பது ஸித்தாந்தமே. எங்கே எங்கே பிரதிபதார்த்தம் தெரியவில்லையோ, அங்கே அங்கே ஸம்பூர்ணமான வாக்கியமே பதமாக ஏற்படும்; आसेचनक व्याप्यादि பதங்களைப்போல். ஆதலின், பஞ்சதசீ மந்தரம்முழுவதும் ஒரே பதமாகக்கொள்ளலாம். (98, 99)

एकस्यानेकार्था दृष्टा हरिसैन्धवादिषु पदेषु ।
अन्यतमैकार्थगतौ प्रकरणतात्पर्ययोर्विशेषकता ॥ १०० ॥

(தா - ம்) ஹரி, ஸைந்தவம் முதலிய பதங்களுக்கு எங்ஙனம் அநேக அர்த்தங்கள் உள்ளனவோ, அங்ஙனமே, ஒவ்வொரு பதத்திற்கும் அநேக அர்த்தங்கள் இருக்கலாம். பல அர்த்தங்களில் ஒரு பதத்திற்கு ஒருவிதமான அர்த்தத்தைச் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவண்ணம் கொள்ளுதல் வேண்டும். (100)

**प्रकृते तु सर्वबोधस्येष्टत्वान्नो विशेषकाकाङ्क्षा ।**
**अथ वा सकलार्थेष्वपि शक्त्यैक्यं पुष्पवन्तपदवदिह ॥१०१॥**

(தா - ம்) ஆனால் இந்நாலிலோ வெனின், எல்லாவித அர்த்தங்களும் உடன்பாடேயாகும். விசேஷமாயுள்ள சந்தர்ப்ப ஞானம் வேண்டியதில்லை; அல்லது, இப்பஞ்சதசீ பிரதிபாத்யமான சக்தியானது எல்லாவித அர்த்தங்களையும் பெறுகின்றது. "புஷ்பவந்த" மென்னும் பதத்தைப் போல். (101)

**यत्र प्रतिपदमर्थस्तान्मत्यस्यास्तु वाक्यत्वम् ।**
**क्वचनावान्तरवाक्यं समासवाक्यं महावाक्यं ॥ १०२ ॥**

(தா - ம்) எங்கே ஒவ்வொருபதத்திற்கும் அர்த்தம் ஏற்பட்டுள்ளதோ, அங்கே மந்த்ரத்திற்கு வாக்கியத்தன்மை சித்திக்கின்றது; சில இடங்களில் அவாந்தரவாக்கியத்துவமும், சில இடங்களில் ஸமாஸவாக்கியத்துவமும், ஒரு இடத்தில் மஹாவாக்கியத்துவமும் சித்திக்கின்றன.

குறிப்பு:—காயத்ரீ அர்த்தம், நாமார்த்தம் இவைகளில் வாக்கியத்துவம் உள்ளது. ஸகுணார்த்தம், அவயவார்த்தம் முதலியவைகளில் அவாந்தரவாக்கியத்தன்மையுண்டு. ஸமஸ்தார்த்தத்தில் ஸமாஸவாக்கியத்துவமுளது. கடைசியாகக் கூறப்பட்ட அர்த்தம் ஒன்றே மஹாவாக்கியார்த்தமாகும் என்றறிக. (102)

**एकस्यानेकार्थे विनियोगादर्थबाहुल्यम् ।**
**वेदे बहुशः स्वीकृतमत्र त्वेकत्र विनियोगात् ॥ १०३ ॥**
**अखिलार्थबोधनियमो नियमादृष्टं प्रकल्पयति ।**
**सिद्धे प्रमाणदार्ढ्ये सकलं कल्प्यं हि तदविरोधाय ॥१०४॥**

(தா - ம்.) பதங்களுக்கு எப்படி அநேக விதமான அர்த்தங்கள் உள்ளனவோ, அப்படியே வாக்கியங்களுக்கும் அநேக விதமான அர்த்தங்கள் சந்தர்ப்பத்திற் கேற்பக் கூறப்பட்டுள்ளன. இவ்விஷயத்தை வேதமே அங்கீகரிக்கின்றது. ஆயினும், இந்த மந்த்ரமானது ஒரே சந்தர்ப்பத்தில் ஒரே வகையான அர்த்தத்தோடு கூடியுள்ளது. எனினும் எல்லாவிதமான அர்த்தங்களுக்கும் இது இடந்தரும். ஸகலவிதமான அர்த்தங்களையும் அத்ருஷ்டம் கல்பிக்கின்றது. பிரமாணத்தின் வலிமை ஸித்திக்குமாயின், அதற்கு அவிரோதிகளான ஸகலமும் ஏற்படும். இதில் யாதொரு ஆக்ஷேபணையுமில்லை. (103, 104)

(அ - கை.) ஸித்தியில் பிரமாணத்தின் வலிமையைத் திருஷ்டாந்தத்தின் மூலமாய்க் கூறுகின்றார்.

यागस्य स्वर्गं प्रति संसिद्धे हेतुहेतुमद्भावे ।
तदनुपपत्तिं निरसितुमलौकिकापूर्वमपि क्लृप्तम् ॥ १०५ ॥

(தா - ம்.) "ज्योतिष्टोमेन स्वर्गकामोयजेत" ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் ஜ்யோதிஷ்டோமத்தினால் தேவதைகளை யஜிக்கட்டும் என்னும் இந்த ச்ருதி, ஸ்வர்க்காநுபவத்திற்கு ஜன்யத்துவமும், ஜ்யோதிஷ்டோமத்திற்கு ஜனகத்துவமும் கூறுகின்றது. இங்ஙனம் கூறப்படும் ஜன்ய ஜனகபாவம் பொருந்தாது. ஏனெனின், யாகக்கிரியை நசித்தவுடனே ஸ்வர்க்காநுபவம் ஏற்படுவதில்லை; ஸ்வர்க்காநுபவம் உண்டாகும் வரையில் யாகக்கிரியை இருப்பதில்லை. இவை இரண்டும் வெவ்வேறு காலங்களில் இருப்பனவாகும். ஆதலின் யாகம், ஸ்வர்க்காநுபவம் இவைகளுக்கு ஜனக ஜன்யபாவத்தை நிர்வாஹம் செய்வதற்கு, அலௌகிகமான அபூர்வம் என்னும் ஒன்றை இதர தந்த்ரங்கள் கிரகிக்கின்றன. இதுபோல் பூர்வஜன்மங்களிற்

செய்த புண்ய விசேஷம் இருப்பின் அந்த புண்ய விசேஷ மொன்றே ஸ்ரீவித்தையின் பலவகையான அர்த்தங்களில் பிரமாணமாமென்பது ரஹஸ்யமாம். (105)

(அ - கை.) இந்நூலில் முன்னர் கூறப்பட்ட பதினைந்து விதமான அர்த்தங்கள் முதலியவற்றைச் சங்கிரகமாகக் கூறுகின்றார்.

विद्यावर्णयत्तोद्धारः कालस्तदुच्चारः ।
उत्पत्तिस्थानं तद्यत्नो रूपं स्थितिस्थानम् ॥ १०६ ॥
आकारः स्वं रूपं विभाव्यमर्थोऽन्तरङ्गाणि ।

(தா - ம்.) வித்தையின் வர்ணங்கள் 58 என்றும், உத்தாரம் "क्रोधीश : श्रीकंठारूढ:" என்னும் சுலோகத்தினாலும், காலம் 31 மாத்திரைகளுக்கு 3 லவம் குறைவு என்றும், உச்சாரணைகாலம் 29 மாத்திரைகளுக்கு ஒரு லவம் குறைவு என்றும் "इत्येवं वर्णानाम्" என்னும் ஸ்லோகங்களினாலும், உத்பத்தி ஸ்தானங்கள் "कंठेच कंठ तालुनि" என்னும் சுலோகத்தினாலும், யத்தினங்கள் பாஹ்யமென்றும் ஆந்தரமென்றும், ரூபம், ஸ்திதி, ஸ்தானம் முதலியவைகள் "प्रलयाग्नि निभम्" என்னும் சுலோகத்தினாலும், (வித்தையின்) ஸ்வரூபத்தை "व्यष्टिसमष्टि विभेदात्" என்பதனாலும், நன்றாய் பாவிக்கத்தக்க அவஸ்தா பஞ்சகம் சூன்யஷட்கம், விஷுவத்ஸப்தகங்களையும்—காயத்ரீ முதலிய பதினைந்து விதமாயுள்ள அர்த்தவிசேஷங்களையும் இந்நூல் கூறுகின்றது. இவை அந்தரங்கமாயுள்ள காரணத்தினால் உபாஸகர்களுக்கு மிகவும் அவசியமானவையாகும். (106, 106½)

ऋषयश्छन्दोदेवतविनियोगा बीजशक्तिकीलानि ॥ १०७ ॥

न्यासा ध्यानं नियमाः पूजादीनि तु बहिरङ्गाणि ।
बाह्यान्यङ्गानि पुनः प्रायो लोके प्रसिद्धकल्पानि ॥ १०८॥

(தா - ம்.) ஒரு மந்த்ரத்திற்கு ரிஷி, சந்தஸ், தேவதை, விநியோகம், பீஜம், சக்தி, கீலகம், ந்யாஸம், த்யானம், நியமங்கள், பூஜை, ஹோமம் முதலியவை பஹிரங்கங்களாகும். இத்தகைய பாஹ்ய அங்கங்கள் உலகத்தில் வெகுவாய்ப் பிரஸித்தியாய் இருக்கின்றன. ஆதலின், பஹிரங்கங்கள் இந்நூலில் கூறப்படவில்லை. (107, 108)

दुर्लभमान्तरमङ्गं प्रायोऽन्तर्मुखजनैस्तदादृत्यम् ।
तोषायैषा तेषामतः प्रदिष्टा रहस्यवरिवस्या ॥ १०९ ॥

(தா - ம்.) உலகத்தில் மிகவும் ரஹஸ்யமாகவும் துர்லபமாகவுமுள்ள மேற்கூறிய ஆந்தரமான அங்கங்கள், விஷயங்களில் வைராக்கியமேற்பட்டு அந்தர்முகப்பட்ட சித்த விருத்தியை யுடையவர்களால்தான் ஆதரிக்கப்படும். ஆதலின் அவர்களின் ஸந்தோஷத்தின் பொருட்டே ரஹஸ்யவரிவஸ்யை என்னும் இச்சிறந்த நூலானது உபதேசிக்கப்பட்டதாகும். (109)

एतामुत्सृज्य जडैः क्रियमाणा बाह्यडम्बरोपास्तिः ।
प्राणविहीनेव तनुर्विगलितसूत्रेव पुत्तलिका ॥ ११० ॥

(தா - ம்.) மேற்கூறிய அந்தரங்க ஸாதனங்களை முற்றும் நிவர்த்திசெய்து, மந்தபுத்தியுள்ள ஜடர்களால் செய்யப்படும் பாஹ்ய ஆடம்பரமான உபாஸ்தியானது பிராணனற்ற சரீரத்தைப்போலவும், சூத்திரமற்ற பொம்மை (பாவை)யைப்போலவும் இருக்கின்றது. உபயோகமற்றதென்பது கருத்து. (110)

बीजान्मूलं मूलात्त्वेवस्यान्तः स्थबाह्यविस्तारौ ।
यद्यप्यनयोः साम्यं प्राधान्यमथापि चान्तरङ्गस्य ॥ १११ ॥

(தா - ம்.) பீஜத்திலிருந்து வேருண்டாகி க்ஷேத்திரத்தின் உள்ளும் வெளியும் மரம் வியாபிக்கின்றது. ஆயினும் உள்ளேயுள்ள வேருக்கு நாசம் வருமேயாயின், வெளியேயுள்ள கிளை, இலை, புஷ்பம் முதலிய அங்கங்களோடுகூடிய விருக்ஷத்திற்கே நாசமேற்படுகின்றது. இது உலகப் பிரஸித்தமானது. இங்ஙனமே பீஜமாகிற காமகலையினால் மூலமந்த்ரம் ஏற்பட்டு சரீரமாகிற க்ஷேத்திரத்தில் உள்ளும் வெளியும் வியாபித்திருக்கின்றது. உள்ளேயுள்ளவை ஆந்தரமான அங்கங்கள். வெளியே உள்ளவை பாஹ்யமான அங்கங்கள். ஆந்தர அங்கங்களின் நாசத்தால் பாஹ்ய அங்கங்களோடுகூடிய சரீர நாசமே சித்திக்கின்றது. ஆதலின் ஆந்தரமான அங்கங்களுக்கு முக்கியத்தன்மையுண்டு. (111)

विद्यायाः गुरुकुलैकवेद्यत्वं

सद्गुरुकुलतः कृपया लब्धा कामानियं सूते ।
निजबुद्धिमात्रजन्या पापं कन्या यथा स्वीया ॥ ११२ ॥

(தா - ம்.) பெற்றோர்களின் இஷ்டத்தினால் மணந்த நற்குலக் கன்னியானவள் அறத்தையும், தன்னிஷ்டப்படி மணந்தவள் பாவத்தையும் தருதல்போல, ஒருவனுக்கு ஸற்குருவின் கிருபையால் அடையப்பட்ட இந்த (பிரஹ்ம) வித்தை, தர்மார்த்த காம மோக்ஷங்களை யளிக்கும்; தனது சொந்த புத்தியால் புத்தகங்களின் மூலமாய்க் கிரஹித்த வித்தையானது, கெடுதியை யுண்டுபண்ணுவதாகும். (112)

கிரந்தாந்த மங்களாசரணம்

अकथासनं हळत्तान्तरं समासाद्य मामकं ज्ञानम् ।
मामकमेवानन्दं मह्यं ददतो जयन्ति गुरुचरणाः ॥ ११३ ॥

(தா - ம்.) வாச்சியார்த்தத்திற்கு விஷயமாகாததும், நிச்சயமாய் லக்ஷணாவ்ருத்திக்கு உட்பட்டதுமான ஆத்ம ஞானத்தையும் ஆத்மாநந்தத்தையும் எனக்கருளிச்செய்த ஸ்ரீகுருநாதருடைய சரணங்கள் ஸர்வோத்க்ருஷ்டமாய் விளங்கட்டும்; அல்லது, ஸஹஸ்ராரத்தின் நடுவில் (கர்ணிகையில்) ஒருதிரிகோணமுண்டு. அதன் மூன்று ரேகைகளிலும், अ - முதல், क - முதல், थ - முதல், பதினாறு, பதினாறு, எழுத்துக்கள்விதம் 48-எழுத்துக்களும், மூலைகளில்-ह ळ क्ष என்னும் மூன்று அக்ஷரங்களுமுண்டு என்று தந்த்ரங்களில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இதன் மத்தியில் ஸற்குருநாதரின் சரணங்கள் தியானம் செய்யத்தக்கன. இத்தகைய ஆஸனத்தில் விளங்குபவர் என்றும் அர்த்தமாகலாம். (113)

गुरुचरणैकसहायो - भास्कररायो जगन्मातुः ।
वरिवस्यातिरहस्यं वीरनमस्यं प्रजग्रन्थ ॥ ११४ ॥

इति श्रीमत्पदवाक्यप्रमाणपारावारपारीणसर्वतन्त्रस्वतन्त्रश्रीनृसिंहानन्दनाथचरणारविन्दमिलिन्देन श्रीमद्गम्भीररायभारतीदीक्षितात्मजेन भास्कररायापरनाम्ना भासुरानन्दनाथेन प्रणीतं वरिवस्यारहस्यं संपूर्णम् ।

(தா - ம்.) பராஹந்தையாகும் போர்க்களத்தில், இதந்தையாகும் சத்துருக்களை, நாசம் செய்யத்தக்க ஆற்றலுள்ள வீரர்களால் போற்றத்தக்க ஜகன்மாதாவாகிய சித்சக்தியின் ஆந்தர உபாஸ்தியைக்கூறும் இந்தவரிவஸ்யா ரஹஸ்யமென்னும் சிறந்த நூலானது, தனது குருநாதருடைய சரண ஸஹாயமென்னும் ஒன்றிணையேய ஸ்ரீ பாஸ்கரராயரால் இயற்றப்பட்டதாகும்.

ஸ்ரீபதரிகாஸ்ரமம், ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகா சார்ய, ஸ்ரீகுஹாநந்தநாதரின் பாதஸேவகரான சிதாநந்த சுப்ரமண்ய அய்யர் அவர்களா லியற்றப்பட்ட ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்ய தீபிகை யென்னும் தமிழுரை முற்றுப் பெற்றது.

உரையாசிரியரின் பிரார்த்தனை.

गुणदोष विवेचन क्षमाः परकीयेषु गुणेष्वमत्सराः
शुकवागुपमं वचोममो भयभाषाऽनभिवेत्तुरंजसा ।
परदैवतसद्गुरोः कटाक्षितः परमश्रीललितार्थवेदिनः ।
सुजनाः प्रविलोक्य सादरं फलयंतु श्रममत्र मामकम् ॥

इति शिवम्

உரையாசிரியரின் குருஸ்தோத்ரம்

श्रीराघवेन्द्राय वसिष्ठगीतं श्रीपाण्डवेन्द्राय मुरारिगीतं ।
श्रीमच्छुकेन्द्राय विदेहगीतं नमामितद्देशिकलब्धबोधम् ॥ १ ॥

गुहास्यचित्प्रभाव्याप्तब्रह्मांडाखिल मंडलः ।
योविभाति सदातस्य पादुकाभ्यां नमोनमः ॥ २ ॥

हालास्यविधिविष्णवादिरूपधारिणमद्वयं ।
त्रिखंडात्मक गायत्री प्रतिपाद्यमहं भजे ॥ ३ ॥

नन्दिविद्यादि विद्यासु सूक्ष्मरूपतयास्थितं ।
गंधादि गुणहीनंतं सुन्दरं गुरुमाश्रये ॥ ४ ॥

दयापूर्णकटाक्षांबु प्रवाहहततापकं ।
प्रयाग क्षेत्रगं वन्दे सद्गुरुं ज्ञानकारणम् ॥ ५ ॥

नाथत्रयस्वरूपंतं नामरूपादिहीनकं ।
नादब्रह्माकृतिं वन्दे मन्त्रार्थभ्रांतिनाशकम् ॥ ६ ॥

**श्री**मातृरूपं भक्तानां श्रीशंवंद्यं शिवंकरं ।
श्रीवाणी गिरिजाबीजलक्ष्यं सच्चिन्मयं भजे ॥ ७ ॥

**पा**रंपर्यगताद्वैत ब्रह्मविद्याप्रबोधकं ।
सारं वेदादि विद्यानां वारं वारं भजेगुरुम् ॥ ८ ॥

**दु**:खदारिद्र्यरोगाधि व्याधि भ्रांतिहरंनृणां
दुर्वासनातिदूरंतं गुरुं सम्यगुपाश्रये ॥ ९ ॥

**कां**चिस्थकामकोट्याख्यपीठस्थं कांक्षितार्थदं ।
वांछापूर्त्यै नतोस्म्यद्य दहराकाशमध्यगम् ॥ १० ॥

**पू**जारहस्यतत्वज्ञं पूर्णाचल सुसंस्थितं ।
पुराणं विततं पुण्यं पूर्णं गुरुमुपास्महे ॥ ११ ॥

**ज**न्मादिदन्तैस्संदष्टं मांतु संसारभोगिना ।
ज्ञानामृतप्रदानेन मोचितः प्रणमामितम् ॥ १२ ॥

**या**गादि कर्म वैचित्र्य फलदातारमीश्वरं ।
योगासन समारूढं शिवयोगिनमाश्रये ॥ १३ ॥

**मि**थ्यावादि महाध्वांत भास्करं स्वप्रकाशकं ।
सत्यं सर्वगतंशांतं सद्गुरुं समुपाश्रये ॥ १४ ॥

**नम**स्ते करुणासिंधो नमस्ते भक्तवत्सल ।
नमस्ते सर्व हृत्पद्मवासिन् देशिकसत्तम ॥ १५ ॥

श्रीसद्गुरुचरणारविंदाभ्यां नमः ॥

परदेवतार्पणमस्तु ॥



# ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபை, சென்னை

## பிரசுரங்கள்

ஆசிரியர்: பிரஹ்மஸ்ரீ ந சுப்ரமண்ய அய்யர்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ நகரவிமர்சம் | 0 | 12 |
| | ஸ்ரீ லலிதாஸ்தவரத்தினம் (மூலமும் தமிழுரையும்) | | |
| 2. | ஸ்ரீ குருதத்வ விமர்சம் | 0 | 5 |
| 3. | ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யம் (மூலமும் தமிழ் விருத்தியுரையும்) | 1 | 0 |
| 4. | காமகலா விலாஸம் ,, | அச்சில் | |
| 5. | பிரத்யபிக்ஞா ஸூத்திரம் (வடமொழி, தமிழ் வியாக்யானங்களுடன்) | ,, | |
| 6. | த்ரிபுரோபநிஷத் (ஸ்ரீ ராமாநந்தருடைய வடமொழி வியாக்யானம்) | ,, | |
| 7. | ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய தத்வம் | ,, | |
| 8. | மநீஷா பஞ்சகம் | 0 | 5 |

மானேஜர்,

ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபை,

178, லாயிட்ஸ் ரோட், ராயப்பேட்டை, சென்னை.

# BOOKS BY THE SAME AUTHOR

## TAMIL

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | Srividya Saparya Vasana | ... | 3 | 0 |
| 2. | Subrahmanya Tatvam | ... | 1 | 8 |
| 3. | Kamakala Vilasa | ... | 1 | 8 |
| 4. | Varivasya Rahasyam | ... | 1 | 0 |
| 5. | Lalita Trisati Bhashyam | ... | 1 | 0 |
| 6. | Srinagara Vimarsam | ... | 0 | 12 |
| 7. | Maneesha Panchakam | ... | 0 | 10 |
| 8. | Gnanaprakasam—A Philosophic Drama | ... | 0 | 10 |
| 9. | Gurutatva Vimarsam | ... | 0 | 5 |
| 10. | Lalitopakhyana Vimarsam | ... | 0 | 4 |

## NAGARI

| | | | | |
|---|---|---|---|---|
| 11. | Srividya Saparya Paddhati | | | |
| | Single-page Edition, Calico-bound | ... | 3 | 8 |
| | Double-page ,, Stiff-board bound | ... | 2 | 0 |
| 12. | Srividya Nityahnika (Calico-bound) | ... | 3 | 0 |

## ENGLISH

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | Srividya Saparya Vasana | ... | 3 | 0 |

---

*Copies can be had of:—*

1. Sri Guhananda Mandaly,
   178, Lloyds Road, Royapettah, Madras.
2. Sri Balamanorama Press, Mylapore, Madras.
3. Sri Janardhana Printing Works Ltd., Kumbakonam.